# கம்ப்யூட்டர் யுக மருந்துகள்

...டாக்டர்களால் குணமாக்காத வியாதிகள் - [illegible]

...க்க முடியாத வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கு [illegible]

# இங்கிலாந்து மலர் மருந்துகள்

(கண்டுபிடித்து அறிமுகப்படுத்தியவர் [illegible]

MBBS MRCS படித்த இலண்டன் [illegible]

மற்றும்

# நவரத்தின உபயோக முறைகள்

நவரத்தின மகிமை

மணி, மந்திரம், ஔஷதம்

உ

श्री रामजयम् ।

# முன்னுரை

பக்கம் 13-22 வரை கொடுக்கப்பட்டுள்ள இரத்தினங்களை எம்மிடம் வாங்கி அணிந்து 3-6 மாதத்தில் பலன் கிடைக்கவில்லை யெனில், நீங்கள் செலுத்திய பணம் முழுவதும் திரும்ப பெறலாம். எந்த நகைக் கடைக்காரரும் உங்களுக்கு இந்த உத்திரவாதம் கொடுக்க மாட்டார்.

ஆகஸ்ட் 15, 2004 V. கிருஷ்ணமூர்த்தி


**"RAMAN HOUSE"**
**Old No. 21, குப்பையா செட்டி தெரு,**
**மேற்கு மாம்பலம் சங்கர மடம் அருகில்.**
**சென்னை - 17.**
**Phone : 24890370, 55393214**


முப்பத்தொன்பதாவது மறுபதிப்பு

**Rs.87=00**

SLP3D\DR_KRISH\TCB\COMP_BK1.PM5

# நோயாளி மீது அக்கறையுள்ள சரியான அல்லோபதி டாக்டரை தேர்ந்தெடுப்பது எப்படி?

நோயாளியின் இரத்த அழுத்தம் (blood pressure) பார்க்க, எல்லா டாக்டர்களும் sphygmomanometer எனப்படும் உபகரணம் (b.p. apparatus) வைத்திருப்பர். தொண்ணூறு சதவிகித டாக்டர்களிடம் Diamond என்ற இந்திய தயாரிப்புதான் இருக்கும். இந்த உபகரணம் ஐந்து வாங்கி வந்து நோயாளிக்கு இரத்த அழுத்தம் பார்த்தால் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வித அளவு காண்பிக்கும்.

ஆனால் இங்கிலாந்து தயாரிப்பான Accoson என்ற உபகரணம் மட்டுமே சரியாக இருக்கும். Accoson வைத்திருக்கும் டாக்டரிடம் நாம் நம்பிக்கையுடன் வைத்தியம் செய்து கொள்ளலாம்.

Diamond-make வைத்திருப்பவரை அக்கறை (duty-conscious) இல்லாதவர் என கூறிவிடலாம்.

முக்கியமாக போலிகளுக்கு Accoson பற்றி தெரியாது; வைத்திருக்க மாட்டார்கள்.

## கண்புரை (cataract) ஆபரேஷன் செய்து கொள்ளப்போகிறீர்களா?

சுமார் அறுபது வயதிற்கு மேல்தான் நிறைய பேர்களுக்கு காடராக்ட் வருகிறது. இந்த வயதில்தான் அநேகம் நபர்களுக்கு சொத்தைப்பற்கள் இருக்கும். கண் ஆபரேஷன் முடிந்த உடன் 'எங்கே' என காத்திருக்கும் சொத்தைப்பல்லில் உள்ள infection ஆபரேஷன் செய்த இடத்திற்கு பரவி கண் பார்வை போய்விடும்.

ஆகையால், கண் மட்டுமில்லாது, எந்த ஆபரேஷன் செய்து கொள்வதாக இருந்தாலும், (அதிலும் முக்கியமாக கண், தொண்டை, மூக்கு, தலையில்) ஆபரேஷன் செய்து கொள்வதற்கு முன்பும், தவிர இப்பகுதியில் புற்று நோய்க்கு கதிர்வீச்சு (radium treatment) வைத்தியம் செய்து கொள்வதற்கு முன்பாகவும் பல் டாக்டரிடம் (dentist) சென்று ஆபரேஷனுக்கு முன்பு முன்னெச்சரிக்கையாக பல் பரிசோதனைக்காக வந்திருப்பதாக சொன்னால், அவர் சீழ் பிடித்த சொத்தைப் பற்களை பிடுங்கி எடுத்த பின்பு கண் ஆபரேஷன் செய்து கொண்டால் பார்வையை இழக்க அதிக வாய்ப்பில்லை.

காடராக்ட் ஆபரேஷன் செய்த பின்பு பார்வை போன கேசுகளில் எல்லாம் நோயாளிகள் தனது அறியாமையினால் ஆபரேஷன் தோல்வி என தவறாக தீர்மானிக்கிறார்கள். ஆனால் இப்படி பார்வை போன கேசுகளில், நாம் சர்வே எடுத்து பார்த்ததில் 86 சதவிகிதத்திற்கு மேல் உண்மையான காரணம் நோயாளிக்கு சொத்தைப் பல்லில் உள்ள infection-தான். ஏனெனில் இவர்கள் ஆபரேஷனுக்கு முன்பு பல் டாக்டரிடம் செல்லவில்லை.

ஆகையால் காடராக்ட் ஆபரேஷனுக்கு கண் டாக்டரிடம் சென்றவுடன் அவர் உங்களை முதலில் பல் டாக்டரிடம் போய் வரச் சொல்லாமல் ஆபரேஷன் செய்தால்,

அது அவரது அறியாமை, அசிரத்தை, கவனக்குறைவு, நோயாளி பற்றிய அலட்சியம் ஆகியவற்றையே காண்பிக்கிறது.

அநேகமாக இவர் போலி டாக்டராக இருக்கலாம்.

கடந்த வருடம் தினசரி செய்தி. பெரம்பூர் இரயில்வே ஆசுபத்திரியில் இரண்டு வருடத்திற்கும் மேலாக ஒருவர் டாக்டராக (M.B.B.S. படிக்காமலேயே) வேலை செய்தது கண்டுபிடிக்கப்பட்டது.

வயிறு ஸ்கேன் (scan) செய்து கொள்ளப்போகிறீர்களா? ஸ்கேன் எடுக்கும் டாக்டர் (அல்லது அதற்கு எழுதிக்கொடுக்கும் டாக்டர்) உங்களை முதல் நாளும், அன்றும் கொழுப்பு, எண்ணெய், டால்டா, பருப்பு, ஆகிய உணவுப்பொருட்களைத் தவிர்க்க சொல்ல வேண்டும். ஏனெனில் கொழுப்பு பொருட்கள் சாப்பிட்டால் அந்த கொழுப்பு கல்லீரலைச்சுற்றி படிந்து, (Liver) கல்லீரல் பற்றி சரியாக ஸ்கேனில் தெரியாது. இந்த பத்திய உணவு (ஸ்கேன் எடுக்கும் முதல் நாளிலிருந்து) சொல்லாத டாக்டரை, போலி டாக்டர் என சந்தேகிக்க உங்களுக்கு உரிமை உண்டு.

ஸ்கேன் ரிப்போர்ட்டை முழுமையாக நம்ப முடியாது என்பதற்கு ஒரு உண்மை கேஸ்:

மந்தவெளி தேவநாதன் தெரு ஒய்.வி.கே. ஹாஸ்பிடல் உரிமையாளர் டாக்டர் வேதகுமாரி, M.B.B.S., D.G.O. அவர்கள் தனது கணவருக்கு (ஏதோ ஒரு வியாதிக்கு) மருந்து கொடுத்தார். அம்மருந்து சாப்பிட்ட சில நாட்கள்வரை சிறுநீர் மஞ்சளாக போகும். ஆனால் அவருக்கு சிறுநீர் தொடர்ந்து அதிகநாட்கள் மஞ்சளாக போகவே இரத்த பரிசோதனை செய்ததில் (bilirubin அதிகமாக இருந்ததால்) மஞ்சட் காமாலை என தெரியவந்தது. தன் வீட்டு தொட்டியில் வளர்க்கும் கீழாநெல்லியை பிடுங்கி, வேரில் உள்ள மண்ணை அலம்பி, அரைத்து மோரில் கலந்து காலை, மாலை 3 நாட்கள் (உப்பில்லா பத்தியத்துடன்) கொடுத்தார். (இவரிடம் வரும் மஞ்சட்காமாலை நோயாளிக்கு இவர் கொடுத்துவரும் கைகண்ட மருந்து இது.) அப்படியும் (bilirubin) குறையாமலிருக்கவே ஸ்கேன் செய்ததில் பித்தப்பை குழாயில் பித்தக்கல் அடைப்பு இருப்பதாக தெரியவந்தது. (பித்தக்கல் அடைப்பு ஏற்படும் obstructive hepatitis-க்கு நாட்டு மருந்து கேட்காது. உயிருக்கு அபாயமான நிலை. ஆபரேஷன் செய்து எடுக்க வேண்டும்.)

மஞ்சட்காமாலை இருப்பதால் இந்நிலையில் ஆபரேஷன் செய்வது ஆபத்து என்பதால் ஆசனவாய் வழியாக இரப்பர் குழாயை செலுத்தி பித்தப்பை வாய் பகுதியை அடைத்திருக்கும் பித்தக்கல்லை உள்ளே தள்ளி, இதனால் bilirubin குறைந்த பிறகு பின்னால் மருந்து கொடுத்தோ, அறுவை சிகிச்சை மூலமாகவோ சரிசெய்து கொள்ளலாம் என ஒரு அறுவை சிகிச்சை நிபுணர் (surgeon) கூறி அவ்வாறு செய்தார். மூன்று நாட்கள் தொடர்ந்து முயன்றும் இரப்பர் குழாயால் கல்லை நகர்த்த முடியவில்லை. இதற்குள் இவருக்கு மஞ்சட்காமாலை அதிகமாகி, உயிருக்கு ஆபத்து என்றாலும் வேறு வழியில்லாமல் ஆபரேஷன் செய்து பார்த்ததில் ஸ்கேன் ரிப்போர்ட்டில் சொல்லப்பட்ட பித்தக்கல் இல்லை. ஆனால் பித்தப்பையில் கான்சர் வந்து கட்டி தட்டிப்போய் எங்கோ உட்கார்ந்திருந்தது அது. அறுவை சிகிச்சை மூலம் அகற்றப்பட்டது. ஆனால் நோயாளி ஒரு வாரத்தில் இறந்து விட்டார்.

இங்கு நாம் கவனிக்க வேண்டிய முக்கியமான விஷயம் என்னவெனில்:

1) ஒருசில வியாதிகள் முற்றிய நிலையில் (cirrhosis of liver, cancer etc.) பாதிக்கப்பட்ட உறுப்பு கட்டி தட்டி 'கல்' போல் கெட்டியாக ஆகிவிடும்.

2) பல நோயாளிகளின் வயிற்றிலிருந்து அகற்றப்பட்ட பித்தக்கற்களை ஸ்கேன் மெஷின் முன்பு வைத்து, ஒலி அலைகளை அனுப்பி அவை திரும்பி வரும் வேகம், விதம் ஆகியவற்றை கணக்கிட்டு இவ்வாறு ஒரு நோயாளிக்கு வயிறு ஸ்கேன் செய்யும்போது தெரிந்தால் அவனுக்குப் பித்தக்கல் இருக்கிறது என சொல் என ஸ்கேன் மெஷின் டிசைன் செய்த எஞ்சினியர் சொல்லிக்கொடுப்பதை அது அப்படியே சொல்கிறது.

3) ஆனால் ஒரு சில முற்றிய வியாதிகளில் பாதிக்கப்பட்ட உறுப்பு கல்போல கட்டி தட்டி போய்விடுவதால் அதையும் 'கல்' என (மேற்சொன்ன டாக்டரின் கணவன் கேசில் நடந்தது போல்) தவறாக சொல்லி விடும்.

4) ஸ்கேன் மெஷின் கண்டு பிடித்தவருக்கு ஒரு சில வியாதிகளில் பாதிக்கப்பட்ட உறுப்பு கல் போல் ஆகிவிடும் என்பது தெரியாது.

5) டாக்டர்களுக்கும் இதுபோல் தவறு ஸ்கேன் மெஷினில் ஏற்படும் என்பது தெரியாது.

ஆகையால் இது எவர் குற்றமும் இல்லை. ஸ்கேன் ரிப்போர்ட்டை அப்படியே நம்ப முடியாது என்பதற்கு மேற்சொன்ன கேஸ் உதவும்.

எக்ஸ்ரே-யில் இப்படிப்பட்ட தவறுகள் ஏற்படுவது (wrong interpretation) சொற்பம்தான்.

மேற்சொன்ன கேசில் எக்ஸ்-ரே எடுத்திருந்தால், அது கான்சர் என தெரிந்து (அவருக்கு மஞ்சட்காமாலை முற்றுவதற்கு முன்பே) ஆபரேஷன் செய்திருந்தால் அவர் மேலும் சில வருடமாவது உயிர் வாழ்ந்திருப்பார்.

இதுபோல் ஸ்கேனில் தவறாக தெரிந்து, தவறான வைத்தியம் செய்து பல நோயாளிகள் இறந்ததை டாக்டர்கள் மூடி மறைக்கிறார்கள். ஒருவேளை இந்த டாக்டர்கள் போலியானவர்களா என்பதை வாசகர்கள் தீர்மானிக்கவும்.

தொலைக்காட்சியில் உருப்படியான program என்னவெனில் U.G.C. மட்டுமே.

அதில் சொன்ன ஒரு தகவல் நம்மை திடுக்கிட வைக்கிறது.

டில்லி மாநகரத்தில் ஒரு மாதத்தில் எடுக்கப்படும் மொத்த ஸ்கேன் எண்ணிக்கை இங்கிலாந்து பூராவும் ஒரு மாதத்தில் எடுக்கப்படும் ஸ்கேன் எண்ணிக்கைக்கு சமம்.

அப்படியெனில் நாம் கீழ்க்கண்ட இரண்டில் ஏதோ ஒரு முடிவுக்குத்தான் வர முடியும்.

1) இந்திய டாக்டர்களுக்கு ஸ்கேன் ரிப்போர்ட் இல்லாமல் நோயாளியை பரிசோதித்து வியாதி நிர்ணயம் (diagnosis) செய்யத் தெரியவில்லை அல்லது

2) வேண்டுமென்றே (நோயாளிக்கு தேவையில்லை எனில் கூட) ஸ்கேன் செய்ய சொல்கிறார்கள். (நாம் ஆயிரம் ரூபாய் கொடுத்து ஸ்கேன் எடுத்தால் அதில் 25

சதவிகிதம் கமிஷனாக ஸ்கேன் எழுதிக் கொடுத்த டாக்டருக்கு 1-ம்தேதி சென்றுவிடும் என்பது பலருக்கு தெரிந்திருக்க நியாயமில்லை.

## இந்தியாவில் போலியோவில் 'போலி'கள்

இரா. சங்கர் M.A., C.A.I.I.B.

துள்ளிக்குதித்து விளையாட வேண்டிய சிறுவர்கள் போலியோ வந்து காலை இழந்தால் அது எத்தனை பெரிய கொடுமை? உலகில் போலியோ தாக்குதல்களில் 60% இந்தியாவில்தான் என்று அறியும்போது நம் அச்சம் மேலும் அதிகமாகிறது. அதனால் இலவச போலியோ தடுப்புமருந்து முகாம்கள் அறிவிக்கப்படும்போது மக்கள் கூட்டம் கூட்டமாக முகாம்களை முற்றுகையிடுகின்றனர்.

மாநில அரசோ, மத்திய அரசோ நடத்தும் காரியம் என்றால் அது உருப்படியாக இராது. குளறுபடிகள் இருக்கும் என்று உறுதியாக நம்புபவர்களில் நானும் ஒருவன். எனவே, அதுபற்றி நான் ஆராயப் புகுந்தபோது 'போலியோ தடுப்பு மருந்தே போலியோ?' என்று குழம்பும் அளவுக்கு திடுக்கிடும் தகவல்கள் கிடைத்தன.

போலியோ தடுப்பு மருந்துகள் இருவகை ஆகும். ஐம்பதுகளில் ஜோனஸ் சாக் என்பவர் கண்டறிந்த ஊசி வழியே செலுத்தும் மருந்து ஐ.பி.வி. (IPV) எனப்படும். மற்றொன்று, ஆல்பர் சேபின் என்பவர் அறுபதுகளில் கண்டறிந்த வாய்வழி செலுத்தும் மருந்து ஓபிவி (OPV) எனப்படுகிறது.

நோய்க் கிருமிகளிலிருந்தே தடுப்பு மருந்து தயாரிக்கப்படுகிறது என்பதைப் பல வாசகர்கள் அறிந்திருக்கலாம். ஐபிவியில் இறந்த அல்லது செயலற்ற கிருமிகள் உள்ளன. ஓபிவியிலோ உயிரோடு உள்ள ஆனால், பலவீனமான வைரஸ்கள் உள்ளன. ஓபிவி ஐந்து முறை தரப்பட வேண்டியது. செலவு ரூ.15தான். ஐபிவியோ மூன்று முறை தந்தால் போதும். ஆனால், செலவு ரூ. 1500/-

சமீப காலங்களில் போலியோ தடுப்பு மருந்து முகாம்களில் அளிக்கப்படுபவை அனைத்தும் ஓபிவி மருந்துதான். விலை அதிகம் என்பதால் மட்டுமே ஐபிவி மருந்தை அரசு புறக்கணித்தால் அது கேவலம். எது எதற்கோ கோடிக்கணக்கில் மானியம் கொடுப்பவர்கள் நாட்டு சுகாதாரம் சம்பந்தப்பட்டதில் சேமிப்பு செய்ய நினைப்பது கொடுமை. விலை குறைவு என்பதைத்தவிர வேறு எதுவும் ஓபிவிக்கு சாதகமாக இல்லை. அவை:

முதலாவதாக சொட்டு மருந்துகள் 2 முதல் 8 டிகிரி குளிர்நிலையில் எப்போதும் வைத்திருக்க வேண்டியவை. இதை Cold Chain என்கிறார்கள். அதாவது, உற்பத்தி செய்யப்படும் இடத்திலிருந்து உங்கள் குழந்தையின் வாயில் விழும்வரை இக்குளிர்நிலையில் அது இருக்க வேண்டும்! இந்தியா போன்ற வெப்ப நாட்டில் குளிர்பதனம் செய்யப்பட்ட சரக்கு வண்டிகள் அரிதான இடத்தில் மின்வெட்டு நேரம் இல்லாமல் நீடிக்கும் இடத்தில் இது கிட்டத்தட்ட இயலாதது. இதைப் படித்த பிறகும் சொட்டு மருந்துகள் முழு

வீரியத்துடன் எப்போதும் இருக்கும் என்று நம்புபவர்கள் தான் பாலைவனத்தில் விவசாயம் செய்யப் போகலாம்.

ஆக, இது வேலை செய்யும் என்பதே சந்தேகத்திற்குரியது. ஆனால், வேலை செய்ய ஆரம்பித்தால் சில சமயம் புதுவிதமாக வேலையை காட்டிவிட்டுப் போகிறது. அதாவது இதில் உயிரோடு ஆனால் பலவீனமாக உள்ள வைரஸ் உயிர் பெற்றெழுந்து Vaccine Associated Paralytic . Polio (VAPP) என்பதை உண்டாக்கலாம். அதாவது தடுப்பு மருந்தே வியாதியைத் தூண்டிவிடும் அபாயம் உள்ளது.

இந்த நிலையில், ராஜீவ் காந்தியின் ஆட்சிக் காலத்தில் 1988-ல் டெல்லி அருகே ஐபிவி தொழிற்சாலை ஒன்று நிறுவப்பட்டது. ஆனால், இரண்டே வருடங்களில் ராஜீவ் காந்தியுடன் இந்தத் தொழிற்சாலையும் உடன் கட்டை ஏறிவிட்டது.

இதன்பிறகு என்ன நடந்தது? மேள தாளத்துடன் ஓபிவி, அமெரிக்கா, பிரான்ஸ் மற்றும் ரஷ்யாவிடமிருந்து இறக்குமதி செய்யப்பட்டது. இதோ டாக்டர் பி.எம். பார்கவா (Founder-Director, Centre for Cellular & Molecular Biology, Hyderabad) · மற்றும் டாக்டர் டி. ஜேக்கப் ஜான் (CMC, Vellore) ஆகியோர் சொல்வதைக் கேளுங்கள். "ஓபிவி மேல்நாடுகளில் உபயோகப்படுத்தப்படவில்லை என்பது மட்டுமல்ல, கிட்டத்தட்ட தடையே உள்ளது. அதை உலக சுகாதார நிறுவனம் மற்றும் யூனிசெப் ஆகியவற்றின் வழியே நம் தலையில் கட்டுவதில் ஒரே நோக்கம்தான் உள்ளது. அது அந்நிய மருந்து நிறுவனங்கள் ஏற்றுமதி செய்து கொழிக்கத்தான்."

இதே உலக சுகாதார நிறுவனம் (WHO) மேலைநாடுகளில் ஐபிவி மட்டுமே பயன்படுத்தப்பட வேண்டும் என்று பலமாக சிபாரிசு செய்கிறது! பணமே குறி என்றாலும் அமெரிக்காவில் பொதுநலம் விரும்பும் நாணயஸ்தர்களும் அதிகம். US Centre for Disease Control and Prevention என்ற சக்தி வாய்ந்த நிறுவனம் மேற்கூறிய கருத்துக்களில் உள்ள நியாயத்தன்மையை ஒப்புக்கொண்டு ஐபிவியே சிறந்தது என்று தீர்ப்பளித்துள்ளது. ரொம்ப சரி... இந்தத் தீர்ப்பை இந்தியாவில் அமல்படுத்தப் போகிறவர்கள் யார்? பதிலும் கேள்விக்குறியாகவே உள்ளது.

*[ நன்றி: மருத்துவ அறிவியல் மலர், அக்டோபர் 2000*
*(இந்த பத்திரிக்கையை ஒரு*
***M.S.** படித்த அல்லோபதி டாக்டர் ஆசிரியராக இருந்து வெளியிடுகிறார்.)]*

# மணி, மந்திரம்,



எனது முப்பது வருட டாக்டர் தொழிலில், எந்த நோயாளிக்காவது ஆறு மாதத்திற்கு மேலாக வைத்தியம் செய்தும் பலனளிக்காத கேசுகளில் அவரது ஆங்கில ராசிக் கேற்ற இரத்தினங்களை அணியச் செய்ததில் நல்ல குணம் கிடைத்தது.

உதாரணமாக 2, 11, 20, 29 தேதிகளில் பிறந்தவர்களை இரண்டாம் எண்காரர் என சொல்கிறோம். இதேபோல பிறந்த தேதி, மாதம், வருடம் ஆகியவற்றை கூட்டினாலும் வரும் எண் 2 எனில் அவரும் இரண்டாம் எண்காரர் என்போம். (பிறந்த தேதி 22-5-1955 எனில் 22 + 5 + 1955 = 2 + 2 + 5 + 1 + 9 + 5 + 5 = 29 = 2 + 9 = 11 = 1 + 1 = 2.)

தவிர, ஜூன் 21 - ஜூலை 20 தேதிகளுக்கு இடைப்பட்ட காலத்தில் பிறந்தவர்களும் 2-ம் எண்காரர் எனப்படுவர்.

2-ம் எண்காரர்களில் பலருக்கு அனேகமாக வயிறு, ஜீரணக் கோளாறுகள் இருக்கும். எந்த மருந்தும் பலனளிக்காது. ரூ.480 விலையுள்ள சைனீஸ் ஜேட் (Jade) என்ற மேலைநாட்டு இரத்தினத்தை அணிந்த பிறகு அவர்களது வயிறு தொந்தரவுகள் அறவே குணமாகியது.

இதேபோல் 3, 12, 21, 30 தேதிகளில் பிறந்தவர்களையும் கூட்டு எண் மூன்று ஆக வந்தால் அவர்களையும் 3 எண்காரர் என்று சொல்கிறோம். (14-12-1957 தேதியில் பிறந்தவர் எனில் 14 + 12 + 1957 = 1 + 4 + 1 + 2 + 1 + 9 + 5 + 7 = 30 = 3 + 0 = 3.) தவிர பிப்ரவரி 20 - மார்ச் 20 தேதிகளுக்கு இடைப்பட்ட காலத்தில் மற்றும் நவம்பர் 21 - டிசம்பர் 21 தேதிகளுக்கு இடைப்பட்ட காலத்தில் பிறந்தவர்களையும் (ஆங்கில ராசிப்படி) 3-ம் எண்காரர் என்று சொல்கிறோம். இவர்களுக்கு தலைவலி வந்தால் பொதுவாக அது

எந்த மருந்துக்கும் கட்டுப்படாது. இவர்கள் எமிதிஸ்ட் (Amethyst) என்ற கத்திரிப்பூ கலரில் உள்ள இரத்தினத்தை மோதிரம் அல்லது டாலரில் பதித்து அணிய தலைவலி இருந்த இடம் தெரியாமல் குணமாகி விடும்.

நமது வாழ்க்கைப் பிரச்சினை, ஏழ்மை நீங்க முதலில் 'மணி'யின் (இரத்தினங்களின்) உதவியை நாட வேண்டும். இது பலனளிக்காத பட்சத்தில் மட்டுமே மந்திரங்களை உச்சாடனம் செய்ய வேண்டும். இதுவும் பலனளிக்காத ஒரு சில கேசுகளில் மட்டுமே 'மருந்து' முயற்சி செய்ய வேண்டும் என நம் முன்னோர் ''மணி, மந்திரம், ஔஷதம்'' என வரிசைப்படுத்தி வைத்துள்ளனர்.

ஆனால் தற்காலத்தில் நிலைமை தலைகீழாக அல்லவா உள்ளது? முதலில் டாக்டரை அணுகுகின்றனர் (ஔஷதம்). இது பலனளிக்காத கேசுகளில் ஒரு சிலர் மந்திரங்களை (பூஜை, ஜபம்) முயற்சிக்கின்றனர். ஆனால் எவரும் ஆண்டவன் கொடுத்த இரத்தினங்களை நினைத்துப் பார்ப்பது கிடையாது. (தொலைக்காட்சியில் பற்பசை, நாப்கின் விளம்பரங்களை மணிக் கணக்கில் பார்க்கத்தானே நமக்கு நேரமிருக்கிறது!)

புஷ்பராகம், பத்மராகம், கோமேதகம், வைரம், வைடூரியம், இந்திர நீலம், முத்து, மரகதம், பவழம், நவரத்தினம், நானாரத்தினம் இவை ஒவ்வொன்றால் ஆன வெளிப் பிரகாரங்களை உடைய 'சிந்தாமணி கிருஹம்' என்ற கோட்டை அம்பிகையின் வசிப்பிடம். அம்பிகை தன்னை பாதுகாத்துக் கொள்ள இந்த அற்புதமான கோட்டையில் வாசம் செய்கிறாள் என்று லிங்க புராணத்தில் மகா மேரு மலையில் விநாயகரால் எழுதப்பட்ட சௌந்தர்ய லஹரீ என்ற மந்திர சாஸ்திரமாக போற்றப்படும் நூலின் எட்டாவது பாடலில் கூறப்பட்டுள்ளது. தன்னை பாதுகாத்துக் கொள்ள தேவியே டன் கணக்கில் இரத்தினங்களை உபயோகித்துக் கொள்கிறாள் எனில் நாமும் ஏன் அவற்றை உபயோகிக்கக் கூடாது?

கான்சர் நோயால் பாதிக்கப்பட்டு சீரியஸாகி சில வாரங்களே உயிர் வாழ்வாள் என்று சொல்லப்பட்ட நிலையில் ஒரு பெண்மனி வைடூரியம் மற்றும் மரகதம் பதித்த வெள்ளி மோதிரம் அணிந்த பின்பு எழுந்து நடமாட ஆரம்பித்தாள்.

பவழம் அணிந்த பின்பு பிரிந்த தம்பதிகள் ஒன்று சேர்ந்தனர், வெண் பவழம் மற்றும் மஞ்சள் புஷ்பராகம் அணிந்து கொள்ள,

மருந்தில் சரியாகாத கடுமையான சர்க்கரை வியாதி (டயபிடீஸ்) குறைந்தது. இதுபோல் நீண்ட நாட்களாக தாமதமான பதவி உயர்வு மூன்றே மாதத்தில் கிட்டியது, கோர்ட் விவகாரம் சுமுகமாக முடிந்தது. வேறு பலருக்கு தீராத வியாதிகள் குணமானது. நீண்ட நாட்களாக இருந்த குடும்ப பிரச்சினைகள் தீர்ந்தது போன்றவற்றை நான் அனுபவத்தில் பார்த்துள்ளேன். மலச்சிக்கல் முத்து அணிந்த பிறகும் அலர்ஜி கோமேதகம் அணிந்த பிறகும் பல வருட தோல் வியாதிகள் பவழம், லாபிஸ் லஸுலி அணிந்த பிறகும் குணமானது. திருமணமாகாத பெண்கள் பவழம் அணிய திருமணம் கைகூடியது. வைடூரியம், மஞ்சள் புஷ்பராகம், மரகதம் அணிய வியாபாரம் வெற்றிகரமாக நடைபெற்றது.

***ஆந்திரப் பிரதேசம் குண்டூரில் ஒரு சாதாரண விவசாயி ஆக இருந்த சுப்பாராவ் என்னிடம் அகேட் என்ற இரத்தினம் வாங்கி உபயோகித்த பின்பு மகசூல் அதிகரித்து பெரும் பணக்காரர் ஆகி இன்று ஒரு மிராசுதாரர் ஆகிவிட்டார்.***

ரோஜாப்பூ எனில் குமாரி சுகேஷிணிக்கு உயிர். ஆனால் வீட்டில் பல தடவை ரோஜா செடி வைத்தும் வளரவில்லை. 'அகேட்' இரத்தினம் உபயோகித்த பின் செடியில் தினம் ஐந்தாறு பூக்கள் பூத்தது. திரு. செல்வராஜ் சங்கீதத்தில் புலமை உள்ளவர். ஆனால் கச்சேரி செய்ய சான்ஸ் ஏதும் கிடைப்பதாக இல்லை. எமது அகேட் அணிந்த பின்பு நிறைய சான்ஸ் கிடைத்து இன்று இலண்டன் தொலைக்காட்சி நிலையத்தில் முன்னணி இசையமைப்பாளராக இருக்கிறார். அருண்குமார் நல்ல ஓவியர். ஆனால் ஒன்றுகூட விற்கவில்லை. அகேட் அணிந்த ஆறே மாதத்தில் இவரது ஓவியங்கள் நிறைய விற்பனையாகி இன்று சொந்தமாக கார், பங்களா என்று இருக்கிறார். இராமசாமி நடத்தி வந்த லாரி சர்வீஸ் பலத்த நஷ்டம். காரணம் அடிக்கடி நடந்த லாரி விபத்து. டர்க்வாய்ஸ் இரத்தினம் ஒவ்வொரு லாரியின் டீசல் டாங்க்-ல் போட அதன் பிறகு விபத்து நிகழவில்லை.

*இரத்தினங்களை வெள்ளி அல்லது தங்கத்தில் பதித்து மோதிரமாக விரலில் அணியலாம். அல்லது டாலரில் பதித்து கழுத்து செயினில் அணியலாம். சில இரத்தினங்களை தங்கத்தில்தான் அணிய வேண்டும் என்றோ குறிப்பிட்ட விரலில்தான் அணிய வேண்டும் என சொல்வது முற்றிலும் தவறு. துவரமல்லி என்ற இரத்தினம் மட்டும் வெள்ளியில்தான் அணிய வேண்டும். இருபத்தி நான்கு மணி நேரமும் அணிய முடியாவிட்டால் தினம் எட்டு*

மணி நேரமாவது அணிந்து கொள்வது நல்லது. ஜாதகம், பிறந்த தேதி ஏதும் தேவையில்லை. நமக்கு என்ன பலன் வேண்டுமோ, அதற்கேற்ற இரத்தினத்தை எந்த விரலிலும் மோதிரத்தில் அல்லது செயினில் அணியலாம்.

***நவரத்தினங்களை அணிந்து கொண்டு அதனால் பலன் ஏதும் ஏற்படவில்லை என பலர் சொல்வதற்கு இவர்கள் நகைக் கடையில் சென்று மூன்றுந்தர இரத்தினங்களை அதுவும் சுத்தி செய்யாமல் அணிவதே காரணம். இரத்தினங்களை சுத்தி செய்து அணிவது மிக மிக அவசியம்.***

நவரத்தினங்கள் என நம் நாட்டில் அதிகமாக அணியப்படுவது வைரம், வைடூரியம், கோமேதகம், மரகதம், மாணிக்கம், முத்து, நீலம், பவழம், கனக புஷ்பராகம் ஆகிய ஒன்பது மட்டுமே. அகேட், எமிதிஸ்ட், அக்வாமரைன் போன்ற இரத்தினங்களும் சக்தி வாய்ந்தவைகளே. இவைகளை வெளிநாட்டினர் அதிக அளவில் அணிகின்றனர். ஒரு சிலருக்கு உடனடியாக பலன் தெரிகிறது. பலர் ஆறு மாதம் வரை பொறுத்திருப்பது அவசியம்.

விலையுயர்ந்த இரத்தினங்கள் வசீகரத்தோற்றம் அதிகமாக இருக்கும் என பலர் நினைக்கின்றனர். இது மிகத் தவறு. இரத்தினங்கள் இயற்கையில் பூமிக்கடியிலிருந்து வெட்டி எடுக்கப்படுபவை. இவை பார்ப்பதற்கு வசீகரமாக இல்லாமல் உருவத்திலும் நிறத்திலும் சுமாராகத்தான் இருக்கும். மலிவு விலையில் கிடைக்கும் செயற்கை (imitation) இரத்தினங்கள் அழகிய உருவங்களில் வசீகரம் உடையதாக காணப்படும். ஆனால் பலன் சிறிது கூட கிடையாது.

*கடவுள் நமக்கு கொடுத்திருக்கும் செல்வங்களில் தலையாயது/மிக உயர்ந்தது இரண்டு வகை.*

*ஒன்று நமது உடலில்; கை, கால், கண், காது, மூளை.*

***மற்றொன்று வெளியில்.*** *இவற்றில் தலையாயது இரத்தினக் கற்கள்.*

'இரத்தின சுருக்கமாக' என சொல்கிறோம். 'மனிதருள் மாணிக்கம்' என்று ஒரு மிக நல்ல மனிதரைப் பற்றி சொல்கிறோம்

கடும் குளிரிலிருந்து நம்மை பாதுகாத்துக் கொள்ள கம்பளி உடை அணிகிறோம். கடும் வெயிலில் குடை பிடித்து வெளியில் செல்கிறோம். உடல் நிலை சரியில்லை என்றால் டாக்டரிடம் செல்கிறோம். இதே போல் தீய சக்திகள், திருஷ்டி, துரதிருஷ்டம், வறுமை ஆகியவை நம்மை அணுகாமல் பாதுகாத்துக் கொள்ளத்தான் இரத்தினங்களை கடவுள் நமக்கு அளித்துள்ளான். இரத்தினங்கள் அணிவது ஆடம்பரத்திற்காக அல்ல. இது பலருக்கு தெரியாத ஒரு விஷயம்.

பத்து இலட்சத்திற்கு வீடு வாங்குகிறோம். நாற்பதாயிரத்திற்கு ஸ்கூட்டர் அல்லது 2-3 லட்சத்திற்கு கார் போன்ற வாகனம் வாங்குகிறோம். இதை வைத்திருப்பதால் மட்டுமே நமது வருமானம் அதிகரிக்காது. அளவற்ற மரியாதை கிடைத்து விடாது. ஆனால் இவற்றால் அடிக்கடி செலவு நிச்சயம் உண்டு.

உடை ஏதும் அணிந்து கொள்ளாமல் தெருவில் போக முடியுமா? ரோடில் செல்லும் போது ஆடை அணிந்து கொண்டு தான் செல்ல வேண்டும். இதற்கு விதி விலக்கு என்பதே கிடையாது. உடை அணிந்து கொள்ளாமல் அதற்கு பதிலாக வேறு என்ன செய்யலாம் என எவரிடமும் நாம் ஆலோசனை கேட்க மாட்டோம். இதே போல் வாழ்க்கைப் பிரச்சினை, பணக்கஷ்டம் உள்ளவர்கள் பொருத்தமான இரத்தினங்கள் அணியாமலிருப்பது உடை ஏதும் போட்டுக் கொள்ளாமல் தெருவில் நடமாடுவதற்கு சமம் என்றால் அது மிகையாகாது. வாழ்க்கைப் பிரச்சினை, பணப்பற்றுக்குறை நீங்க பலரிடம் ஆலோசனை கேட்காமல், அலுவலகத்தில் மேலதிகாரியிடம் சம்பள உயர்வு கேட்காமல் சரியான இரத்தினங்கள் அணியவேண்டும் என்பதற்கு விதிவிலக்கே கிடையாது. இதற்கு மேலும் இரத்தினங்கள் அணிவதன் முக்கியத்தை நாம் சரியாக விளக்க முடியாது. ஆனால் நமக்கு அடிக்கடி செலவு ஏதும் வைக்காமல் பண வரவு, சௌகர்யங்கள் ஆகியவற்றை

(மறைமுகமாக) தொடர்ந்து கொடுத்துக் கொண்டேயிருப்பது இரத்தினக் கற்கள் மட்டுமே!

எமது முப்பது வருட அனுபவத்தில் மிக மிக முக்கியமாக வாசகர்களுக்கு நாம் சொல்ல விரும்புவது என்னவெனில், நீங்கள் என்ன இரத்தினம் அணிய வேண்டும் என்பதற்கு ஜாதகம், நட்சத்திரம், ராசி அல்லது நடப்பு தசாபுக்தி, ஆகிய எதுவுமே தேவையில்லை. எந்த ஜோசியரிடமும் கேட்க வேண்டாம். 'வானசாஸ்திரம்' சுயநலக்காரர்களுக்கு 'ஜோஸ்யம்'. 'உடல் நூல்'கைரேகை' "Astronomy to the selfish becomes astrology. Psychology, mesmerism (with intent to show where our spoons are gone); and anatomy and physiology, become phrenology and palmistry" என்று மேதை எமர்சன் எழுதுகிறார்.

இரத்தினங்களை அணிவதால் தன்னம்பிக்கை அதிகரித்து வாழ்க்கையில் முன்னேற முடியும். திரும்பவும் சொல்கிறோம். நாம் ஒரு கணக்கெடுப்பு நடத்தியதில் ஜோஸ்யர் சொல்லியபடி இரத்தினக்கல் அணிந்தவர்களில் 99 சதவிகித நபர்கள் விஷயத்தில் எந்த மாற்றமும் உண்டாகவில்லை.

முதலில் கீழே கொடுத்துள்ளபடி உங்களது ஆங்கில பிறந்த தேதிக்கேற்ப இரத்தினங்களை அணியவும்:

| | |
|---|---|
| 21 மார்ச் to 19 ஏப்ரல் | : மாணிக்கம், கார்னெட், ப்ளட் ஸ்டோன் |
| 20 ஏப்ரல் to 20 மே | : மரகதம், டர்க் வாய்ஸ், லாபிஸ் லஸுலி |
| 21 மே to 21 ஜுன் | : கர்னேலியன், நீலம், வைரம் |
| 22 ஜுன் to 22 ஜுலை | : முத்து, வைரம், ஓபல், கிரிஸ்டல், வைடூரியம், சந்திரகாந்தக்கல், |
| 23 ஜுலை to 22 ஆகஸ்டு | : மாணிக்கம், அம்பர், புஷ்பராகம், |
| 23 ஆகஸ்டு to 22 செப்டம்பர் | : மரகதம், வைரம், முத்து |
| 23 செப்டம்பர் to 23 அக்டோபர் | : ஓபல், முத்து |
| 24 அக்டோபர் to 20 நவம்பர் | : டர்க்வாய்ஸ், மாணிக்கம், சிகப்பு பவழம் |
| 21 நவம்பர் to 21 டிசம்பர் | : எமிதிஸ்ட், நீலம் |
| 22 டிசம்பர் to 19 ஜனவரி | : சந்திரகாந்தக்கல், முத்து, எமிதிஸ்ட் |
| 20 ஜனவரி to 19 பிப்ரவரி | : சந்திரக்காந்தக்கல், நீலம், புஷ்பராகம் |
| 20 பிப்ரவரி to 20 மார்ச் | : அகேட், நீலம், எமிதிஸ்ட், மரகதம் |

மேற்படி பிறந்த தேதிக்கேற்ற இரத்தினங்களை அணிந்த பிறகு உங்களிடம் ஜாதகம் இருந்தால் லக்னத்திலிருந்து எட்டாவது வீட்டில் உள்ள கிரகத்திற்கு ஏற்ற இரத்தினத்தையும், மற்றும் எட்டாம் வீட்டிற்கு (அதிபதி) சொந்தக்காரனாக உள்ள கிரகத்திற்கும் ஏற்ற இரத்தினங்களை அணியவும். [கிரகங்களுக்கான இரத்தினங்கள்: சூரியன் - மாணிக்கம்; சந்திரன் - முத்து; செவ்வாய் - சிவப்பு பவழம்; புதன் - மரகதம்; குரு - மஞ்சள் புஷ்பராகம்; சுக்கிரன் - வைரம்; சனி - இந்திர நீலம்; இராகு - கோமேதகம்; கேது - Tiger's Eye]

(பிறந்த தேதி தெரியாவிட்டால் இந்த புத்தகம் இந்த பக்கம் படிக்கும் நேரம், தேதியை உங்கள் பிறந்த நேரமாக பாவித்து அதன்படி ஜாதகம் கணித்து இரத்தினம் தேர்ந்தெடுக்கவும். இதை நஷ்ட ஜாதகம் கணிக்கும் வழி என்பர்.) இவ்வாறு அணிந்த பிறகு நீங்கள் அடுத்தபடியாக அணிய வேண்டியவை: தடங்கல் நீங்கவும், தாராள வருமானம் இருக்கவும், மஞ்சள் புஷ்பராகம் மற்றும் சிவப்பு பவழம். இதன் பிறகு சமுதாயத்தில் அந்தஸ்து, மதிப்பு, பதவி உயர்வு, கௌரவம், அதிக பணவரவு ஆகியவை பெற சிலோன் நீலம். இதன் பிறகு நீங்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ள இரத்தினங்களை (எவ்வளவு வேண்டுமானாலும்) தேவைக்கேற்ப அணியலாம்.

அதி முக்கியமாக நாம் சொல்ல விரும்புவது என்னவெனில் நகைக் கடை அல்லது நகை செய்யும் ஆச்சாரியிடம் நிச்சயமாக வாங்க வேண்டாம். இவர்களுக்கு இரத்தினங்களை சுத்தம் செய்வது எப்படி என்பது தெரியாது. மனிதர்கள் அணிய, இரத்தினங்களின் குறைந்த பட்ச எடை என்னவெனில், சிவப்பு பவழம் ஏழரை கேரட்டுக்கு குறையாமலும் மற்ற எல்லா இரத்தினங்கள் ஒவ்வொன்றும் இரண்டு கேரட்டுக்கு குறையாமல் இருப்பது அவசியம். விலைகள் இன்றைய நிலவரப் படி கொடுத்துள்ளோம். ஆனால் நாளுக்கு நாள் மாறக்கூடியவை]

**டைகர்ஸ் ஐ (Tiger's Eye) Rs.480** — சொந்தமாக தொழில், வியாபாரம் செய்பவர்கள் இதை அணிய, வியாபாரம் அபிவிருத்தியடைந்துள்ளது.

**அகேட் (Agate) Rs.380** — இந்த இரத்தினம் மட்டும் பல நிறங்களில் கிடைக்கிறது. பலன் ஒன்றே. கடவுளை சந்தோஷப்படுத்த, (தெய்வக் குற்றத்தினால் உண்டாகும் வியாதிகள், கஷ்டங்கள் நீங்க.) உடல் ஆரோக்கியம், பலம், சொத்து, இலாபங்கள், வெற்றி ஆகியவை விருத்தியாகும்.

கலை, சங்கீதம் ஆகியவற்றில் முன்னேற, நல்ல சாரீரம் (குரல் வளம்) உள்ளவர்கள் டெலிவிஷன், ரேடியோ, சபா கச்சேரிகளில் சான்ஸ் பெற உதவும். சங்கீதம் கற்பவர்கள், (fine arts) ஓவியர்கள், கலைஞர்கள் இந்த இரத்தினத்தை அணிந்து அதிகாலை (4.30 a.m. to 6.00 a.m.) சாதகம் (practice) செய்து வர விரைவில் பிரபலமடைவர்.

ஆப்பிள் பழரசத்தில் ஏழு தினம் இந்த இரத்தினத்தை போட்டு வெளிச்சம் படாதவாறு வைத்து, அந்த பழ ரசத்தை சாப்பிட சித்தப்பிரமை குணமாகி உள்ளது. நண்பர்களை பெறவும் அவர்களது தொடர்பு நீடிக்கவும் பயன்படுகிறது. விவசாயிகள், பூச்செடி வளர்ப்பவர்களுக்கு இது ஒரு வரப்பிரசாதம். ஒரு அகேட் இரத்தினம் விரலில் அணிவதோடு, மற்றொன்றை தோட்டம், விளைச்சல் நிலத்தில் புதைத்து வைக்கலாம். அல்லது ஒரு பாட்டில் தண்ணீரில் ஐந்து அகேட் இரத்தினங்களை போட்டு வெளிச்சம் படாமல் ஒரு வாரம் மூடிவைத்து பிறகு, இரத்தினங்களை எடுத்துவிட்டு அந்த தண்ணீரை ஒரு வாளி தண்ணீரில் கலந்து சிறிதளவு எல்லா செடி வேர்களிலும் ஊற்ற நல்ல விளைச்சல்/மகசூல் உண்டாகும்.

**எமிதிஸ்ட் (Amethyst) Rs.750** — மாலைக்கண், வாதம் (கை, கால் அல்லது ஒரு உறுப்பு செயலிழத்தல்) மாத விடாய் கோளாறுகள்;

குடிப்பழக்கம் நீங்க அவன் குடிக்கும் தண்ணீரில் இந்த இரத்தினத்தை போட்டு வை, அல்லது மோதிரத்தில் அவன் அணிந்து கொள்ளும்படி செய். வில்லங்கம், கோர்ட் கேசுகளில் வெற்றி பெற.

3, 12, 21, 30 ஆகிய தேதிகளில் பிறந்தவர்கள் மூன்றும் எண் நபர் எனப்படுகின்றனர். ஒருவரின் பிறந்த தேதி, மாதம், வருடம் மூன்றையும் கூட்டிய எண் 21, 30, 39, 48 ஆகியவற்றில் ஒன்றாக வந்தாலும் அவரும் மூன்றும் எண் நபரே. (உதாரணம்: 16-10-1948 = 1+6+1+0+1+9+4+8 = 30 = 3+0 = 3)

மூன்றும் எண்காரர்களின் பலரது தலைவலி எந்த மருந்துகளுக்கும் கட்டுப்படாத பட்சத்தில் ஒரு பரிசோதனை செய்து பார்க்கலாம். தலைவலி வரும்போது எமிதிஸ்ட் இரத்தினத்தை கையில் (அல்லது உடல் மீது படும்படி எங்கு வேண்டுமானாலும்)

வைத்திருக்க அடுத்த சில நிமிடங்களில் வலி குறைய ஆரம்பிக்கும். 14-12-1957 அன்று பிறந்த (1+4+1+2+1+9+5+7=30=3+0=3) திருமதி ராஜேஸ்வரிக்கு பல வருடமாக தீராத தலைவலி. முக்கியமாக வெளியில் எங்காவது சென்று வந்தால் வீட்டிற்குள் நுழையும்போதே தலைவலி என படுத்து விடுவார்.

எமிதிஸ்ட் அணிந்த பின்பு தலைவலி வராமல் இருந்தது. மூன்றும் எண்காரர்களின் பலருடைய அனுபவம் இது.

**ப்ளட் ஸ்டோன் (Blood Stone) Rs.480** — பராக்கிரமத்தின் (வீரம்) சின்னமாக இந்த இரத்தினம் விளங்குகிறது.

இரத்தப் பெருக்கை நிறுத்தும். மற்றவர்களிடம் நாம் ஏமாறுமல் நம்மை பாதுகாத்துக் கொள்ள உதவுகிறது. ('வளைகுடா நாட்டில் வேலை செய்கிறேன்' என சொல்லி பல பெண்களை திருமணம் செய்து கொண்டு நகைகளை அபேஸ் செய்து ஓடும் நபர்களால் ஏமாற்றப்படுவதிலிருந்து பெண்கள் மற்றும் அவளது பெற்றோர்கள் தங்களை பாதுகாத்துக் கொள்ள இதை அணியலாம்.)

குமாரி பத்மலோசனிக்கு திருமணம் நிச்சயமாகிற நேரம். மாப்பிள்ளை வளைகுடாவில் இலட்சக்கணக்கில் சம்பாதிக்கிறாரும். எதற்கும் இருக்கட்டும் என அவளுக்கு ப்ளட் ஸ்டோன் பதித்த மோதிரம் ஒன்று அணியச் சொல்லி கொடுத்தேன். எதிர்பாராத விதமாக இவளது உறவினர், மாப்பிள்ளை பற்றி விசாரிக்க, இதுபோல் பல பெண்களை ஏமாற்றி திருமணம் செய்து நகைகளை அபேஸ் செய்து ஓடியவன் என தெரிந்தது. நிச்சயதார்த்த தினத்தன்று போலீஸ் மறைந்திருந்து கையும் களவுமாக பிடித்து விசாரிக்க, உண்மை வெளிவந்து இன்று கம்பி எண்ணிக் கொண்டிருக்கிறான்.

பலரை நம்பி மோசம் போனவர்களும் இனி அவ்வாறு ஏமாறுமல் இருக்க இதை அணியலாம்.

**சைனீஸ் ஜேட் (Chinese Jade) Rs.480** — ஜீரணக் கோளாறுகளுக்கு மிகச் சிறந்தது. அஜீரணம், வாய்வு, வயிற்றில் புளிப்புத் தன்மை (acidity), பசியின்மை, வேளா வேளைக்கு ஒழுங்காக சாப்பிடாமல் இருப்பதால் உண்டாகும் வயிறு தொல்லைகள். 2-ம் எண்ணில் பிறந்த பல நபர்களுக்கு வயிறு

*(ஜீரண) தொல்லைகள் இருக்கும். [2, 11, 20, 29 தேதிகளில் பிறந்தவர் இரண்டாம் எண்காரர் எனப்படுவர். பிறந்த தேதி, மாதம், வருடம் மூன்றையும் கூட்டிய தொகை 20, 29, 38, 47 ஆகியவற்றில் ஏதேனும் ஒன்ருக வந்தால் அவர்களும் இரண்டாம் எண்காரர் ஆவர்].*

*வயிறு (ஜீரணக்) கோளாறுக்கு பல டாக்டர்களிடம் மருந்து சாப்பிட்டும் நிரந்தர குணம் கிடைக்காமல் அவதிப்பட்ட கேசுகளில் இந்த ரத்தினம் அணிந்தவர்களுக்கு நிரந்தர குணம் கிடைத்துள்ளது.*

*சீனுவிலிருந்து லின்-யீ என்ற எனது மாணவர் எழுதுகிருர்:* கடலில் ஆழமாக மூழ்கி தேடினுலும் அதிர்ஷ்டம் இருந்தால் தான் பல இலட்சம் மதிப்புள்ள கருப்பு முத்து கிடைக்கும். அதிர்ஷ்டத்திற்கு 'ஜேட்' என்ற இரத்தினக்கல் அணிந்து வர அற்புத பலன்கள் நிச்சயமுண்டு.

தமிழ் நாட்டில் 'ஒரு குந்து மணி தங்கமாவது உடலில் வேண்டாமா?' என்று கேட்பது போல் சீன தேசத்தில் ஜேட் என்ற இரத்தினக் கல் ஒரு சிறிதாவது உடலில் அணிந்திருப்பர். 'மனிதருள் மாணிக்கம்' என்று நாம் சொல்வது போல் சீனுவில் "He is a piece of jade" என்று நல்ல மனிதரைப் பற்றி சொல்வார்கள். நமது நடை, உடை, பாவனை, செயல் திறன் ஆகியவற்றை அதிகரித்து அதிர்ஷ்ட திசையை நோக்கி நம்மை அழைத்துச் செல்லவல்லது 'சைனீஸ் ஜேட்.'

**லாபிஸ் லஸுலி (Lapis Lazuli) Rs.280** — *தோல் வியாதிகளை குணப்படுத்தும் (படை, வெண்புள்ளி, தோல் அரிப்பு, தடிப்பு, அலர்ஜி).*

*காக்காய் வலிப்பு உள்ளவர்கள் இதை அணிய வியாதியின் தீவிரம் குறைகிறது. (காக்காய் வலிப்பு*-epilepsy-*நோய்க்கு இத்துடன் சேர்த்து அணிய விரைவில் பலன் கிடைக்கிறது).*

**ஓபல் (Opal) Rs.1200** — *ஞாபக சக்தியை வலுப்படுத்துகிறது. மனிதர்களுக்கு மட்டுமே உள்ள ஆருவது அறிவு, ஆன்மீக ஆற்றல்* (psychic faculties) *வளர உதவும்.* E.S.P. *உள்ளவர்கள், மந்திரம், மாந்திரீகம், ஜோசியத் தொழில், ஆவிகளுடன் பேசும் அமுதா மற்றும் இரவிச்சந்திரன்கள், குறி சொல்பவர், எண் கணிதம், (நியூமராலஜி) வைத்தியத் தொழில்*

புரிவோர், ரே-கீ (Rei-kei, Pranic Healing), இயற்கை வைத்தியம் செய்பவர்களுக்கு ஓபல் ஒரு வரப்பிரசாதம் என்றே சொல்ல வேண்டும். இந்த தொழில் செய்பவர்களுக்கு கடவுள் அனுக்கிரகம் மிக மிக அவசியம். ஆகையால் இந்த ஓபல் இரத்தினத்துடன் அகேட் சேர்த்து அணிவது மிக நல்லது.

**பெரிடாட் (Peridot) Rs.650** — கணவன்-மனைவி அன்புடனிருக்க. பெண்களுக்கு தளர்ந்து தொய்ந்து போன மார்பகங்களை நிமிர்த்தி நேராக்கும்.

செல்வச் செழிப்பை கொடுக்கிறது. எவ்வளவு சம்பாதித்தும் சேமிப்பே இல்லாதவர்கள் இதை அணிய சேமிப்பில் பணம் வளர ஆரம்பிக்கும். ஊதாரிகள் பர்சில் வைத்துக் கொள்ளலாம். விரலில் அணிவது மிக உசிதம்.

**டர்க்வாய்ஸ் (Turquoise) Rs.280** — அபாயம் மற்றும் துரதிர்ஷ்டத்திலிருந்து நம்மை பாதுகாக்கும். நீண்ட ஆயுளை கொடுப்பதால் 'தான் செத்து விட்டால் குடும்பம் தெருவில் நிற்க நேரிடுமோ' என பயந்து வருடா வருடம் ஆயிரக்கணக்கில் இன்சூரன்சு பிரிமியத்தில் பணத்தை வீணுக்க வேண்டியதில்லை. வாகனத்தை ஓட்டிச் செல்பவர்கள், அடிக்கடி விமான பயணம் செய்வோர் மற்றும் உயிருக்கு ஆபத்தான வேலைகளில் இருப்பவர்களுக்கு டர்க்வாய்ஸ் ஒரு உறுதுணை.

ஆண்மையை அதிகரிக்க, குழந்தை பாக்கியம் உண்டாக. மலட்டுத்தன்மை, காம உணர்ச்சி குறைவு உள்ளவர்கள் பிரச்சனை விலக இதை அணிய வேண்டும்.

மந்திரங்களை சுலபமாக மனப்பாடம் செய்ய உதவும்.

(புரோகிதர்கள் கண்டிப்பாக அணிய வேண்டும். இத்துடன் இவர்கள் ஓபல் மற்றும் அகேட் அணிவது மிக மிக அவசியம்).

**துவரமல்லி (Turmaline) Rs.680** — (இந்த இரத்தினம் மட்டும் வெள்ளியில்தான் அணிய வேண்டும்.)

வைரம் போட வசதியில்லாதவர்கள் அதற்குப் பதிலாக துவரமல்லி அணியலாம். வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கு துரிதமாக தீர்வு காண, எதிர்காலத்தின் முக்கியமான நிகழ்ச்சிகளை கனவில் காண முடியும்.

பச்சை நிற துவரமல்லி மாணவர்கள், வியாபாரிகள், சொந்த தொழில் புரிவோர் ஆகியோருக்கு உதவுகிறது.

மூளை வளர்ச்சி குன்றிய குழந்தைகள் பச்சை நிற துவரமல்லி மற்றும் மாணிக்கம் சேர்த்து அணிந்தால் நல்ல பலன் விரைவில் கிடைக்கும்.

உலகில் தான் தனித்திருப்பதாக உணர்பவர்கள் pink நிற துவரமல்லி அணிய வேண்டும்.

**மாணிக்கம் (Ruby) Rs.2800** — நவக்கிரகங்களில் தலையாயது சூரியன். சூரியனுக்கு ஏற்றது மாணிக்கம். ஆகையால் மாணிக்கம் அணிய மற்ற எல்லா இரத்தினங்களின் நற்பயன்களையும் ஒருங்கே பெறலாம். அந்தஸ்தில் உயர, துணிவு, வீரம் பெற. நல்ல நண்பர்களை பெற, நட்பு நீடித்து நிலைக்க ஆழ்ந்த வருத்தத்தை விரட்டியடிக்கிறது. ஒன்றுக்கும் உதவாத முழு மூடர்களுக்கும், பிறப்பிலேயே மூளைச்சோர்வு உடையவர் களுக்கும் (idiots and imbeciles) மிக நல்லது. மாணிக்கம் அணிவதால் பல் சொத்தை, மூக்கிலிருந்து இரத்தம் கொட்டுதல், பிளேக் நோய், விஷ பாதிப்பு, வருத்தம், சிற்றின்பத்தில் அதிக ஈடுபாடு ஆகியவை நம்மை அணுகாது. தீரும் நோய்கள்: புண்கள், மூட்டு வாதம், இதயம் மற்றும் எலும்பு சம்பந்தமான நோய்கள், தொழுநோய், குஷ்டம்.

**பவழம் (Coral) Rs.2800** — நீண்ட நாட்களாக திருமணமாகாத பெண்களுக்கு விவாக ப்ராப்தி கிடைக்க பவழம் அணிவது அவசியம். சிறு வயதிலேயே கணவனை இழக்காமல் இருக்க பவழம் சிபாரிசு செய்கிறோம். பிரிந்த தம்பதிகள் ஒன்று சேரவும் இது உதவும்.

இள் வயதிலேயே விதவையாவதை தடுக்கிறது. (இள வயது தம்பதிகளில் ஒருவர் நோய்வாய்ப்பட்டு உயிருக்கு ஆபத்தான நிலையில் டாக்டர்கள் கைவிரித்து விட்டால் அல்லது மரண தண்டனை அடைந்திருக்கும் பட்சத்தில் மற்றவர் இதை அணிய தனது வாழ்க்கைத் துணையை மரணத்தின் பிடியிலிருந்து காப்பாற்றலாம்.) போர் முனையிலிருந்து தனது கணவன் உயிருடன் திரும்பி வர, அதுவரை அவன் மனைவி பவழம் அணிந்து கொள்ளலாம். (ஈராக் போரின் போது பல அமெரிக்க வீரர்களின் மனைவிமார்கள் இதை அணிந்து கொள்ள அவர்களின் கணவர்களில் ஒருவர் கூட உயிரிழக்கவில்லை.)

குழந்தைகளுக்கு கண் திருஷ்டி படாமல் இருக்க.

பருவ காலத்தில் ஏற்படும் மன எழுச்சியினால் (emotional period) கண்டவனிடம் (அவன் திருமணமானவன் என தெரிந்தும்கூட) காதல் வயப்படுதலை தடுக்க (infatuation). இதற்கு பவழத்துடன் ப்ளட் ஸ்டோன் சேர்த்து அணிவது நல்லது.

தொழிலில் தடங்கல், இடைஞ்சல் வராமல் இருக்க உதவுகிறது.

வயிறு (இரைப்பை) மற்றும் கல்லீரல் (liver) வியாதிகள் குணமடையும். வெளியில் தெரியாத மூல நோய் (blind piles), படை (எக்சிமா), நரம்புத் தளர்ச்சி, சோர்வு, மஞ்சட் காமாலை, ஆண்மைக் குறைவு. [டயாபிடீஸுக்கு வெண் பவழத்துடன் மஞ்சள் புஷ்பராகம் சேர்த்து அணிய வேண்டும். மருந்துக்குக் கட்டுப்படாத சர்க்கரை நோயாளிகள் பலர் இதன் மூலம் குணம் பெற்றுள்ளனர்.]

**மரகதம்** அல்லது **பச்சை (Emerald) Rs.2800** — பூமியின் நிறம் பச்சை. ஆக்கத்திறன் (நேர்மறை தன்மைகளை பெற்று மனம் ஒருமைப்பட்டு) செயலாற்றும் திறன் பெற (to get positive force with power of integration.) எல்லா விதத்திலும் முன்னேற்றம், ஆரோக்கியம் கொடுக்கும்.

வாழ்க்கை துணைவி/துணைவன் தன் மீது அன்புடன் இருக்க.

ஏவல், பில்லி, சூன்யம் போன்ற செய்வினை, இடு மருந்து ஆகியவற்றிலிருந்து நம்மை பாதுகாக்கிறது.

நரம்புக் கோளாறால் உண்டாகும் இதய நோய்கள் (nervous heart trouble), பேரதிர்ச்சி ஏற்பட்டதால் உண்டாகும் இதய நோய்கள். இரத்த அழுத்தம் (B.P.) புண், புற்றுநோய் (கான்சர்), தலைவலி, நரம்பு வலி, தினம் தினம் குறிப்பிட்ட நேரத்தில் வரும் வலி (neuralgia), இன்ஃப்ளுயன்சா மற்றும் நடு நரம்பு மண்டல நோய்கள் (Central Nervous System); அடிவயிறு, பேச்சு, நாக்கு, கண், நுரையீரல், குடல், மூக்கு சம்பந்தமான நோய்கள் குணமாகிறது.

**நீலம் (Blue Sapphire) Rs.3800** — ஆரோக்கியம், செல்வம், கீர்த்தி, பலம், நீண்ட ஆயுள் கொடுக்கும். வியாபாரத்தில் இழந்த பணம் திரும்ப கிடைக்க மற்றும்

நியாயமாக நமக்கு வரவேண்டிய பரம்பரை சொத்து வந்து சேர உதவுகிறது.

பெண்களின் மலட்டுத்தன்மை அகலுகிறது. கண் நோய், பார்வை கோளாறு நீங்குகிறது. தேவையில்லாத கெட்ட எண்ணங்களை விரட்டுகிறது.

ஆழ்ந்த துயரம், கர்வம் நீங்க, இது உபயோகப்படும்.

நரம்பு மற்றும் மூளை கோளாறுகள். நரம்பு சிக்கல் (neurosis), விட்டு விட்டு வரும் தாங்க முடியாத வலிகள் (neuralgia), அடிமுதுகு/இடுப்பிலிருந்து பாதம் வரை பரவும் வலி (sciatica), உச்சந்தலையில் தோன்றும் வியாதிகள், வழுக்கை, காக்காய் வலிப்பு. மூளை சுரம்.

'ஆ...அம்மா' என்று அலற வைக்கும், விட்டு விட்டு வரும் வலிகள். கிட்னி மற்றும் சிறுநீர்ப்பை (bladder) வேலை செய்யாமை ஆகியவை தீரும்.

அசுத்த இரத்த குழாய்களை சுத்தப்படுத்தும் திறன் கொண்டதால் கீல் வாத நோய்களில் (arthritis, rheumatism) நல்ல பலன் கொடுக்கிறது. வயிறு புண் குணமாகும்.

ஏழரை அல்லது அஷ்டமத்து சனி நடப்பவர்கள் தொல்லைகள் அகல நீலம் அணிந்து திருநள்ளாறு சென்று தரிசனம் செய்து விட்டு வர ஆறு மாதத்திற்குள் பலன் தெரியும்.

**கோமேதகம் (Gomed) Rs.750** — ஆரோக்கியம், செல்வம் மற்றும் சகல விதத்திலும் முன்னேற்றம் ஏற்படுகிறது. மண வாழ்க்கை சந்தோஷமாக இருக்கும்.

'அலர்ஜி'க்கு மிக நல்லது. வயிற்றில் அதிக புளிப்புத்தன்மை (acidity), வயிறு, உணவுக்குழலில் எரிச்சல், அதிக (உடல்) சூட்டினால் வரும் வியாதிகள் தீரும். பசியை தூண்டி, ஜீரணத்தை சரி செய்கிறது.

**வைடூரியம் (Cat's Eye) Rs.3300** — அரசாங்க தண்டனையிலிருந்து நம்மை மீட்டுக் கொடுக்கும். இரகசிய எதிரிகளிடமிருந்தும், நீரில் மூழ்கி சாவு ஏற்படுவதிலிருந்தும் நம்மை பாதுகாக்கும்.

மூடிய மில்கள், நலிந்த தொழில்கள் புத்துயிர் பெறும். முதலாளி வைடூரியம் அணிவதால் அவரது தொழிற்சாலையில் வேலைநிறுத்தம் (ஸ்டிரைக்), 'லாக் அவுட்', ஆட் குறைப்பு, தொழிலில் தேக்கம் என்ற பேச்சுக்கே இடமில்லை. இத்துடன் 'டைகர்ஸ் ஐ' என்ற இரத்தினத்தை சேர்த்து அணிவது சாலச் சிறந்தது.

நாட்பட்ட வியாதிகள் மற்றும் உயிருக்கு ஆபத்தான கான்சர், எய்ட்ஸ், மூளையில் கட்டி, haemophilia, இரத்தப்புற்று, மாற்று சிறுநீரகம் பொருத்த வேண்டிய கிட்னி பழுதடைந்த நிலை போன்ற terminal illness-களில் உதவுகிறது. சில நாட்கள்/வாரங்களில் இறந்து விடுவான் என டாக்டர்களால் கைவிடப்பட்ட நோயாளிகள் வைடூரியத்துடன் மரகதமும் அணிந்து கொண்ட பின்பு பல வருடங்கள் உயிர் வாழ்ந்துள்ளனர்.

**கிரிஸ்டல் Rs.480 —** தேவையில்லாத நபர்களின் தொடர்பு விடுபட்டு, நல்ல மனிதர்களின் பரிச்சயம் உண்டாகி வாழ்க்கையில் வெற்றி கிட்டும்.

வாழ்க்கை/செய்யும் தொழிலில் நீங்கள் யாரையாவது பின்பற்றுகிறீர்கள் (எவர் கீழாவது வேலை செய்கிறீர்கள்) அல்லது பலர் உங்களை பின்பற்றுகிறார்கள் (உதாரணமாக நீங்கள் ஒரு டாக்டர், பள்ளி ஆசிரியர், பொருட்கள் தயாரித்து சப்ளை செய்பவர், இஞ்சினியர், சட்ட வல்லுனர் போன்று).

உன்னை பலர் பின்பற்ற வேண்டும் என எதிர்பார்த்தால், முதலில் நீ சரியான வழிமுறைகளை கடைப்பிடிக்க வேண்டும். மற்றவர் மீது ஆதிக்கம் செலுத்த விரும்பினால் முதலில் மற்றவர்களுக்கு உதவ தெரிந்திருக்க வேண்டும். அச்சுறுத்தல், சதித் திட்டம், மற்றவர்களுக்குள் சண்டை மூட்டி விடுதல் போன்ற வழிமுறைகளை கடைபிடித்தால், இவை மற்றவர் உன்னை பின் தொடர்வதை தடுத்து விடும்.

தவிர, காலத்திற்கேற்றபடி நம்மை மாற்றிக் கொள்ளவும் வேண்டும்.

சில சமயங்களில் தலைவருக்கும் தொண்டர்களுக்கும் உள்ள உறவு மாறுவதும் உண்டு. மற்றவர்களின் கருத்துகளுக்கு செவி சாய்ப்பவன்தான் தலைவன் ஆக முடியும். அதே நேரத்தில் நாம்

திடமான கொள்கைகளையும் வைத்திருக்க வேண்டும். தவிர, நமக்கு ஜால்ரா போடுபவரை மட்டுமே நம்முடைய தொண்டர்களாக வைத்திருக்கக் கூடாது. (சீன தேசத்து ஈ-சிங் என்ற தர்ம சாஸ்திர நூல்)

மேற்படி விஷயங்களுக்கு கிரிஸ்டல் உதவுகிறது.

**கிட்னி ஸ்டோன் Rs.480** — இதை அணிய சிறுநீரகம் பழுதடைந்தவர்களுக்கு நல்ல குணம் கிடைத்துள்ளது. தவிர, சிறுநீர் அடிக்கடி போவது போன்ற சிறுநீர் சம்பந்தமான எல்லா நோய்களுக்கும்.

உலகில் உள்ள எல்லா நல்ல விஷயங்களையும் சுருக்கி (நாம் நினைத்துக் கூட பார்க்க முடியாத அளவுக்கு) தன்னுள்ளே அடக்கி வைத்துள்ளன இரத்தினங்கள்.

ஆம்! உலகில் உள்ள எல்லா நல்ல சக்திகளையும் (கடவுளின் பலம், சக்தி உட்பட) தன்னுள் அடக்கியதும் அப்பழுக்கற்றதும் தான் நவரத்தினக் கற்கள். இவற்றை அணிய, நம் உடலில் உள்ள அழுக்கு, தேவையில்லாத சுபாவங்கள், மற்றவர்களுக்கு பிடிக்காத செயல், தன்னம்பிக்கையின்மை போன்ற விஷத்தன்மைகள் உறிஞ்சப்பட்டு வெளியேற்றப்படுகின்றன.

நாம் நிறைய மேற்படிப்பு படிக்கிறோம். எதற்காக? நிறைய பணம் சம்பாதிக்கவும், சமூகத்தில் மதிப்புடன் வாழவும் தான்.

சொந்த வீடு, வாகனம் பல இலட்சங்கள் செலவழித்து வாங்குகிறோம். எதற்காக? சௌகர்யமாக, தொல்லையில்லாமல் இருக்கத்தான்.

அலுவலகம் செல்கிறோம். நண்பர்/உறவினர் திருமணம் எனில் நல்ல உடை, ஆபரணம் அணிந்து செல்கிறோம். ஆனால் நாம் முதன் முதலில் செய்ய வேண்டியது தேவையான இரத்தினங்களை அணிவதுதான்.

உடல் வியாதி என்றால் மருந்து சாப்பிடுகிறோம். ஆனால் நமக்கு தேவைக்கேற்ற வருமானம் இல்லாமலிருப்பதும், நியாயமாக கிடைக்க வேண்டியவை இல்லாமல் போவது

ஆகியவற்றிற்கு காரணம் நம் உடலில் மைக்ரோஸ்கோப்பிற்கு கூட தெரியாத அழுக்கு, தன்னம்பிக்கையின்மை, கடன், தரித்திரம் ஆகியவைகளே. இவற்றை விரட்டவல்லது முக்கியமாக சிவப்பு பவழம், மஞ்சள் புஷ்பராகம் மற்றும் நீலம்.

பதினைந்தாயிரம் கொடுத்து கலர் டீ.வி. செட் வாங்குகிறோம்; இதனால் செலவு தான் அதிகம்.

**ஆனால் பவழம், மஞ்சள் புஷ்பராகம், நீலம்** அணிவதால் வருடா வருடம் 15-30 ஆயிரம் என அதிக வருமானம் வந்து கொண்டேயிருக்கும்.

தொலைக்காட்சி பெட்டி மனிதன் உண்டாக்கியது.

நவரத்தினங்கள் இயற்கை (கடவுள்) கொடுத்தவை.

கடவுள் கொடுத்ததை உபயோகிப்பதால் தேவைக்கேற்ற பண வரவு, கௌரவம், சந்தோஷம், சமூகத்தில் அந்தஸ்து, குடும்பத்தில் குதூகலம், குழந்தைகள் முன்னேற்றம் எல்லாம் உண்டு.



உனது நிலம், வீடு, வாகனம் போன்றவற்றை நியாயமான விலைக்கு விற்க தினம் 3-5 வேளை அக்ரிமனி என்ற மலர் மருந்து தொடர்ந்து சாப்பிட்டுவா.

எவராவது உன்னிடம் அனாவசியமாக வம்புக்கு வந்தால், நீ அக்ரிமனி தினம் 3 வேளை 2-5 நாட்கள் சாப்பிட அவர் அடங்கிவிடுவார். தவிர உனக்கு ஏதோ ஒரு வழியில் மிகப்பெரிய தொகை விரைவில் வரும்.

வாழ்க்கைப் பிரச்சினைகள் நீங்கி, தேவைக்கு மேல் பணம் சம்பாதிக்க உதவும்

# இங்கிலாந்து மலர் மருந்துகள்

(எட்வர்டு பாட்ச் M.B.B.S., M.R.C.S., என்ற இலண்டன் மாநகர அல்லோபதி டாக்டர் கண்டுபிடித்தது)

## *முன்னுரை*

பிரிட்டிஷ்காரன் லண்டனிலிருந்து தமிழில் கூட ஒலிபரப்பு செய்கிறான் என்றால் இது தமிழனுக்கு பெருமை அல்ல. ஏனெனில் பி.பி.சி. ரேடியோவில் தமிழ் மட்டுமல்லாது ஹிந்தி, சீன மொழி போன்று நாற்பத்தி மூன்று மொழிகளில் ஒலிபரப்பு செய்கிறார்கள். இத்தனைக்கும் இங்கிலாந்து, ஸ்காட்லாந்து, அயர்லாந்து போன்ற நாடுகள் அடங்கிய Great Britain என்னும் தேசம் நம் இந்திய நாட்டின் பரப்பளவில் பதின்மூன்றில் ஒரு பங்கே ஆகும்.

ஆனால் நாம் அகில உலக மொழிகளான ஜெர்மன், பிரெஞ்சுகளில் கூட ஒலிபரப்பு செய்வதில்லை. இது போகட்டும்.

தில்லியில் இந்திராகாந்தி சுட்டுக் கொல்லப்பட்ட செய்தியை, கல்கத்தாவில் இருந்த அவர் மகன் ராஜீவ் காந்தி, பி.பி.சி. ரேடியோவில் கேட்டு உடனே தில்லி திரும்பினார்.

தில்லியில் உள்ள பிரிட்டிஷ் நிருபர் தொலைதூரத்தில் உள்ள லண்டனுக்கு செய்தியனுப்பி, அங்கிருந்து பி.பி.சி. ரேடியோவில் ஒலி பரப்பாகி வரும் நேரத்திற்குள் நம்மால் தில்லியிலிருந்து கல்கத்தாவிற்கு செய்தி அனுப்ப முடியவில்லை.

மருத்துவத்தில் மிக உயர்ந்த படிப்புகளான M.R.C.P., F.R.C.S. ஆகியவற்றை இங்கிலாந்தில் மட்டுமே படிக்க முடியும். உலகிலேயே பணக்கார நாடான பல வளைகுடா நாடுகளில் உள்ள ஆஸ்பத்திரிகளில் M.R.C.P., அல்லது F.R.C.S. படித்தவர்களை மட்டும் டாக்டர் வேலைக்கு அமர்த்துகின்றனர். நம் ஊர் M.B.B.S., M.S. ஆகியவற்றை மதிப்பதில்லை. பொருளாதாரம் படிக்க உலகிலேயே சிறந்த இடம் லண்டன் ஸ்கூல் ஆஃப் எகனாமிக்ஸ். அட்மிஷன் கிடைப்பதே குதிரைக் கொம்புதான். கல்விக் கட்டணம் எவ்வளவு தெரியுமா? இருபது லட்சம்.

உலகிலேயே நமபர் ஒன் போலீஸ் எனில் இங்கிலாந்தில் உள்ள ஸ்காட்லாண்டு யார்டு போலீஸ்தான். இந்திரா காந்தி சுட்டுக் கொல்லப் பட்ட உடன் அது பற்றி துப்பு துலக்க/விசாரணை நடத்த ஸ்காட்லாண்டு யார்டு போலீஸ்காரர் ஒருவர் தில்லிக்கு வரவழைக்கப்பட்டார். அவ்வாறு வந்த ஆங்கிலேய போலீஸ்காரர், சரளமாக பஞ்சாபி மொழி பேசிய தோடில்லாமல் பஞ்சாபியர்களின் நடை, உடை, பாவனைகளையும் தெரிந்து வைத்திருந்தார். (இந்திரா காந்தியை சுட்டுக் கொன்றவன் பஞ்சாபி என்பதால் இந்த போலீஸ்காரர் நம் நாட்டிற்கு அனுப்பி வைக்கப்பட்டார்.)

அகில உலக அளவில் நம்பகமாகவும் விரைவாகவும் செய்தியை தரக்கூடியது லண்டன் பி.பி.சி. ஆனால் அதில் வேலை செய்வோர் எண்ணிக்கை சென்னை வானொலி நிலையத்தில் வேலை செய்பவர்களின் எண்ணிக்கையில் நான்கில் ஒரு பங்குதான்.

பி.பி.சி. டெலிவிஷன் மற்றும் பி.பி.சி. ரேடியோ ஒளிபரப்பும் செய்திகளை பல நாட்டு நிலையங்கள் relay செய்கின்றன. ஆனால் பி.பி.சி. மற்ற எந்த ஒரு நாட்டு டெலிவிஷன் ரேடியோ நிகழ்ச்சியையும் relay செய்வதில்லை. பி.பி.ஸி.யில் விளம்பரங்களுக்கு முக்கிய இடமில்லை.

குறைந்த அளவு விபத்துக்குள்ளாவதும், சரியான நேரத்திற்கு வருவதிலும் பிரிட்டிஷ் ஏர்வேஸ்தான் முதலிடம். தவிர, இதில் வேலை செய்வோர், ஏர் இந்தியாவில் வேலை செய்பவர்களின் எண்ணிக்கையில் பத்தில் ஒரு பங்கு தான்.

இளையராஜா லண்டனுக்குச் சென்று இசை நிகழ்ச்சி நடத்தி 'Maestro' பட்டம் பெற்றதில் தமிழனுக்கு பெருமை இல்லை. இங்கிலாந்துக்குத் தான் பெருமை. பல்வேறு நாடுகளிலிருந்தும் இசைக் கலைஞர்கள் நம்நாட்டிற்கு வந்து நிகழ்ச்சி நடத்தி அவர்களுக்கு நாம் சர்டிபிகேட் கொடுக்கும் அமைப்பை உண்டாக்காத இந்தியாவும், தமிழனும் தலை குனிய வேண்டிய சமாச்சாரம் இது.

நல்ல சாலையில் கார் ஓட்டும் பந்தயத்தில் வெற்றி பெறுவது கார் ஓட்டுபவரின் திறமையைப் பொறுத்தது. ஆனால் கரடு முரடான சாலையில் கார் பந்தயத்தில் முதலில் வருவது வண்டியின் தரத்தைப் பொறுத்த விஷயம் (endurance test.) ஹிமாலயன் கார் ரேஸில் (கரடு முரடான சாலையில் கார் ஓட்டுதல்) முதலில் வந்தது டால்ஃபின் (dolphin) என்ற இங்கிலாந்து தயாரிப்பு கார்தான் (மாருதி அறிமுகமானபோது டால்ஃபின் அறிமுகமாகியது). விளம்பரம் இல்லாததால் டால்ஃபின் கார் விற்பனை குறைந்து விட்டது.

பிரிட்டிஷ்காரன் ஒவ்வொரு துறையிலும் அகில உலக அளவில் மேம்பட்டிருப்பது எப்படி? எல்லா துறைகளிலும் 'நம்பர் ஒன்' ஆக இங்கிலீஷ்காரன் போல் நம்மாலும் ஆக முடியாதா?

மிக அதிக எண்ணிக்கையில் உலக மக்களால், பல மணி நேரம் தொடர்ந்து மிக்க ஆர்வத்துடன் பார்க்கப்படும் கிரிக்கெட் விளையாட்டு

தோன்றியதும் இங்கிலாந்தில் தான். அவர்கள் இவ்வாறு இருப்பதன் ரகசியம் என்ன? வாசகர்களே! சற்று சிந்தியுங்கள்.

இதற்கெல்லாம் காரணம் இங்கிலாந்து காடுகளில் மட்டுமே காணப்படக் கூடிய முப்பத்தி ஏழு மலர்களின் பாதிப்புதான். இவை காற்று வழியாக கலந்து அவர்களை 'நம்பர் ஒன்' ஆக்கிக் கொண்டே இருக்கின்றன.

இம்மலர்கள் இந்தியாவில் மாத்திரை வடிவில் விற்பனை செய்யப்படுகின்றன. முப்பத்தெட்டு மருந்துகளில் நமக்கு தேவையானவற்றை தேர்ந்தெடுத்து சாப்பிட்டு வர விரைவில் நாமும் அகில உலக அளவில் நம்பர் ஒன் ஆகி விடலாம். (அதிக பட்சமாக ஒருவர் ஒரு கால கட்டத்தில் ஐந்து மருந்து வரை சேர்த்து சாப்பிடலாம்).

வியாதிகள் மட்டுமின்றி, வாழ்க்கைப் பிரச்சினை, பணக்கஷ்டம், வேலையில்லாத திண்டாட்டம், குடும்ப சண்டை, ஆன்மீக சந்தேகங்களையும் பாட்ச் மலர் மருந்துகள் தீர்த்து விடுகின்றன.

இம்முறையின் தனிச்சிறப்பு: உயிருக்கு ஆபத்தான பயங்கர சாலை விபத்து, தீக்காயம், பலவித விஷம்/விஷக்கடி மற்றும் மின்சார அதிர்ச்சி ஆகிய 'நிலைமை'களில் (வாசகர்கள் கவனமாக படிக்கவும். இவை உடலின் உள்ளே உண்டாகும் 'வியாதி' அல்ல. 'நிலைமை' மட்டுமே. ஆங்கிலத்தில் 'trauma' என்பர்) **ரெஸ்க்யூ ரெமடி** என்ற மலர் மருந்து இரண்டு மாத்திரை எடுத்து பாதிக்கப்பட்ட நபரின் வாயில் போட அவரை காப்பாற்றி விடலாம் (Rate of success: 99%). இம்மருந்தை வாயில் போட்ட ஒரு நிமிடத்திற் குள்ளாகவே

(1) வெட்டுக்காயம் பட்டு அதிலிருந்து இரத்தப்பெருக்கு ஏற்பட்டால் காயம் எவ்வளவு ஆழமாக, நீளமாக இருந்தாலும், கட்டு ஏதும் போடாமலேயே ஒரு நிமிடத்திற்குள்ளாகவே, இரத்தம் வருவது நின்று விடுவதை பல வாசகர்கள் கண்கூடாக பார்த்துள்ளனர்.

(2) விபத்தினால் ஏற்பட்ட பயங்கர வலி உடனடியாக, முழுவதும் குறைந்து விடுவதால் "ஐயோ, அம்மா!" என்று அலறுவது குறைந்து அமைதியாகி விடுவார். **ரெஸ்க்யூ ரெமடி** 'வலி நிவாரணி' அல்ல. ஆனால் விபத்து, விஷக்கடி, தீக்காயத்தினால் ஏற்படும் வலிகளை மட்டுமே குணப்படுத்தும்.

(3) மயக்கமாயிருந்தால், மயக்கம் தெளிந்து எழுந்து (எலும்பு முறிவு கேஸ் தவிர) ஒன்றுமே நடக்காதது போல் வீட்டிற்கு நடந்து சென்று விடுவார்.

(4) பாம்பு, தேள், பூரான், வண்டு ஆகிய விஷங்கள் முறிந்து செயலற்று விடுகின்றன.

(5) பட்டாசு காயம், அடுப்படியில் கொதிக்கும் திரவம் உடல் மீது கொட்டி விடுவது போன்ற தீக்காயங்களில் (extensive burns) உடனடியாக டாக்டரிடம் சென்றாலும் கூட எரிச்சல் குறையவோ, அல்லது

மறுதினம் கொப்புளம் உண்டாகாமல் தடுக்கவோ அல்லோபதியில் மருந்து கிடையாது. Rest cure-தான். மறுநாள் தோல் கொப்புளித்து 3-5 தினம் அதில் தண்ணீர் படாமல் வைத்திருந்து ஆபீசுக்கு லீவு போட்டு இத்யாதி, இத்யாதி.

நெருப்புக்காயம் ஏற்பட்டு சில மணிநேரம் வரை வலி, எரிச்சல் இருக்கும். இவை குறைந்த பிறகு கொப்புளம் உண்டாகி அது ஆறுவதற்கு சில நாட்களாகும். ஆனால் விபத்துகளில் சில மணிநேரத்திற்குள்ளாக (எரிச்சல் இருக்கும் போது, கொப்புளம் உண்டாவதற்கு முன்பாக) **ரெஸ்க்யூ ரெமடி** ஒரேயொரு டோஸ் (இரண்டு மாத்திரை) வாயில் போட, எரிச்சல், வலி உடனடியாக முழுவதும் குறைவதோடில்லாமல் மறுநாள் கொப்புளம் வராது. தீக்காயம் பட்ட சுவடே இருக்காது. ஆகையால் மறுதினம் குளிக்கலாம். ஆபீஸ் செல்லலாம்.

முதல் உதவி பெட்டியை தூக்கி எறியுங்கள்!

சாலையில் ஸ்கூட்டர்/கார் பாதசாரி மீது ஏறி அவன் மயக்கமடைந்து, இரத்தம் கொட்டிக்கொண்டிருக்கும் நிலையில் அவனை ஆஸ்பத்திரியில் சேர்த்து அவன் "அபாய கட்டத்தை தாண்டி விட்டான் (out of danger)" என டாக்டர்கள் சொல்லும்வரை வண்டி ஓட்டியவரை போலீஸ் 'லாக்-அப்'ல் வைத்திருப்பார்கள்.

ஆனால், எப்பேர்ப்பட்ட விபத்திலும் (எலும்பு முறிவு தவிர) உங்கள் வாகனத்தில் அடிபட்ட நபரின் வாயில் (பேச்சு, மூச்சற்ற நிலையில் கூட) மேற்சொன்ன **ரெஸ்க்யூ ரெமடி** இரண்டு மாத்திரை எடுத்து போட, அவர் எழுந்து ஆஸ்பத்திரி, போலீஸ் ஸ்டேஷன் என்றில்லாமல் வீட்டிற்கு சென்று விடுவார்.

[விபத்தில் எலும்பு முறிவு கேசிலும் **ரெஸ்க்யூ ரெமடி** கொடுக்க வலி, இரத்தப்பெருக்கு குறைந்தாலும் ஆஸ்பத்திரி சென்று முறிந்த எலும்பு முனைகளை பழைய நிலையில் வைத்து மாவு கட்டு போட வேண்டும்.]

அடுத்து வரும் பக்கங்களில் என்னென்ன மலர் மருந்து எப்படி வாழ்க்கைப்பிரச்சினை, ஏழ்மை ஆகியவற்றை நீக்கும் என படிக்கப் போகிறோம்.

சில வாசகர்கள் (தான் புத்திசாலித்தனமாக இருப்பதாக நினைத்து) "அதெப்படி, கட்டு போடாமலேயே இரத்தம் வருவது நிற்கும்?" "அதெப்படி மருந்து சாப்பிட்டால் பணம் வரும்?" என்ற தாறுமாறான தேவையில்லாத கேள்விகளை கேட்டுக்கொண்டேயிருப்பார்களேயல்லாது, தமது தேவைக்கேற்ற மருந்தை சாப்பிட்டு பார்க்க சிறிதும் முயல மாட்டார்கள். மருந்தை சாப்பிட்டு பார்த்து பணத் தட்டுப்பாடு மற்றும் வாழ்க்கை பிரச்சினைகள் தீர்ந்து விடுகிறதா, இல்லையா என சொல்லட்டுமே!

கேள்விகள் கேட்டால் இம்முறையை கற்றுக்கொள்ள முடியாது. போகாத ஊருக்கு வழி. ஆயினும் இந்த புத்திசாலிகளுக்கு பதில் சொல்கிறோம்.

ஜனாதிபதியின் gallantry award (வீர, தீரச்செயலுக்காக) எவருக்கு கொடுக்கப்படுகிறது தெரியுமா?

நீச்சல் நன்றாக கற்று, நீரில் மூழ்குபவரை காப்பாற்றுவதில் பயிற்சி பெற்றிருக்கும் ஒருவர், நீரில் மூழ்கியவனை காப்பாற்றினால் அவனது அச்செயலுக்கு ஜனாதிபதி மெடல் கிடையாது. ஆனால், தன்னைவிட வயது, உருவம் மற்றும் எடை அதிகமுள்ள, நீச்சல் தெரியாமல் தண்ணீரில் மூழ்கிக்கொண்டிருக்கும் ஒரு நபரை, நீச்சல் தெரியாத ஒரு பையன் காப்பாற்றி விட்டால் அவனுக்குத்தான் மெடல்.

அது சரி! அந்த பையனால் எப்படி அந்த நபரை காப்பாற்ற முடிந்தது? (வேறு ஒரு சந்தர்ப்பத்தில், இவனே தண்ணீரில் எதிர்பாராதவிதமாக விழுந்திருந்தால்கூட நீச்சல் தெரியாததால் மூழ்கி இறந்திருப்பான்.) இந்த கேள்விக்கு உங்களால் பதில் சொல்ல முடியுமா? முடியாது. அதே போல்தான் (தனக்கு பொருத்தமான) மலர் மருந்து சாப்பிட பணம் வரும். இம்மருந்து எப்படி வேலை செய்கிறது என்பது எங்களுக்கு தெரியாது. அதைத் தெரிந்துகொள்ள முடியாது. தெரிந்துகொள்ள வேண்டியதும் இல்லை.

Nature keeps her ways secrets. நாம் இயற்கைக்கு கட்டுப் பட்டவர்கள். நமது ஆயுள் வெறும் நூறு வருடம்தான். இயற்கை ஆதி அந்தம் இல்லாதது. இயற்கையை நாம் உண்டாக்கவில்லை. இயற்கைதான் நம்மை படைத்தது.

இயற்கை படைத்த நூறு வருடமே வாழக்கூடிய நமது சிறிய மூளையை உபயோகித்து அண்டம் முழுவதும் பரவியிருக்கும் கோடிக் கணக்கான வருடங்களுக்கும் மேலாக (infinite) உள்ள இயற்கை படைத்த (இங்கிலாந்து காடுகளில் மட்டுமே காணப்படக்கூடிய) காட்டு மலர்கள் எவ்வாறு வேலை செய்கிறது என தெரிந்து கொள்ள முடியாது.

எப்படி வேலை செய்கிறது என்பதை சொல்ல முடியாது. ஆனால் என்ன (results, பலன்) செய்கிறது என்பதைத்தான் சொல்ல முடியும்.

டைம்ஸ் ஆஃப் இந்தியா என்ற தினசரி பத்திரிகையில் பணிபுரிந்த கார்டூனிஸ்ட் ஆர்.கே. லஷ்மண் என்பவர் காக்கை படங்கள் வரைந்து தள்ளுவார். அவை ஒவ்வொன்றும் ரூபாய் 200, 400 என விற்று தீர்ந்து விடும். ஆனால் எவராவது உயிருள்ள காக்கையை கொண்டு வந்து கொடுத்தால் இருபது ரூபாய்கூட கொடுக்க மாட்டேன் என்கிறார்கள். வெறும் காக்கை படத்திற்கு (இயற்கையில் உயிருள்ள காக்கையைப் பார்த்து அப்படியே காப்பியடிப்பவருக்கு) 200, 400 ரூபாய். ஆனால் உயிருள்ள காக்கையை கொடுத்தால் எவருமே வாங்க மாட்டேன் என்கிறார்.

காப்பியடிப்பவனுக்கு அவ்வளவு மரியாதையா?

இதற்கு வாசகர்களால் பதில் சொல்ல முடியுமா? முடியாது. இதே போல்தான் மலர் மருந்துகள் எவ்விதம் வேலை செய்கிறது என சொல்ல முடியாது.

பல வாசகர்கள் அனுபவத்தில் பார்த்தவற்றை மட்டுமே அப்படியே அநேக மருந்துகளின் கீழே எழுதுகிறோம்.

மற்றும் ஒரு விளக்கம் கொடுக்க கடமைப்பட்டுள்ளோம். இவை ஏதோ (தமிழகத்தில் மட்டுமே காணப்படக் கூடிய) 'வசிய' மருந்து அல்லது 'இடு' மருந்து போன்றவை என சில வாசகர்கள் தவருக நினைக்கக்கூடும். ஆனால் இவை அப்படி அல்ல.

இம்மருந்துகளுக்கு பின்விளைவு, பக்க விளைவு (side-effects, after-effects). கிடையாது. பத்தியமில்லை. மற்ற மருந்துகள் சாப்பிடும்போதும் சாப்பிடலாம். சாப்பாட்டிற்கு முன்பு/பின்பு என்பது இல்லை. பிறந்த குழந்தை முதல் கர்ப்பிணி ஸ்திரீ வரை எவரும் சாப்பிடலாம்.

தான் M.B.B.S. படிக்காமல் மற்றவர்களுக்கு 'மருந்து' கொடுத்து அது ஏதாவது ஆகி விட்டால் என 'பயப்படும்' பயந்தாங்கொள்ளிகளுக்கு ஒரு வார்த்தை: உனக்கு 'பயமாயிருக்கும்' பட்சத்தில் பத்து மாத்திரை ரெஸ்க்யூ ரெமடி சுமார் ஒரு அவுன்சு நீரில் கரைத்து, விபத்தில் பாதிக்கப்பட்ட நபர் உடல் மீது (எங்காவது) தடவி விடு. (மாத்திரைகளை தண்ணீரில் போட்ட மறு விநாடியே அதில் உள்ள மருந்தை தண்ணீர் முழுவதும் உறிஞ்சிக் கொண்டுவிடும் என்பதால், மாத்திரை கரையாமல் அப்படியே இருந்தாலும் பரவாயில்லை.) மாத்திரையை வாயில் போட்டு சுவைத்து சாப்பிட்டால் என்ன பலன் கிடைக்குமோ அதே பலன் மருந்தை நீரில் கரைத்து உடல்மீது தடவுவதாலும் கிடைக்கும்.

இம் முறையில் மொத்தம் முப்பத்தி ஒன்பது மருந்துகள் உள்ளன. எல்லாம் ஒரே விலை தான். ஒவ்வொன்றும் 300 மாத்திரைகளடங்கிய 5ml புட்டி விலை ரூ.20=00 மட்டுமே. எவ்வயதினராயினும் இரண்டு மாத்திரை சுவைத்து சாப்பிடவும். பத்தியம், பக்க விளைவு இல்லை. மருந்து சாப்பிட மறுக்கும் மண்டைக்கனம், அடங்காப்பிடாரிகளுக்கு ஐந்து மாத்திரைகளை அவர்கள் குடிக்கும் தண்ணீர், காபி, டீயில் கலந்து கொடுக்கலாம். மருந்து தபாலில் பெற M.O. அனுப்பி M.O. கூப்பனில் மருந்துகளின் பெயர், உங்கள் முழு விலாசம் உட்பட எழுதி Dr. கிருஷ்ணமூர்த்தி, Raman House, 21 குப்பையா தெரு, சென்னை-33. என்ற முகவரிக்கு அனுப்பவும். (தபால் சிலவு இனாம்.)

உங்கள் வீட்டு வேலைக்காரி வேலைகளை அரைகுறையாக, அசிரத்தையாக செய்கிறாள் அல்லது அடிக்கடி லீவு போடுகிறாள் எனில் அவள் தனது பொறுப்புகளை தட்டிக் கழித்து அதிலிருந்து தப்பிக்க பார்க்கிறாள் என்றுதானே அர்த்தம்?

செஸ்ட்நட்பட் என்ற மலர் மருந்து ஐந்து மாத்திரைகளை இவளுக்கு நீங்கள் தினம் காபியில் (அல்லது அவள் குடிக்கும் பால், தேனீர் அல்லது தண்ணீரில்) போட்டு கொடுத்து வர, வேலைகளை ஒழுங்காக, தட்டிக் கழிக்காமல் செய்வாள்.

*செஸ்ட்நட்பட்* என்ற மலர் மருந்து ஒருவர் சாப்பிட அது என்ன செய்யும்?

இம் மருந்து எவரையும் 'சுறுசுறுப்பு' அடையும்படி செய்யாது.

பொய் சொல்லி 'தப்பிக்கும்' மனப்பான்மை வியாதியின் அறிகுறி. அதைமட்டும் இம்மருந்து நீக்கி விடுகிறது. தினசரி வாழ்க்கையில் இந்த மருந்து தேவைப்படும் நிலைமைகளை பார்ப்போம்.

வீட்டில் தங்க சங்கிலி திருடு போய்விட்டது. வேலைக்காரி மேல் சந்தேகம் வந்தால் தண்ணீர்/ஜூஸ் அல்லது காபியில் இம் மருந்து (**செஸ்ட்நட்பட்** மாத்திரை ஐந்து) போட்டு கொடுத்தால், ஒரு வேளை அவள் திருடியிருந்தால் அவளாகவே (அடி, உதை இல்லாமல்) திருட்டை ஒப்புக் கொண்டு சங்கிலியை திருப்பி கொடுத்து விடுவாள்.

இங்கு நாம் மிக மிக கவனமாக தெரிந்து கொள்ள வேண்டியது என்னவெனில் **செஸ்ட்நட்பட்** என்ற இந்த மலர் மருந்து உண்மையை கண்டுபிடிக்கும் வேலையை செய்வதில்லை. பின் என்ன செய்கிறது. பொய் சொல்லி 'தப்பிக்கும்' மனப்பான்மையை நீக்கி விடுவதால், உண்மையை ஒப்புக் கொள்கிறாள்.

தமிழ் படிக்க தெரிந்திருந்தாலும் பலர் "ஆங்கிலத்தில் மலர் மருந்து பற்றி புத்தகம் இருக்கிறதா?" என்று கேட்கின்றனர். இங்கிலீஷில் புத்தகம் எழுதுவது பற்றி எமக்கு பிரச்சினை ஏதுமில்லை. ஆனால் சரியான இங்கிலீஷில் எழுதினால் இங்கிலீஷ்காரனால் மட்டுமே புரிந்து கொள்ள முடியும்.

உதாரணமாக "கோபத்தில் கத்துவது, ஆத்திரத்தில் பொருட்களை உடைப்பது, தாங்கமுடியாத தாகம்" என்பதற்கு **செர்ரி ப்ளம்** என்ற மலர் மருந்து கொடுக்கப்பட வேண்டும் என்றால் தமிழ் பேசத் தெரிந்தவர்கள் புரிந்து கொள்வர். ஆனால் இதையே ஆங்கிலத்தில் சரியாக எழுத வேண்டுமானால் "mind giving way" "fear of loss of reason" என்று தான் சொல்லவேண்டும். இப்படி சொல்வதால் ஆங்கிலம் தெரிந்த இந்தியர்களால் **செர்ரி ப்ளம்** பற்றி புரிந்து கொள்ள முடியுமா?

இதேபோல் "அலட்சியம், எதிலும் ஈடுபாடு, அக்கறையின்மை," என்றால் **வைல்டு ரோஸ்** கொடுக்கப்பட வேண்டும். இந்த மன நிலையை ஆங்கிலத்தில் பேசினால், படித்தால்தான் கௌரவம் என்று நினைப்பவர்களுக்காக சரியாக சொல்ல வேண்டுமானால் misanthropy அல்லது phlegmatic flaccidity என்போம். சுத்தமாக புரிந்து கொள்ள முடியாது.

**மலர் மருந்துகளை வெற்றிகரமாக பிராக்டீஸ் செய்து வருபவர்கள்:**

Dr. மதனகோபால், M.B.B.S., D.A., Anaesthetist, அரசு மருத்துவமனை, பழனி • Dr. ரமா, M.B.B.S., 7, கார்ப்பரேஷன் காலனி, R.S. புரம், கோவை - 2. • சகோதரி க்ளேர், ICM, St. Joseph's Hospital, திண்டுக்கல் • திரு. ஹரிஹரன், 4, வி. வி. கோவில் தெரு, சென்னை - 12, போன் : 2661627б,

28190476 • Dr. C.T. மணியன், பெங்களூர் (Phone: 23286859, 23289967) • திரு. V. S. ஸ்ரீ கிருஷ்ணன், B.A., LL.B., Advocate, 8A, இரண்டாவது தெரு, SAIT Colony, Egmore • திரு. அதிரூபன் பாலாஜி, Chief First Aider, சென்னை துறைமுக ஆஸ்பத்திரி • திரு. J. ராஜன், 37, பெரிய பள்ளி தெரு, மந்தவெளிப்பாக்கம். (✆ 24943268) • திரு. கபாலீஸ்வரன், புதிய எண் 13, (பழைய எண் 7) First Main Road, C.I.T. காலனி, மயிலாப்பூர். (✆ 9841051802, 24991803) • Dr. Mrs. Zarina, பெங்களூர் (Phone: 25546883) • Dr. G.R. Naidu, Hubli • M. திருநாவுக்கரசு, Executive Engineer, TNEB, Ph. : 9840112394, 24748290, 24850607• • Mr. Thomas Coke, M.A., 18, கக்கன் தெரு, தாம்பரம் மேற்கு, போன் : 9444012259, 2266552 • Mr. Parasuraman, Retd. Police Inspector, சாய்நாதபுரம், வேலூர். • Ms. Lakshmi Shriniwas, Old No. 120 (New 58), அய்யா முதலி தெரு, சித்தாதிரிப்பேட்டை மார்க்கெட் எதிரில், போன் : 28550016 • Dr. K. ராஜேஸ்வரி, ஆரிய வைத்ய பார்மஸி, 27/7, M.T.H. Road, வில்லிவாக்கம். நாதமுனி தியேட்டர் எதிரில், தொலைபேசி : 2617 1318, 2654 7719 • Dr. G. Jayanthi, B.Sc., 50, ஜான் செல்வராஜ் நகர், கும்பகோணம், போன் : 2410591 • Dr. M.S. நவாப்ஜான், 21A, நாகப்பன் மெயின் ரோடு, லைன்மேடு, சேலம் - 6 • பயோ டாக்டர் மாணிக்கம், இராஜகணபதி ஹோமியோ ஸ்டோர், மோகன் லாட்ஜ் பில்டிங், F.F. ரோடு, சேலம்-1• Dr. பிரபா இராமதுரை, A-4, 5-வது மாடி, சில்வர் பார்க் அபார்ட்மெண்ட்ஸ், 36, தணிகாசலம் ரோடு, (இந்தி பிரச்சார சபா எதிரில்) தி. நகர், சென்னை-17, போன் : 24338505 • Dr. கோபாலகிருஷ்ணன், 17 ஸ்ரீராம் காலனி, தாம்பரம் சானடோரியம், போன் : 22237769 • Dr. ஹேமமாலினி, PLOT 17, 4வது தெரு, சுதர்சன் நகர், மாடம்பாக்கம், போன் : 22270659

எமது 4-தினம் நேர்முக வகுப்பில் (கட்டணம் : ரூ.3800) பாட்ச் மலர் மருத்துவம் கற்று இதன் பின் பரீட்சை எழுதி (பரீட்சை கட்டணம் : ரூ. 3800) டிப்ளமோ பெற்று, அதன் பின் Registration Certificate (Reg. Fee : Rs.1200) பெற்று மலர் மருத்துவம் பிராக்டீஸ் செய்ய ஆரம்பித்து, ஓய்வு நேரத்தில் மாதா மாதம் பல ஆயிரம் சம்பாதிப்பவர்களின் எண்ணிக்கை பதினைந்தாயிரத்தை தாண்டி விட்டது.

நேர்முக வகுப்பு பிரதி மாதம் கடைசி நான்கு நாட்கள் நடைபெறுகின்றன. வகுப்பில் சேர விரும்பும் அன்பர்கள் இரண்டு மாதம் முன்பாகவே முழு கட்டணம் ரூ. 3800 செலுத்தி பெயர் பதிவு செய்து கொள்ளவும். நேர்முக வகுப்பில் சேர விண்ணப்ப பாரத்திற்கு ரூ. 50 மணி ஆர்டர் செய்க.

## மலர் மருத்துவ முறையில் வியாதிகளை குணப்படுத்தும் முறை

### *(குரு-சிஷ்ய சம்வாத முறையில் எழுதப்பட்டது)*

குரு : எனது தெரு கடைசி வீட்டிலிருக்கும் சப்-இன்ஸ்பெக்டர், ஆள் அனுப்பி என்னை வரச்சொல்லவே, சென்று பார்த்தேன். அவர் இரண்டு கால்களையும் அகட்டி முழங்காலை மடித்து மல்லாந்து படுத்த நிலையில், இடுப்பிற்கு கீழே உடை ஏதுமில்லாமல் ஆசன வாய்க்கு நேர் எதிரே மூன்றடி தள்ளி டேபிள் ஃபேன் சுழன்று கொண்டிருந்தது. அவர் மனைவி, ''டாக்டர், அவருக்கு எல்லா வைத்தியமும் பார்த்தாகிவிட்டது'' மூலவியாதி வலி குறையவே இல்லை,'' என்றார். ''எதற்கு ஃபேன் ?'' என்று நான் கேட்டதற்கு அந்த சப்-இன்ஸ்பெக்டர், ''(ஆசன மூலவியாதியில்) எரிச்சல் தாங்க முடியவில்லையே'', என அரற்றினார்.

செர்ரி ப்ளம் என்ற மலர் மருந்து இரண்டு மாத்திரை எடுத்து அவர் வாயில் போட்டேன், அடுத்த ஒரு நிமிடத்திற்குள்ளாக அவர் எழுந்து வலி குறைந்ததாக சொல்லி, தன் மனைவியைக் கூப்பிட்டு எனக்கு நூறு ரூபாய் கொடுக்கச் சொன்னார். **செர்ரி ப்ளம்** ஒரு பாட்டிலை அவரிடம் கொடுத்து தினம் மூன்று வேளை சாப்பிடும்படி கொடுத்துவிட்டு வந்தேன். முன்று வருடமாகியும் இன்று வரை மூலவியாதி திரும்பவே இல்லை.

சிஷ்யன் : ஓகோ! மூல வியாதியை **சொரி ப்ளம்** என்ற மலர் மருந்து அடியோடு குணமாக்கி விடுமா?

குரு : உன் கேள்விக்கு நான் பதில் சொல்லும் முன்பு இன்னும் இரண்டு கேஸ்களை சொல்கிறேன் கேள். அதன் பிறகு நீ கேள்வி கேட்கலாம். பிரசவ நேரத்தில் வார்டில் இருந்த கர்ப்பஸ்திரி ''ஐயோ, ஐ....யய்யோ........,'' என மணிக்கணக்கில் கத்திக்கொண்டிருந்தாள். அவளுக்கு **செர்ரி ப்ளம்** கொடுத்தேன். அதிக வலி குறைந்து அடுத்த ஐந்தாவது நிமிடத்தில் சுகப்பிரசவம் ஆகியது.

சிஷ்யன்: ஓகோ, **செர்ரி ப்ளம்** சுகப்பிரசவத்திற்கும் ஏற்றதா? பரவாயில்லையே !

(இந்த சமயத்தில் பக்கத்து வீட்டு பெண்ணிற்கு கொதிக்கும் தேநீர் உடல் மீது கொட்டி அதனால் துடித்துக்கொண்டிருக்கும் நிலையில் அவளை அழைத்து வந்தனர். அவள் 'ஆ!..... ஐயோ......' எனக்கத்திக் கொண்டிருந்தாள். அவள் வாயில் **செர்ரி ப்ளம்** இரண்டு மாத்திரை போட்ட சிறிது நேரத்தில் சாந்தமாகி, தேநீர் கொட்டிய இடத்தில் ஏற்பட்ட எரிச்சல் குறைந்து விட்டதாக சொன்னார். அடுத்த 5 நிமிடங்களில் வலி முழுவதும் குறைந்து விடவே வீட்டிற்கு திரும்பினாள்) (இதைப்பார்த்த சிஷ்யன் கேட்கிறான்.)

சிஷ்யன் : என்ன இது? நெருப்பு காயத்திற்குக்கூட சொர்ரி ப்ளம் தானு? இது என்ன சர்வரோக நிவாரணியா?

குரு : உன் கேள்விக்கு 'ஆம்' என்றும் பதில் சொல்லலாம்; 'இல்லை' என்றும் பதில் சொல்லலாம்.

சிஷ்யன் : என்ன குழப்புகிறீர்கள்?

குரு : இதில் குழப்பம் ஏதுமில்லை. இந்த வைத்திய முறை ஆரம்பத்தில் கற்றுக் கொள்ள வருபவர்களுக்கு சிறிது குழப்பமாக தெரியும். போகப்போக சரியாகிவிடும்.

**சொர்ரி ப்ளம்** எல்லா மூல வியாதிக்கும் ஏற்ற மருந்து அல்ல. அதற்கும் சுகப்பிரசவத்திற்கும் சம்பந்தமே இல்லை.

சிஷ்யன் : என்ன மறுபடியும் குழப்புகிறீர்கள்? மூல வியாதி இருந்த சப்-இன்ஸ்பெக்டரை இந்த மருந்துதான் குணப்படுத்தியதே! அந்த கர்ப்பஸ்த்ரீக்கும் இதே மருந்து கொடுக்க சுகப்பிரசவமும் ஆகியதே!

குரு : மூல வியாதி, கஷ்டப்பிரசவம் என வியாதிகளை மட்டுமே நீ பார்க்கிருய். மனிதர்களைப் பார்க்கவில்லை. அவர்கள் சொல்வதைக் கேட்கவில்லை.

சிஷ்யன் : என்ன மறுபடியும் உளறுகிறீர்கள்? என்னை ஒரேடியாக குழப்ப வேண்டும் என்று தீர்மானம் செய்துள்ளீர்களா? அதுதான் இன்ஸ்பெக்டருக்கு மூலவியாதி என்று அவன் மனைவி சொன்னுளே. பிரசவ வார்டில், பிரசவ நேரம் என்று பெண்ணின் அம்மா உங்களிடம் சொன்னுரே.

குரு : மறுபடியும் சொல்கிறேன். நீ 'மூலவியாதி' 'கஷ்டப்பிரசவம்', என மட்டுமே பார்க்கிருய். ஆனுல் அவர்கள் அந்த நிலமையில் என்ன சொல்கிருர்கள் என்று பார்க்கவில்லை.

சிஷ்யன் : அவர்கள் என்ன சொன்னுல் அதற்கு இப்போது என்ன? மூல வியாதிதானே முக்கியம். நோயாளிகள் தனக்கு இந்த வியாதி, அந்த வியாதி என்றுதானே சொல்லி வருகிருர்கள்? நீங்கள் என்ன புதிதாய் கண்டுபிடித்து விட்டீர்கள்?'

குரு : 'மூலவியாதிக்கு', என நான் **சொர்ரி ப்ளம்** கொடுக்கவில்லை. 'கஷ்ட பிரசவம்' என்பதன் பேரிலும் இம்மருந்தை தரவில்லை.

சிஷ்யன் : மறுபடியும் உளறலா? அப்படியானுல் ஒரே மருந்து எப்படி வெவ்வேறு வியாதியை குணப்படுத்தியது? மந்திரம் ஏதாவது போட்டீர்களா? சொல்லுங்கள்.

குரு : மந்திரமும் இல்லை, தந்திரமும் இல்லை. சப்-இன்ஸ்பெக்டர் என்ன செய்தார்? "ஆ .... ஐயோ ..... எரிச்சல் தாங்க முடியவில்லையே" என பற்களை கடித்தவாறு சொன்னார். பிரசவ நேரத்தில் அந்த கர்ப்பிணி, "ஆ, ஐயோ .... ஐயய்யோ...." என கத்தினாள். கொதிக்கும் தேநீர் உடல் மீது கொட்டிவிட்ட பக்கத்து வீட்டுப்பெண், 'ஆ, ஐயோ' என்றாள்.

சிஷ்யன் : அதற்கு இப்போது என்ன? வலியில் எவரும் கூப்பாடு போடத்தானே செய்வார்கள்?

குரு : உலகில் மூலநோய் உள்ள எல்லோருமே கத்துகிறார்களா? இல்லையே. பிரசவ வார்டில் பிரசவத்தை எதிர்நோக்கியுள்ள எல்லோருமே, 'ஆ! ஐயோ' என்று கத்திக் கொண்டிருக்கிறார்களா? இல்லையே!

மூலவியாதி என்பதற்காகவோ, பிரசவத்தில் சிக்கல் என்பதற்காகவோ, கொதிக்கும் திரவம் உடல் மீது கொட்டியது என்பதின் பேரிலோ நான் **செர்ரி ப்ளம்** கொடுக்கவில்லை. மூலவியாதி உள்ள இன்ஸ்பெக்டர் எரிச்சல் **'தாங்க முடியவில்லையே'** (gnashing the teeth) என **கத்தினார்**. பக்கத்து வீட்டுப்பெண் எரிச்சல் தாங்காமல் 'ஆ, ஐயோ' என்று கத்தினாள்.

வலி, எரிச்சல் தாங்காமல் மூவரும் கத்தினார்கள். மூன்று பேர்களின் வியாதிகள் வெவ்வேறு. ஆனால் அதன் விளைவாக அவர்கள் பேசுவது அல்லது செய்வது ஒன்றே.

வலி, எரிச்சல் 'தாங்க முடியாமல்' போய் கத்துபவர்கள் அல்லது அழுபவர்கள், அல்லது தற்கொலையை நாடுபவர்களுக்கு **செர்ரி ப்ளம்** கொடுக்க, அவர்களுடைய வியாதி எதுவாக இருந்தாலும்,இம்மருந்து குணப்படுத்தும்.

சிஷ்யன் : கனமான பக்கெட் கால் கட்டை விரல் மீது விழுந்து, விரல் நசுங்கி இரத்தம் வந்தால், அல்லது வேறு விபத்து, அடிபடுதல் ஆகியவற்றில் எவரும் 'ஆ, ஐயோ' என்றுதான் கத்துவார்கள். அவர்களுக்கு **செர்ரி ப்ளம்** கொடுத்தால், ரத்தம் கொட்டுவது நிற்பதோடு வலியும் குறைந்து விடும்; சரிதானே?

குரு : நீ சொல்வதில் பாதிதான் சரி. விபத்தில் அடிபட்டு கத்தினால் மட்டுமே **செர்ரி ப்ளம்** உதவும்.

(இந்த சம்பாஷணை நடந்த மறுதினம் இரவு, அந்த சிஷ்யன் வீட்டில் திடீரென மின்சாரம் நின்று விடவே (பவர் கட்) இருட்டில் அவசரமாக பாத்ரூமிற்குள் செல்ல முயற்சித்த போது பாத்ரூம் செல்லும் வழியில் இருந்த தண்ணீர் நிறைந்த பக்கெட் தடுக்கி நிலை தடுமாறி பாத்ரூம் சுவற்றில் அவன் தலைமோதி, அங்கிருந்த கூரான

ஆணி தலையில் குத்தி, ரத்தம் பீறிட்ட நிலையில் கத்தினான். "ஏண்டி சனியனே! வழியில் குறுக்கே பக்கெட்டை வைக்காதே என்று எத்தனை முறை உனக்கு சொல்லியிருக்கிறேன். உன்னால் (நீ செய்த செயலால்) நான் பக்கெட் தடுக்கி விழுந்து, தலையில் ஆணி குத்தி ரத்தம் கொட்டுகிறது."

(பக்கத்து வீட்டில் இருந்த நான் இவன் கூச்சல் கேட்டு போய்ப் பார்த்து அவனுக்கு **வில்லோ** என்ற மலர் மருந்து இரண்டு மாத்திரை கொடுத்து வாயில் போட்டு சப்பி சாப்பிட சொன்னேன். அடுத்த சில விநாடிகளில் (கட்டு ஏதும் போடாமலேயே) இரத்தம் கொட்டுவது குறைய ஆரம்பித்து ஒரு நிமிடத்திற்குள் முழுவதும் நின்று விட்டது.

என் கையில் அதுவரை வைத்திருந்த பாட்டிலை சிஷ்யன் வாங்கி, "இது என்ன? நேற்று நீங்கள் கொடுத்த **செர்ரி ப்ளம்** பாட்டிலா?" எனக் கேட்டு பாட்டில் மீது இருந்த லேபிளைப் பார்த்து, "இதில் **வில்லோ** என்றல்லவா போட்டியிருக்கிறது?" என்று ஆச்சர்யப்பட்டான். இதற்குள் அவனுக்கு வலியும் நன்றாக குறைந்திருந்தது. (மறுதினம் காயம்பட்ட சுவடே தெரியாமல் ஆறி விட்டிருந்தது.)

சிஷ்யன் : நீங்கள் ஏன் எனக்கு **செர்ரி ப்ளம்** கொடுக்கவில்லை. இதற்கும் **வில்லோ**விற்கும் என்ன வித்தியாசம்?

குரு : இப்பொழுதுதான் நீ சரியாக கேள்வி கேட்க ஆரம்பித்திருக்கிறாய். அதாவது இந்த முறையைக் கற்க முதல் படியில் காலை வைக்கிறாய்.

நேற்று நான் சொன்ன சப்-இன்ஸ்பெக்டர் 'வலி' தாங்க முடியவில்லை ஐயா' என்றான். தேனீ காலில் கொட்டிய பெண்மணியும், பிரசவ நேரத்தில் இருந்த பெண்மணியும், பிரசவ நேரத்தில் இருந்த பெண் மணியும், 'ஆ .... ஐயோ.... அய்யய்....யோ....', என்று கத்தினார்கள். வலி **தாங்க முடியாமல்** போய் ஆத்திரத்தில் பல்லை கடிப்பவர்கள், வீறிட்டலறுபவர்கள், அழுபவர்களுக்கு (அவர்களுக்கு உடல் வியாதி எதுவாயினும்) **செர்ரி ப்ளம்** கொடுக்க குணமாகி விடுவார்கள். ஆனால் நீ நேற்று தலையில் பாத்ரூம் சுவற்றில் இருந்த ஆணி குத்தி, 'ஆ, ஐயோ' எனக் கத்தவில்லை. மாறாக என்ன சொன்னாய்?

சிஷ்யன் : நேற்று எனக்கும் வலி தாங்க முடியவில்லைதான்.

குரு : உனக்கு வலி தாங்க முடியாமல் இருந்திருக்கலாம். ஆனால், நீ 'வலி தாங்க முடியவில்லையே', என்று சொல்லவோ அல்லது, 'ஆ... ஐயோ . . .!' என்று அரற்றவோ, அழவோ இல்லை. மாறாக என்ன சொன்னாய்?

சிஷ்யன் : (ஞாபகப்படுத்திக் கொண்டு) நான் என்ன சொன்னேன்?

குரு : பாத்ரூம் போகும் வழியில் உன் மனைவி பக்கெட் வைத்திருந்ததால்தான் நீ தடுமாறி, பாத்ரூம் சுவற்றின் மீது தலை மோத நேர்ந்தது என உன் மனைவியை குற்றம் சொன்னாய்.

சிஷ்யன் : ஆமாம். அதற்கென்ன இப்போது? அவள்தானே வழியில் பக்கெட் வைத்திருந்தாள்? அது தடுக்கி விழுந்துதானே சுவற்றில் என் தலை மோதியது?

குரு : அதெல்லாம் சரி. ஆனால் மற்றவர்களைப் போல் நீ " ஆ, ஐயோ", என்று கத்தாமல், "ஏண்டி வழியில் பக்கெட்டை வைத்தாய்? உன்னால் எனக்கு தலையில் அடிப்பட்டு ரத்தம் வருகிறது" என உன் மனைவி மீது குற்றம் சொன்னாய். அவள் செய்தது சரியா, தவறா என்பதல்ல இப்போது கேள்வி. நீ என்ன பேசினாய் என்பதுதான் மிக முக்கியம். உன் மனைவி மீது குற்றம் சொன்னாய். தன் கஷ்டத்திற்கு பிறர் மீது குற்றம் சொல்லும் நபருக்கு **வில்லோ** (blaming others) கொடுக்கப் பட வேண்டும். நேற்று உனக்கு நான் **செர்ரி ப்ளம்** கொடுத்திருந்தால், உன் தலையிலிருந்து ரத்தம் வருவதோ, வலியோ குறைந்திருக்காது.

சிஷ்யன் : இது என்ன எல்லாம் புதிதாக இருக்கிறதே!

குரு : ஆம், புதியதுதான். இப்போது தான் நீ இம்முறையை கற்பதில் இரண்டாவது படியில் கால் வைக்கிறாய். தலைவலி, மஞ்சட்காமாலைக்கு மருந்து, கண்களுக்கு மருந்து என்று (சித்தா, அல்லோபதியில் இருப்பது போல்) இல்லாமல் 'நோயாளி தன் உபாதை குறித்து சொல்லும் வார்த்தைகளுக்கு' ஏற்ப இம்மருந்துகள் கொடுக்கப்படுகின்றன என்பது முற்றிலும் புதிய Concept. புதிய முறைகளை சுலபமாகவும், விரைவிலும் கற்க ஒரு பாட்ச் மலர் மருந்து உள்ளது. அதன் பெயர் **வால்நட்**.

இந்தா இதை தினம் 2 மாத்திரை சாப்பிட்டு வர இம்முறையை விரைவாக கற்றுக்கொண்டு விடுவாய்.

(இந்த சமயத்தில் ஒரு நோயாளி என்னைப் பார்க்க வந்தார்) 'சொல்லுங்க' என மட்டும் கூறினேன். "டாக்டர் ஆறு மாதமாக இந்த இடுப்பு வலி ரொம்ப கஷ்டமாக இருக்கிறது என முகத்தில் வேதனையுடன் சொன்னார். அவருக்கு ஏதோ ஒரு மூலிகை மருந்து எடுத்துக் கொடுக்க முற்பட்ட போது "டாக்டர் என் ஜென்ம விரோதிக்கு கூட இது மாதிரி வரக்கூடாது" என முடித்தார். உடனே நான் முதலில் கொடுக்க முற்பட்ட மூலிகை மருந்தை கொடுக்காமல் வேறு ஒரு மலர் மருந்து ஒரு பாட்டில் கொடுத்து இரண்டு மாத்திரை சுவைத்து சாப்பிடச் சொன்னேன். ஒரு நிமிடம் கழித்து எப்படி இருக்கிறது என கேட்டேன். மிக நன்றாக குறைந்திருப்பதாகச் சொன்னார். அந்த பாட்டிலில் உள்ள மாத்திரைகளை வேலைக்கு

இரண்டு மாத்திரை வீதம் தினம் 2- வேளை என வலி முழுவதும் குறையும் வரை சாப்பிட்டு, அதன்பின் தினம் அம்மருந்தை தொடர்ந்து ஒரு வேளை சாப்பிடும்படி சொல்லியனுப்பினேன். அவர் பணம் கொடுக்க முற்பட்டபோது 'பணம் ஏதும் வேண்டாம்' சொன்னேன்.

சிஷ்யன் : என்ன இந்த இடுப்பு வலி கேசுக்கு **வில்லோ** வா? அல்லது **செர்ரி ப்ளம்** தானா?

குரு : இரண்டுமேயில்லை. இவர் 'வலி தாங்க முடியவில்லையே" என்றோ வலியில் "அழுது" அல்லது "கத்த"வில்லை. ஆகையால் அவருக்கு **செர்ரி ப்ளம்** உதவாது. தனக்கு வலி வந்ததிற்கு இவர் எவர் மீதும் குற்றம் சொல்லவில்லை. ஆகவே **வில்லோ**வும் பலனளிக்காது.

சிஷ்யன் : அப்படியெனில் வேறு என்ன மருந்து கொடுத்தீர்கள்?

குரு : நான் கொடுத்த மலர் மருந்தின் பெயர் **ஸ்வீட் செஸ்ட்நட்**

சிஷ்யன் : ஓகோ! ஒருவர் வலியில் கத்தவில்லையென்றாலும் அல்லது மற்றவர் மீது குறை சொல்லவில்லை என்றாலும் **ஸ்வீட் செஸ்ட்நட்** கொடுக்க வேண்டுமா?

குரு : நீ எல்லாவற்றையும் தவறாக புரிந்து கொள்கிறாய். நான் சொல்ல வந்த விஷயமே வேறு. அவர் என்ன சொன்னார். கேட்டாயா?

சிஷ்யன் : 'இடுப்பு வலி' என்றார்.

குரு : வேறு என்ன கூறினார்?

சிஷ்யன் : வேறு ஒன்றும் கூறவில்லையே.

(இத்தருணத்தில் நான் எனது டேப்ரிக்கார்டரை 'ஆன்' செய்து ஏற்கனவே நோயாளி வந்து போனது வரை நடந்த சம்பாஷணையை போட்டு காண்பித்தேன்).

குரு : "என் எதிரிக்குக் கூட இது மாதிரி (இடுப்பு வலி) வரக்கூடாது" என்று அவர் கடைசியில் சொன்ன வார்த்தைகளை கவனி.

சிஷ்யன் : அதனால் என்ன இப்போது? ஒவ்வொரு மனிதனும் ஒவ்வொரு விதமாகத்தான் பேசுவான். அதை இப்போது ஏன் குறிப்பிட்டுப் பெரிதுப்படுத்தி பேசுகிறீர்கள்?

குரு : ஒருவர் தனது உபாதை, கவலை, கஷ்டம் பற்றி குறிப்பிட்டு "இது (எனக்கு வந்திருக்கும் வியாதி, கவலை, கஷ்டம்) போல் என் எதிரிக்கு / ஜென்ம விரோதிக்குக்கூட வரக்கூடாது" என்று சொன்னால், இவ்வார்த்தைகளுக்கு ஏற்ற மலர் மருந்து **ஸ்வீட் செஸ்ட்நட்**.

இம்மருந்தை அவருக்கு கொடுக்க அவருக்குள்ள உடல் வியாதிகள் எதுவாயினும் (நாம் ஸ்கேன், எக்ஸ்-ரே எடுத்து வியாதி என்ன என்று தெரிந்து கொள்ளாமலேயே) குணமாகி விடும்.

சிஷ்யன் : ஏன் இப்படியெல்லாம், ஒவ்வொரு நோயாளியும் (தன் உபாதை பற்றி) சொல்லும் வார்த்தைகளை கவனித்து நம் மண்டையை பிய்த்துக் கொள்ள வேண்டும்? பேசாமல் அதோ தெருக்கோடியில் உள்ள MBBS டாக்டர் போல் நீங்களும் மருந்து கொடுத்தால் என்ன?

குரு : இது ஒன்றும் கஷ்டமான வேலை இல்லையே? 38 வித மனநிலைகளை (வார்த்தைகள், அங்க அசைவுகள்) மட்டும் நீ கற்றுக் கொண்டு விட்டால் போதுமே?

தவிர, காலில் கொதிக்கும் தேநீர் கொட்டி விட்டால், உடனடியாக MBBS படித்த டாக்டரிடம் சென்றால் வலி முழுவதும் குறைய அவரிடம் மருந்து கிடையாதே! ஏதோ ஆயிண்ட்மெண்ட் கொடுத்து அனுப்பி விடுவார். அது மட்டுமின்றி, மறுநாள் கொப்பளம் உண்டாகி, அது உடைந்து நீர் வெளியாகி, இதற்கு 4-5 நாட்கள் வரை காலில் தண்ணீர் படாமல் இருந்து, அதன்பின் தோல் வெண்மை நிறமாக மாறி ..., இந்த கண்றாவியெல்லாம் நம் முறையில் இல்லையே. பக்கத்து வீட்டு பெண்ணுக்கு **சொரி ப்ளம்** கொடுக்க, எரிச்சல் உடனே குறைந்தத. நான்கு மணிக்கு ஓர் தடவை, இதே மருந்தை இரண்டு தடவை மட்டுமே கொடக்க, மறுநாள் தீக்காயம் பட்ட சுவடே இல்லாமல் போய் விட்டது பார்த்தாயா? அவள் காலில் தண்ணீர் படாமல் வைத்திருக்க வேண்டியதும் தேவையில்லாமல் முழுவதும் குணமாகி விட்டதே. இது போல் அல்லோபதி மருந்து வேலை செய்யாதே.

இதே போல், நேற்று ("இது போல் என் எதிரிக்குக்கூட வரக்கூடாது" என்று சொன்ன) இடுப்பு வலி நபர் இதுவரை பல அல்லோபதி சித்தா டாக்டர்களிடம் வார, மாதக்கணக்கில் மருந்து சாப்பிட்டும் பலனில்லாமல் தான் என்னிடம் வந்தார். ஆனால் நமது **ஸ்வீட் செஸ்ட்நட்** அவரை ஒரே நாளில் (வியாதி திரும்ப வராமல்) முழுவதும் குணமாக்கியதே.

சிஷ்யன் : அதுசரி, நீங்கள் ஏன் அந்த **ஸ்வீட் செஸ்ட்நட்** (இடுப்பு வலி) நோயாளியிடம் பணம் வேண்டாமென்று சொன்னீர்கள்? அவன் காரில் வந்த பணக்காரன். பணம் கொடுக்கவும் தயாராக இருந்தானே!

குரு : இங்கு இன்னொரு பாடம் உனக்கு கற்றுத் தருகிறேன். நீ இந்த வைத்திய முறையை கற்றுக் கொள்வதால் உனக்கு நிறைய போனஸ் உண்டு. இப்பொழுது கடவுள் ராஜ்ஜியத்தில் நுழையப் போகிறோம்.

மனிதன் உண்டாக்கிய தொழிற்சாலையில் நீ வேலை செய்தால் (வருடம் பூராவும் தினம் எட்டு மணி நேரம் என உழைத்தால்) 1-3 மாத சம்பளம் போனஸாக தருவார்கள். ஆனால் கடவுள் உண்டாக்கிய மலர் மருத்துவ முறை என்ற ஆபீசில் உனக்கு தினம் தினம் போனஸ்தான். இடுப்பு வலி என வந்த நோயாளிக்கு **ஸ்வீட் செஸ்ட்நட்** கொடுத்தோம் அல்லவா? அவனை நாம் 'இடுப்பு வலி' கேஸ் என்று அழைக்காமல் **ஸ்வீட் செஸ்ட்நட்** பேஷண்ட் என அழைப்போம்.

அல்லோபதி, சித்தா போன்ற வைத்திய முறைகளில் நோயாளியை நோயின் பெயரால் அழைக்கிறோம். உதாரணம் டயபடீஸ் பேஷண்ட், கான்சர் நோயாளி. இஃது ஏனெனில் நோய் ஒருவனுக்கு வந்துவிட்டால், உடனடியாக, முழுவதும் குணப்படுத்தும் மருந்துகள் அவர்களிடம் இல்லை என்பதால், அதாவது அம்முறையில் நோயாளி அந்த நோயுடன் வாழ்நாள் முழுவதும் இருக்க வேண்டும் என்பதால், நோயின் பெயரால் நோயாளியை அழைக்கின்றனர். ஆனால் மலர் மருத்துவத்தில் ஒரு நோயாளிக்கேற்ற மருந்தின் பெயராலேயே அவரை ("**ஸ்வீட் செஸ்ட்நட்** பேஷண்ட்" என) அழைக்கிறோம்.

'போனஸ்' என்று சொன்னேன் அல்லவா? இடுப்பு வலிக்கு **ஸ்வீட் செஸ்ட்நட்** கொடுத்தேனே. அந்த நபருக்கு இடுப்பு வலி குணமாகி விட்டாலும், நாம் தொடர்ந்து இம்மருந்தை அவருக்கு கொடுத்து வர அவர் பாசிடிவ் **ஸ்வீட் செஸ்ட்நட்** ஆகி விடுவார். இவ்வாறு பாசிடிவ் ஆன பின்பு, நீ அவரிடம் சென்று, உனக்கு வாழ்க்கையில் என்ன பெரிய ஆசை இருக்கிறதோ, அது நடக்க வேண்டும் என்று அவரிடம் வேண்டி, அவரும் அப்படியே ஆசீர்வாதம் செய்தால், அது நடக்கும்.

சிஷ்யன் : மலர் மருந்து சாப்பிட்டு நோய் குணமான பிறகு அந்த நோயாளி எவருக்காவது ஆசீர்வாதம் செய்தால் பலிக்கும் என்று சொல்கிறீர்கள். அந்த சப்-இன்ஸ்பெக்டர் மூல நோய் குணமாகி விட்டதே. அவரிடம் சென்று நான் ஆசீர்வாதம் வாங்கிக் கொள்ளவா?

குரு : இல்லை. **ஸ்வீட் செஸ்ட்நட்** என்ற மலர் மருந்து தேவைப்படும் நபர் மட்டுமே அம்மருந்தை சாப்பிட்டு மற்றவர்களுக்கு ஆசீர்வாதம் செய்தால் அது பலிக்கும்.

சிஷ்யன் : சரி, என் அப்பாவிற்கு நான் **ஸ்வீட் செஸ்ட்நட்** தினம் தினம் கொடுத்து ஒரு மாதம் சென்று அவரிடம் போய் ஆசீர்வாதம் பெறவா?

குரு : அதனால் ஒரு பயனும் ஏற்படாது.

சிஷ்யன் : நீங்கள் தானே இப்போது சொன்னீர்கள்? **ஸ்வீட் செஸ்ட்நட்** சாப்பிட்டவர் ஆசீர்வாதம் செய்தால் பலிக்கும் என்று.

குரு : உன் அப்பா (தனது கஷ்டம், கவலை அல்லது பணப்பிரச்சினை பற்றி குறிப்பிடும் போது) ''இது மாதிரி என் எதிரிக்குக் கூட வரக்கூடாது'' என்று கூறுகிறாரா?

சிஷ்யன் : அவர் அப்படி ஒரு போதும் சொல்லவில்லை.

குரு : நான் சொன்னது என்னவெனில் **ஸ்வீட் செஸ்ட்நட்** நோயாளிக்கு (அதவாது 'என் எதிரிக்குக் கூட இது மாதிரி வரக்கூடாது' என்று சொல்லும் நபர்) அம்மருந்து கொடுத்து, (அவரது வியாதிகள் சரியான பின்பும்) இந்த மருந்தை தொடர்ந்து 1-6 மாதம் கொடுத்து அதன் பின்பு அவரிடம் சென்று ஆசீர்வாதம் பெற்றால் அது அப்படியே பலிக்கும்.

நீ இருபது வருடமாக 'டைப்பிஸ்ட்' ஆக வேலை செய்து வருகிறாய். இந்த இருபது வருடத்தில் உன் வீட்டில் உள்ள வயதானவர்கள் உன்னை பல தடவை 'அமோகமாக இரு', 'மகாராஜா' போல் இரு, என ஆசீர்வாதம் செய்திருப்பர். தவிர பல மடாதிபதிகள், சாமியார்கள், ஸ்ரீஸ்ரீ ஸ்வாமிகள் ஆதீனம், அடிகள், வாரியார்கள், 'தவத்திரு' போன்றவர்கள் காலில் விழுந்து ஆசீர்வாதம் வாங்கியிருப்பாய். ஒன்றாவது பலித்ததா? இல்லை. நீ இன்றளவும் அப்படியே 'டைப்பிஸ்ட்' ஆகத்தான் இருக்கிறாய். ஏனெனில் மேற்சொன்ன மகான் என்று சொல்லப்படும் நபர்கள் மகான்கள் அல்ல.

பாசிடிவ் **ஸ்வீட் செஸ்ட்நட்** நபரை 'அவதார புருஷர்' எனலாம். ஸத்குரு ஸ்ரீராகவேந்த்ர ஸ்வாமிகள், இறந்தவரை எழுப்பியுள்ளார், ஏசு கிறிஸ்து குருடனுக்கு பார்வை அளித்துள்ளார்.

நம் எல்லோரையும் ஆசீர்வதிக்க எங்கோ, எப்போதோ, ஆயிரம் வருடங்களுக்கு ஒரு தடவை மட்டும் ஒரு அவதார புருஷரை மட்டும் அனுப்பும் சின்ன புத்தி கொண்டவர் அல்ல கடவுள் (வாசகர்கள், 'கடவுள்' 'தெய்வம்' என்பதை இந்நூலாசிரியர் 'இயற்கை' என அழைக்கிறார்.)

விஷ்ணு சஹஸ்ரநாமத்தில், 'சம்பவாமி யுகே யுகே' என்றால் யுகம் தோறும் நான் (கடவுள்) அவதரிப்பேன் என்று இந்துக்கள் அர்த்தம் சொல்கின்றனர். இது சரியல்ல. இங்கு 'யுகே யுகே' என்றால் தினம் தினம் என்று அர்த்தம்.

மலர் மருந்துகள் மொத்தம் முப்பத்தெட்டு. மனிதர்களும் முப்பத் தெட்டு வகை. ஆக, சராசரியாக ஒவ்வொரு முப்பத்தெட்டு நபரிலும் ஒரு **ஸ்வீட் செஸ்ட்நட்** டைப் நிச்சயம் இருக்க வேண்டும். இந்தியாவில் பிறப்பு

சதவிகிதம் மணிக்கு 38 நபர்கள் பிறக்கிறார்கள். எனில், மணிக்கு ஒரு **ஸ்வீட் செஸ்ட்நட்** டைப் பிறந்து கொண்டே தான் இருக்கிறார்.

Nature produces in abundance.

Nature knows no economics. (Emerson)

"எமர்சன் எழுத்துக்களை படியுங்களேன்" என்கிறது இயற்கை.

"கடவுள் இராஜ்ஜியம் வரப்போகிறது" என்று கிறிஸ்தவர்கள் சொல்கின்றனர். "கடவுள் ராஜ்ஜியம் வருவது என்பது ஒரு காலகட்டமல்ல" என பைபிளில் வேறு ஒரு இடத்தில் காணப்படுகிறது. இதற்கு சரியான அர்த்தம் என்னவெனில், "நீ கடவுள் ராஜ்ஜியத்தில் இப்போதே போய் இருக்கப் போகிறாயா, இல்லையா" என்பதுதான்.

மணிக்கு மணி கடவுள் அவதார புருஷர்களை அனுப்பிக் கொண்டே தான் இருக்கிறார். அவர்களுக்கு கடவுள் இட்ட வேலையை செய்ய விடாமல் தடுத்து 'பள்ளிப்படிப்பு' என்று நாம் ஏற்படுத்திய systems-களில் அவர்களை நுழைத்து விடுகிறோம். Nature hates our systems.

"நீ விவசாயக் கல்லூரி உண்டாக்கி அதில் B.Sc., M.Sc., படித்துதான் தென்னைமரம், நெல் தானியம் முதலியன உண்டாக்கினாயா?" என மனிதர்களைப் பார்த்து இயற்கை கேட்கிறது.

அவதார புருஷர்கள் நம்மிடையே இருக்கிறார்கள்; ஆனால் 'நெகடிவ்' ஆக. நெகடிவ் எனில் வாழ்க்கைப் பிரச்சினை, பணக்கஷ்டம், வியாதி ஆன்மீக விஷயங்களில் குழப்பம், தவறான அபிப்பிராயம் ஆகியவற்றில் சிக்கி கஷ்டப்படுதல்.

நெகடிவ் ஆக உள்ள அவதார புருஷர்களை கண்டுபிடித்து அவர்களுக்கு **ஸ்வீட் செஸ்ட்நட்** என்ற மலர் மருந்து கொடுத்து வர, விரைவில் அவர்களது கஷ்டம், பிரச்சினை தீருவதோடு, பாசிடிவ் ஆக வாழத் தொடங்கி, இதன் பின்பு இவர்கள் மற்றவர்களை ஆசீர்வதித்தால் அது அப்படியே நடக்கும். ஆனால் **ஸ்வீட் செஸ்ட்நட்**-டைப் அல்லாத நபர்கள் தான் தற்போது, ஸ்ரீலஸ்ரீ, அடிகளார், மடாதிபதி, ஸ்வாமிகள் என உட்கார்ந்திருக்கிறார்கள்.

சிஷ்யன்: அது என்ன 'நெகடிவ்', 'பாசிடிவ்' டைப்?

குரு : ஏசு கிறிஸ்து, ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் ஆகியோர் இயற்கையிலேயே 'பாசிடிவ்' தன்மையாளராக இருந்தனர். அதவாது நூறு சதவிகிதம் **ஸ்வீட் செஸ்ட்நட்** என்ற மருந்தின் தன்மையாளராக இருந்தனர். இயற்கை தினம் தினம் தான் படைக்கும் ஒவ்வொரு முப்பத்தெட்டு நபர்களிலும் ஒரு நபரை **ஸ்வீட் செஸ்ட்நட்** ஆக படைத்துக் கொண்டேதான் இருக்கிறது.

ஆனால் மேற்சொன்ன நபிகள் நாயகம், ஏசு கிறிஸ்து, ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள் தவிர மற்றவர்கள் ஏதோ ஒரு காரணத்தால் 'நெகடிவ்' ஆக உள்ளனர். நெகடிவ் ஆக உள்ளவர்கள் ஆசீர்வாதம் செய்தால் அது பலிக்காது. நெகடிவ் **ஸ்வீட் செஸ்ட்நட்** தன்மையாளர்களாக இருப்பவர்களை 'எப்படியாவது போகட்டும்' என்று கடவுள் விட்டு விடாமல் இவர்களை பாசிடிவ் ஆக மாற்றுவதற்கே **ஸ்வீட் செஸ்ட்நட்** என்ற மலரை இங்கிலாந்து காடுகளில் மலரும்படி செய்துள்ளார். (இவற்றை நாம் இந்தியாவில் மாத்திரை வடிவில் இறக்குமதி செய்து விற்பனை செய்கிறோம். எல்லா மருந்தும் ஒரே விலைதான். ஒவ்வொன்றும் 330 மாத்திரைகள் அடங்கிய 10ml பாட்டிலின் விலை ரூ. 30=00. எவ்வயதினராயினும் வேளைக்கு 2 மாத்திரை சுவைத்து சாப்பிடவும்).

இந்த மலர்களை ஏன் கடவுள் இந்தியாவில் படைக்கவில்லை என்ற தாறுமாறான கேள்விகளை வாசகர்கள் கேட்க வேண்டாம் என கேட்டுக் கொள்கிறோம்.

ஏன், எதற்கு, எப்படி என்ற எல்லா கேள்விகளுக்கும் நமக்கு விடை கிடைக்க வேண்டும் என்ற அவசியமில்லை.

Nature keeps her ways secret.

மருந்து மலிவாக இந்தியாவில் கிடைக்கிறது. உபயோகித்து பார்க்கப் போகிறீர்களா? இல்லையா? என்பதுதான் எமது கேள்வி.

வாதம், விதண்டாவாதம் செய்பவர்களிடம் நாங்கள் ஏதும் பேசத் தயாராயில்லை, நேரமுமில்லை.

இன்னும் சிலர், தான் ஏதோ அறிவுப்பூர்வமாக பேசுவதாக நினைத்து, "நம் ஊரில் உள்ள மலர்களுக்கு இத்தகைய சக்தி இல்லையா?" என கேட்கின்றனர். இருக்கலாம்; இல்லாமலும் இருக்கலாம். உலகிலேயே மிக அதிகமாக ஃபீஸ் வாங்கப்படும், மற்றும் 'வைத்தியர்களின் சொர்க்கம்' என்று அழைக்கப்படுவது இங்கிலாந்தில் உள்ள ஹார்லி தெரு (Harley Street). அங்கு பிராக்டீஸ் செய்து லட்சக்கணக்கில் சம்பாதித்துக் கொண்டிருந்த M.R.C.S. படித்த எட்வார்டு பாட்ச், அவற்றையெல்லாம் விட்டுவிட்டு காடுகளில் அலையும் அளவு 'தில்' நம்மூர்க்காரர்களிடம் உள்ளதா? "இந்தியா உசத்தியா? இங்கிலாந்து மலர்கள் உசத்தியா ?" என்ற விவாதத்திற்கு நாம் தயாராக இல்லை.

எங்களுக்கு 'நாட்டுப்பற்று' இல்லை. ஆனால் 'உலகப் பற்று', 'மனித இனப்பற்று' மட்டும் தான் உண்டு.

நம் நாட்டு மலர்களை உபயோகிக்காமல், இங்கிலாந்தில் மட்டுமே காணப்படக்கூடிய மலர் மருந்துகளை உபயோகிப்பது கேவலம் என்று நினைக்கும், அனுவசிய தாழ்வு மனப்பான்மை உள்ளவர்களிடம் நாம் பேசத் தயாராக இல்லை. கடவுள் படைத்த இந்த பூமியை இங்கிலாந்து, இந்தியா என்று நாம் கூறு போட தயாரில்லை. அது அரசியல்வாதிகளின் வேலை.

திரும்பவும் சொல்கிறோம். நான் இந்தியன், தமிழன் என்று மனித இனத்தை எங்களால் பிரித்துப் பார்க்க இயலவில்லை.

நாட்டுப்பற்று என்பது குறுகிய மனப்பான்மை. மனித இனப்பற்று, உலகப்பற்றுதான் எங்களிடம் உண்டு. (இதுபற்றி **ராக்வாட்டர்** என்ற மலர் மருந்தின் **கீழ்** பார்க்கவும்) ''இந்திய'' மக்களின் சுதந்திரத்திற்காக மகாத்மா காந்தி பல நாட்கள் உண்ணாவிரதம் இருந்து உடல் வதங்கி போனார். ஆனால் சில வருடம் முன்பு வடஇந்தியாவில் ஜெயின் சாமியார் உலக நன்மைக்காக (நன்றாக கவனியுங்கள், ஜெயின் மதத்தினர்களுக்காக அல்ல, இந்தியர்களுக்கா அல்ல, அகில உலக மக்கள் நன்மைக்காக) 360 நாட்கள் உண்ணாவிரதம் இருந்தார்.

ஐயர், ஐயங்கார், கிறிஸ்துவர், முஸ்லிம், தி.மு.க.வினர், அ.தி.மு.க. வினர், பாரதீய ஜனதா, கம்யூனிஸம், சோஷலிஸம் என்று உங்களுக்குள் சண்டை போட்டு மனித இனத்தை கூறு போடாதீங்கடா. 'மனித'யிஸம் பற்றி பேசுங்கடா என்கிறது இயற்கை.)

சிஷ்யன் : பாசிடிவ் **ஸ்வீட் செஸ்ட்நட்** நபர்களை எப்படி கண்டுபிடிப்பது?

குரு : தனது வியாதி, பணக்கஷ்டம், குடும்பப் பிரச்சினை பற்றி பேசும் போது கீழ்க்கண்டவற்றில் ஒன்றோ அல்லது பல வாக்கியங்களையோ சொல்பவர்கள் தனக்கு **''ஸ்வீட் செஸ்ட்நட்''** தேவை என்று மற்றவர்களுக்கு மறைமுகமாக உணர்த்துகின்றனர்.

---

''என் எதிரிக்கு/ஜென்ம விரோதிக்குக் கூட இது மாதிரி (எனக்குள்ள கஷ்டம், வியாதி, பணப்பிரச்சினை) வரக்கூடாது.''

''எனக்கு 'கதியே/விமோசனமே' கிடையாது.''

''என் கஷ்டத்தை வார்த்தைகளால் சொல்ல முடியாது.''

''ஆபத்துக்கு தோஷமில்லை''

''தர்ம சங்கடம்'' (dilemma)

---

சிஷ்யன் : அதாவது இந்த மருத்துவ முறையில் ஒவ்வொரு நோயாளியும் தனக்கு வேண்டிய மருந்தை, தானே (சில வார்த்தைகள் மூலமாக) சொல்கிறான்.

குரு : ஆம்! இப்பொழுதுதான் நீ சரியாக புரிந்து கொள்ள ஆரம்பித்திருக்கிறாய்.

கடவுள் அன்பு மயமானவர். 'நோய்' என்று வந்துவிட்டால் டாக்டரிடம் சென்று, 'க்யூ' வரிசையில் காத்திருந்து, பிறகு எக்ஸ்-ரே எடுத்து, மாதக்கணக்கில் நூறு, ஆயிரக்கணக்கில் செலவு செய்தும் பலனில்லாமல் மனிதர்கள் அவதியுறும் வைத்திய முறையை கடவுள் உண்டாக்கவில்லை; மனிதன்தான் உண்டாக்கினான்.

நோயாளி தனக்கு வேண்டிய மருந்தை சில வார்த்தைகள் மூலம் நமக்கு சுட்டிக்காட்டும்படிதான் கடவுள் மனிதர்களை படைத்துள்ளார். அதற்கேற்ற மலர்களையும் (இங்கிலாந்து காடுகளில்) படைத்துள்ளார். அவன் சொல்லும் வார்த்தைகளுக்கேற்ப, பொருத்தமான சரியான மருந்தை கொடுக்க, அவனது உடல் வியாதிகள் மட்டுமின்றி, கவலை, கஷ்டம், பணப்பிரச்சினைகளும் நீங்கி விடும்.

இம்முறையை கடவுள் உண்டாக்கியிருப்பதால், பக்கவிளைவு (side-effect) கிடையாது. விதிவிலக்கே இல்லாமல் எல்லோரையும் குணப்படுத்தும். சிலருக்கு ஒத்துக் கொள்ளாது என்ற பேச்சுக்கே இடமில்லை.

முதல் டோஸிலேயே பலன் தெரியும். (ஐந்தாறு டோஸ் கொடுத்த பிறகுதான் வேலை செய்யும் என்பது கிடையாது). முதல் டோஸில் பலன் தெரிந்த அது முழுமையாக இல்லாத பட்சத்தில், தினம் 2-3 வேளை தொடர்ந்து முழு குணம் தெரியும் வரை கொடுக்கலாம். எவ்வளவு நாட்களுக்கு கொடுக்க வேண்டும் என்பது மனிதருக்கு மனிதர் மாறுபடும்.

(38 வித நபர்கள் சொல்லும் வார்த்தைகளைக் கற்றுக் கொண்டால் போதும். அதைத்தான் இப்புத்தகத்தில் படிக்கப் போகிறோம்)

வெளியூரிலிருந்து வந்திருந்து எனது தெருவில் உள்ள லாட்ஜில் தங்கியிருந்த ஐந்து நபர்கள். ஹோட்டலில் சாப்பிட்டு விட்டு வெளியே வந்த சிறிது நேரத்தில் வயிற்று வலியால் துடித்தனர். எனது சிஷ்யனிடம் அவர்கள் சொல்வதை கேட்கும்படி சமிக்ஜை செய்தேன்:

**ராமு** : தட்டு எல்லாம் ஒழுங்காகவா கழுவுகிறான்கள்? கண்டவன் சாப்பிட்ட எல்லா தட்டுக்களையும் ஒரே வாளி தண்ணீரில் முக்கி எடுக்கிறான். இதற்கு முன் சாப்பிட்டவனுக்கு என்னென்ன வியாதி இருந்ததோ, தட்டு சரியாக கழுவாததனால் அந்த அசிங்கம் என் வயிற்றுக்குள் போயிருக்கும்.''

**வெல்டிங் குமார்:** அதில்ல சார்... எல்லாம் அழுகிய காய்கறி, மட்டரகமான எண்ணை... (டிரான்ஸ்பார்மர் எண்ணை கூட ஹோட்டல்களுக்கு சப்ளை ஆகிறதாம்!) கொள்ளையடிக்கிறானுக. இதற்கு நாம தான் மாட்டினோமா?

**இஸ்மாயில்:** ''எல்லாம் நான் செய்த பாவம், ஹோட்டல் சாப்பாட்டை சாப்பிட்டு வயித்து வலி வரணும்னு இருக்கு.''

முதல் நபர் ராமு '**அசிங்கம்**', மற்றும் '**வியாதிக்கிருமி**' சரியாக கழுவாத தட்டு மூலமாக தன் வயிற்றுக்குள் போய்விட்டதால் வலி வந்துவிட்டது என்கிறார். ஹோட்டல்காரன் மட்டரக உணவுப் பொருளை சமைத்து கொள்ளையடிப்பதாக **ஹோட்டல்காரன் மீது குற்றம் சுமத்துகிறான்** வெல்டிங் குமார்.

தான் ஒரு பாவி என **தன்னை நொந்து கொள்கிறார்** இஸ்மாயில். (வெல்டிங் குமார் சொன்னதற்கு நேர் எதிர் இது).

மற்றவர்களை பார்ப்போம்.

**சங்கர்**: ''ஐயோ வலி தாங்க முடியவில்லையே'' என **கத்துகிறான்.**

**தேவாரம்**: ''**பயமா இருக்குடா**, வாந்தி பேதி வந்து செத்துடுவோமோ?'' என்கிறான்.

குரு : எல்லோருக்கும் உள்ளது வயிற்றுவலி தான். ஆனால், அதைப் பற்றி பலரும் பல விதமாக சொல்கின்றனர்.

**சிஷ்யன்** : ''அதுக்கு இப்ப என்ன சார்? நாலு மனுசங்க நாலு விதமாத்தான் பேசுவாங்க. எவனுமே பேசக்கூடாது ன்னு சொல்லறீயா?''

குரு : ''மேற்கண்ட ஐந்து பேரும் விதவிதமாக பேசவில்லை. **ஒவ்வொருவரும் தனக்கு தேவையான மருந்தின் பெயரை சொல்கிறார்கள்.**''

**சிஷ்யன்** : ''என்ன சார் உளர்றீங்க? ஒண்ணும் புரியலையே. மருந்து பெயர் எங்க சார் இருக்கு? வயிற்று வலிக்கு 'பெரால்கன்' கொடுப்பாங்க. அட வேறு மருந்து பெயர் ஏதும் கூட சொல்லலையே.

குரு : "வலி தாங்கமாட்டாமல்" "பொறுக்க முடியாமல்" **கத்துபவன்** தனக்கு **செர்ரி ப்ளம்** என்ற மருந்து கொடு என மறை முகமாக சொல்கிறன்.

குரு : நானும் இப்ப கத்தறேன். 'ஐயோ', 'அம்மா'... 'அப்பா...' என்ன சார் நான் இப்ப **செர்ரி ப்ளம்** சாப்பிட்டா எனக்குள்ள உடல் வியாதி எல்லாம் சரியாயிடுமா? கொடுங்க அதை."

**பதில்**: "நீ வேண்டும் என்றே கத்துகிறாய்... கத்தக்கூட இல்லே? ஐயோ, அம்மா என வார்த்தைகளே சத்தமாகச் சொல்கிறாய். சங்கர் 'வலி தாங்காமல்' (யாரும் அவனே அழச் சொல்லாமலே) அழுகிறன் அல்லது கத்துகிறன்."

குரு : "ஆமாம், இப்ப என்ன சார் அதுக்கு? என்ன சார் குழப்பறீங்க? தீக்காயம் பட்டவன் கூட ஆ... ஊன்னு தான் கத்துவான்; யாரும் சொல்ல வேண்டாமே அவன் கத்துவதற்கு."

குரு : "அப்படியெனில், **செர்ரி ப்ளம்** தீக்காயம் பட்ட உடனே கொடுக்கலாம்."

**சிஷ்யன்** : 'என்ன சார், பைத்தியமா உங்களுக்கு? வயிற்று வலிக்காரனுக்கு **செர்ரிப்ளம்**ங்கற மருந்துன்னு சொல்றீங்க.... நெருப்புக் காயத்திற்கும் அதே தானு? வயிற்று வலிக்கு கொடுக்கற மருந்து நெருப்புக் காயத்திற்கு எப்படி கேட்கும்? **செர்ரி ப்ளம்** என்ன சர்வ ரோக நிவாரணியா?"

**பதில்**: "ஆம். வலி அல்லது உபாதையால் தாங்கமுடியாமல் கத்தி அழுது அல்லது வீறிட்டாலும் (அது எந்த வியாதியால் இருந்தாலும்) அந்த மனிதர்களுக்கு மட்டுமே **செர்ரி ப்ளம்** சர்வரோக நிவாரணி."

சற்று கவனமாக கேள். இது புதுப்பாடம் என்பதால் ஆரம்பத்தில் புரிந்து கொள்வது சிறிது கஷ்டம்தான். போகப்போக சரியாகிவிடும். (இப்புத்தகத்தைப் படிக்க ஆரம்பித்த தினத்திலிருந்து வாசகர்கள் **வால்நட்** என்ற மலர் மருந்து தினம் ஒரு வேளே ஒரு மாதம் சாப்பிட இம்முறையை சுலபமாக கற்றுக்கொண்டு விடுவர்.)

நோயுள்ள மனிதர்களே இங்கு பல விதமாக பிரித்துள்ளோம்: (வியாதியின் பெயரால் அல்ல. வியாதியின் பாதிப்பால் அவர்கள் சொல்லும் வார்த்தைகளே, பல ரகங்களாக பிரித்துள்ளோம்).

'வயிற்று வலிக்கு' என ஒரு குறிப்பிட்ட மருந்து ஏதுமில்லே. ஆனுல், வயிற்று வலியால் (அல்லது வேறு எந்த வியாதியாயிருந்தாலும், கொடிய கான்சர் உட்பட) கஷ்டப்படும் **நோயாளிகளுக்கு** (அவர் சொல்லும் வார்த்தைகளுக்கேற்ப) மருந்துகள் உள்ளன.

'மற்றவர்களே (மேற்படி வயிற்று வலியில் ஹோட்டல்காரனே) குற்றம் சொல்லும்' வெல்டிங் குமாருக்கு **வில்லோ** என்ற மருந்து ஒரு டோஸ் கொடுக்க பூரண குணம் கிடைத்தது.

'தன்னைத்தானே நொந்து கொள்பவர்களுக்கு' ஏற்ற மருந்து **பைன்,** இதில் ஒரு டோஸ் கொடுக்க இஸ்மாயில் வயிற்று வலி உடனடியாக நின்றது.

தன் வயிற்று வலிக்கு 'அசிங்கம்', 'அருவருப்பு' தான் காரணம் என்று சொன்ன ராமுவுக்கு **கிராப் ஆப்பிள்** ஒரு டோஸ் கொடுக்க உடனடி நிவாரணம்.

'பயமா இருக்குடா' என்ற தேவாரத்திற்கு **மிமுலஸ்** வலியை குறைத்தது.

இதிலிருந்து நாம் கற்கும் பாடம் "மற்றவர்களை குறை கூறும்" நபர்களுக்கு (அவரது உடல் வியாதி எதுவாயினும்) **வில்லோ** என்ற மருந்து கொடுக்க வேண்டும்.

தன்னைத்தானே நொந்து கொள்பவர்களுக்கு - **பைன்**
வியாதி பற்றி பயப்படும் நபர்களுக்கு - **மிமுலஸ்**
'அசிங்கம்' 'அருவருப்பு' பற்றி அக்கறை படுபவர்களுக்கு - **கிராப் ஆப்பிள்**
வலி 'தாங்க முடியாமல்' கத்தினால், அழுதால் - **செர்ரிப்ளம்**

**சிஷ்யன்** : "என்னங்க இது? இங்கிலீஷ் மருந்துக்கடைலே 'பெரால்கன்' தான் இருக்குதே... எல்லாருக்கும் கொடுத்தா போச்சு."

குரு: "பெரால்கன் எல்லா வயிற்று வலிக்காரர்களையும் குணப்படுத்தி விடுகிறதா? ஒரு தடவை மருந்து சாப்பிட்டால் திரும்ப வராமல் இருக்கா?"

**சிஷ்யன்** :"சிலருக்கு கேக்காட்டி டாக்டரிடம் போறுங்க. அது சரி, உங்கள் மருந்து, வலி திரும்ப வராமல் குணப்படுத்தி விடுமா?"

குரு: "ஆமாம், அதுக்குதான் சொல்றேன்! மற்ற வைத்திய முறைகளில் நோய்களை (வாந்தி, கான்சர் என) வரிசைப்படுத்தி பிரித்துள்ளனர். ஆனால் இம்முறையில் **நோயாளிகளை** வரிசைப்படுத்தி பிரித்துள் ளோம். இம்முறையில் உள்ள புதிய பாடத்தை கற்றுக் கொண்டு விட்டால் பல நோய்களை குறுகிய காலத்தில், திரும்ப வராமல் குணப் படுத்திவிடலாம்."

**சிஷ்யன்** :"என்ன சார், என் மாமனருக்கு கான்சர். இரண்டு மாதத்துக்கு ஒரு தடவை அடையார் போய் 'கதிர் வீச்சு' வச்சுக்கிட்டு இருக்காரு. கான்சருக்கு உங்க பாட்ச் முறையில் மருந்து இருக்கா?"

குரு: "மறுபடியும் பார்த்தாயா... உனது பழைய பல்லவியான 'நோய்' பற்றியே பேசுகிறாய். 'கான்சர் நோயாளிக்கு' மருந்துன்னு கேளு..."

**சிஷ்யன்**:"அது என்னமோ தெரியாது. கான்சருக்கு மருந்து இருந்தா கொடுங்க. ஆங்... என் மாமனரை சரி செஞ்சிட்டீன்னா உனக்கு

கோயில் கட்டி கும்புடுவான். இன்னும் மூணு மாசம்தான் இருப்பார்னு டாக்டருங்க கெடு வச்சுட்டாங்க."

**குரு:** "கான்சர் நோய் வந்த உன் மாமனுரை டாக்டரிடம் பல தடவை அழைத்துச் செல்கிருய் அல்லவா? நோயாளியை பார்த்துதானே அவர் வைத்தியம் செய்கிருர். அதேபோல் நானும் அவரை பார்த்த பிறகு, மருந்து தருகிறேன். என்னை உன் மாமனுர் இருக்கும் இடத்திற்கு அழைத்துச் செல்."

(மேற்கண்ட சம்பாஷணைக்கு பிறகு, நான் அவனுடன் சென்று நோயாளியை பார்த்தேன்). தனது உபாதை பற்றி சொல்லிமுடித்து சிறிது நேர இடைவெளிக்கு பின்பு, அவர் சொன்னுர்: "யாருக்கும் இது மாதிரி வரக்கூடாது".

சிஷ்யனை தனியாக அழைத்து,

"உன் மாமனுர் சொல்வதை கேட்டாயா? என்ன சொல்கிருர் பார். 'தன் வியாதி போல் யாருக்கும் வரக்கூடாது' என்று..."

**கேள்வி:** "அந்த ஆள் வேதனையில் அப்படி சொல்கிருர். பின்னே என்ன, எல்லோரும் கான்சர் வந்து அவதிப்படணும்னு சொல்வார்?"

**பதில்:** 'அதில்லை. நான் சொல்வதை அப்படியே திருப்பி சொல். 'அசிங்கம், அருவருப்பு, infection, septic, contamination' பற்றி பேசுபவர்களுக்கு கொடுக்கப்பட வேண்டிய மருந்து **கிராப் ஆப்பிள்**. மற்றவர் மீது குற்றம் குறை சொல்வோர்க்கு... **வில்லோ**. 'தான் பாவி', 'நான் செய்த பாவம் அனுபவிக்கிறேன்' என தன்னைத் தானே நொந்து கொள்பவர்களுக்கு **பைன்**.

'பயம்', 'பயமாயிருக்கு' என சொன்னுல்... **மிமுலஸ்**.

வலி, எரிச்சல் "தாங்க மாட்டாமல்" அழுதால், கத்திஞல் **செர்ரி ப்ளம்**.

(இங்கு 'சிஷ்யன்' அதை அப்படியே திருப்பிச் சொன்னுன்). நான் சொன்னேன் "இப்போது உன் மாமனுர் சொன்னுரே 'யாருக்கும் இது மாதிரி வரக்கூடாது' என்று. இதற்கு **ராக் ரோஸ்**.

**சிஷ்யன்:** "**ராக் ரோஸ்**... அது கான்சருக்கு நல்ல மருந்தா?"

**குரு :** "பார்த்தாயா, வேதாளம் மறுபடியும் முருங்கை மரத்தில் ஏறிய கதை போல் இருக்கிறது நீ பேசுவது.

தன் கவலை, கஷ்டம், ஏழ்மை, வியாதி, பிரச்சினை பற்றி குறிப்பிட்டு "அது போல் யாருக்கும் வரக்கூடாது" என சொல்பவர்களுக்கு **ராக் ரோஸ்**. இதை மூன்று தடவை சொல்லு."

(சிஷ்யன் அப்படியே மூன்று தடவை சொன்னான்). **ராக் ரோஸ்** ஒரு பாட்டில் மாத்திரை கொடுத்து வேளைக்கு இரண்டு மாத்திரை, தினம் மூன்று வேளை அவன் மாமனாருக்கு கொடுக்கச் சொன்னேன்.

**சிஷ்யன்:** "சாப்பாட்டிற்கு முன்பா, பின்பா?... அப்புறம் பத்தியம்.."

**குரு :** "பத்தியமில்லை. எப்போது வேண்டுமானாலும் சாப்பிடலாம்."

**சிஷ்யன்:** "இங்கிலீஷ் மாத்திரையெல்லாம் சாப்பிடுறாரே... அது கூட உங்க மருந்து ஒத்துக்காம போய்...."

**குரு :** "அந்தப் பேச்சுக்கே இடமில்லை. போய் கொடு."

(இது நடந்து பத்துநாள் கழித்து அவனது மாமனாரை நான் பார்த்தபோது, **ராக் ரோஸ்** சாப்பிட்ட மறுதினத்திலிருந்து வலி, எரிச்சல் சுத்தமாக குறைந்துவிட்டதாக சொன்னார். அதற்கடுத்த தடவை சென்னைக்கு சென்றபோது அவரை பரிசோதித்த டாக்டர்கள் கான்சர் நோய் முழுவதும் குணமாகி விட்டதால் இனி வைத்தியத்திற்கு வரவேண்டாம் எனச் சொல்லிவிட்டனர்.)

இச்செய்தி கேட்டு நான் அங்கு சென்றபோது, சிஷ்யனின் மனைவி என்னிடம் ஆலோசனை பெற விரும்பி, "டாக்டரய்யா, இந்தக் கையிலே பாருங்க... கட்டி... கான்சர் போல் பயப்படுவதற்கு ஒன்றுமில்லையே..." என்று கேட்டாள்.

சிஷ்யனை தனியாக அழைத்து கீழ்கண்டவாறு கூறினேன்;

"டாக்டர்கள் அவனது மாமனாரிடமே இன்னும் மூன்று மாதம்தான் நீ இருப்பாய் என்று சொல்லியும் கூட, அவர் 'பயம்' எதுவும் தெரிவிக்காமல், "யாருக்கும் இது போல் வரக்கூடாது" என்றார்.

"உன் மனைவி லேசான வீக்கத்திற்கு கான்சராக இருக்குமோ என பயம்" என்கிறாள். இதுதான் ஒரு நோயாளி மற்றவரிடமிருந்து வித்தியாசப்படும் விதம். இந்த வித்தியாசத்தின் பேரில்தான் பாட்ச் மருந்து கொடுக்கப்படுகிறது" என அவனுக்கு விளக்கிக் கூறினேன்.

வயிற்று வலி வந்த தேவாரம் கேசை அவனுக்கு ஞாபகப்படுத்தி, அவர் பயந்து போயிருந்ததால் அதன் பேரில் **மிமுலஸ்** கொடுத்தது போல், இவன் ('சிஷ்யனின்) மனைவிக்கும் (பயந்ததால்) **மிமுலஸ்** கொடுப்பதாக சொல்லி கொடுத்தேன். மூன்று நாளில் வலி, வீக்கம் குறைந்தது. இதோடு மட்டுமில்லாமல் முன்பெல்லாம்போல் கரப்பான் பூச்சி, பல்லி ஆகியவற்றைப் பார்த்து பயப்படுவதும் தற்போது இல்லை என கூறினான்.

வலியுடன் ஒருவர் அழுதால்/கத்தினால் **சொர்ரி ப்ளம்** கொடுக்க கத்துவது மாத்திரம் நிற்காமல் வலியும் பூரணமாக குணமாகிவிடும்.

மற்றொரு சமயத்தில் சிஷ்யனைப் பார்த்து நான் கேட்டேன்.

"ஏண்டா இந்த சிகரெட்டை விட்டுத் தொலையேன்" அவனது பதிலை கவனமாகப் படியுங்கள்.

"அது என்னமோ சார், காலையிலே சிகரெட் இல்லன்னு வேலையே ஓடாது. இது இல்லாம முடியாது இவ்வளவு வருஷமா இருக்கு. இத போய் நிறுத்த முடியுமா?"

'பழக்கமாகிவிட்டது. அது இல்லாமல் என்னவோ போல் இருக்கும்.. வேலையே ஓடாது..' என சொல்பவர் குடிகாரனுயிருந்தாலும் சரி, ஏழெட்டு காபி சாப்பிடுவராக இருந்தாலும் சரி, போதை மருந்துக்கு அடிமையாகிவிட்டாலும் கூட **வால்நட்** என்ற பாட்ச் மருந்து உதவும். இதில் ஒரு பாட்டில் அவனுக்குக் கொடுத்து தினம் மூன்று வேளை சாப்பிடச் சொன்னேன். ஒரு மாதம் கழித்து பார்த்த போது பகல் சாப்பாட்டிற்கு பின்பு மட்டும் ஒரு சிகரெட்டுடன் நிறுத்திக்கொண்டு விட்டதாகச் சொன்னான். அதற்குத்தான் அவனுக்கு அந்த பாட்டில் (**வால்நட்**) கொடுத்தேன் என சொன்னேன். இதைக் கேள்விப்பட்ட உடன் ஆச்சர்யத்தில் மூழ்கிய சிஷ்யன், தன் மச்சான் நிறைய சிகரெட், சாராயம் சாப்பிடுவதாகச் சொல்லி அதே மருந்தை அவனுக்கும் கொடுங்கள் என்று கேட்டான். நான் அவனைப் பார்க்க வேண்டும் என சொல்லி, அங்கு சென்றபோது அவனது மனைவி மட்டும் வீட்டில் இருந்தாள். அவள் சொன்னாள்.

"ராத்திரி குடிச்சிட்டு வந்துடுவான். காலைல பாத்தா நல்ல மனுஷன் மாதிரி 'இனிமே குடிக்க மாட்டேன்' ன்னு என் தலையிலடிச்சு சத்தியம் செய்வான். அன்னிக்கு ராத்திரியே குடிச்சிட்டு வந்து நிப்பான்."

குரு : "பழக்கமாகிவிட்டது, அது இல்லாம முடியாதுன்னு நீ சிகரெட் பிடிக்கறதுக்கு **வால்நட்**."

"நாளைலேர்ந்து குடிக்கமாட்டேன்" என்று சொல்லும் உன் மச்சான் கேசு 'குடிகாரன் பேச்சு பொழுதுவிடிஞ்சா போச்சு' விஷயம், இதற்கு ஏற்ற மருந்து **ஸ்க்ளொரான்த்தஸ்**. 'நாளைக்குப் பார்த்துக்கலாம்'.. 'அப்புறம் செஞ்சுக்கலாம்" என வேலைகளைத் தள்ளிப்போடுபவர்களுக்கும் **ஸ்க்ளொரான்த்தஸ்**.

சிஷ்யனின் மச்சானுக்கு, **ஸ்க்ளொரான்த்தஸ்** தினம் மூன்று தடவை கொடுத்தேன். அடுத்த மாதம் அவனது மனைவி சொன்னாள்.

"சாமி, உங்க கைராசிதான். இப்பல்லாம் அவர் குடிப்பதில்லை.. எங்க பொண்ணுக்கு கல்யாண வயசு ஆயிடுச்சு. இதப்பத்தி பேச்செடுத்தாலே 'அப்புறம் பாக்கலாம்' ன்னு போன மாசம் வரை தட்டிக் கழிச்ச ஆசாமி, இப்ப இன்னடான்னு கல்யாண செலவுக்கு பணம் சேர்க்க ஆரம்பிச்சிட்டாரு.".

ஒரு சமயம் தன் அப்பாவை பற்றி குறிப்பிட்டு சிஷ்யன் சொன்னான்:

"அந்த மருந்து என்னது.. எனக்கு கொடுத்தீர்களே **வால்நட்**... சிகரெட்டை நிறுத்தினேனே, இல்லாட்டி என் மச்சானுக்கு கொடுத்தீர்களே **ஸ்க்ளெரான்த்தஸ்**, அதை என் அப்பாவுக்கு கொடுக்கலாமா? தலைமுறை தலைமுறையா வந்த சொத்து பூராவும் குடிச்சே அழிச்சிட்டாருங்க. ஆனா பாருங்க. இதுக்கு மருந்து இருக்கு வாய்யா, வாங்கித்தரேன் சாப்பிடுங்கன்னா, நீ என்னடா நான் குடிக்கறத நிறுத்தறதுங்கறாரு."

**நான்:** இத பாரு, குடி நிறுத்துவதற்கு மருந்து கேக்காதே.

நீ 'பழக்கமாகிவிட்டது, விட முடியல்லன்னு' சொன்னே, அதுக்குத் தான் **வால்நாட்**.

உன் மச்சான் கேசில 'நாளை முதல் குடிக்கமாட்டேன்' என சொன்னான். இதற்கு **ஸ்க்ளெரான்த்தஸ்**.

"நீ என்னடா நான் குடிப்பத நிறுத்தறது?" என சொல்லும் (மண்டை கனம், கர்வம் பிடித்த) நபர்களுக்கு கொடுக்கப்பட வேண்டிய பாட்ச் மருந்து **வைன்**."

**கேள்வி:** "அது சரி சார், அவர்தான் மருந்து வேண்டாங்கறாரே."

**பதில்:** "அதற்கு வழி இருக்கு.. முதல்ல இதுக்கு பதில் சொல்லு. உன் அப்பா சீமை சரக்குதான் சாப்பிடுவாரா?"

**கேள்வி:** "அட, ஆமாம் சார்! அதென்ன ஜோசியம் மாதிரி அவ்ளோ கரெக்டா சொல்றீங்க..."

**பதில்:** "இப்ப சொல்றேன், கேட்டுக்க. குடிங்காரங்க எல்லாரும் ஒரே மாதிரி அல்ல. இதை விளக்குவோம். காபி ஏழெட்டு தடவை சாப்பிட்டாலும் சரி, பீடி, சிகரெட், சாராயம், போதை மருந்து எதுவாயினும் சரி."

(1) 'பழக்கமாகிவிட்டது' 'அது இல்லாமல் வேலை ஓடாது' என்ற பழக்க தோஷத்திற்கு **வால்நட்**.

(2) 'நாளைலேர்ந்து குடிக்கமாட்டேன்' என்ற 'குடிகாரன் பேச்சு விடிஞ்சா போச்சு' ஆட்களுக்கு **ஸ்க்ளெரான்த்தஸ்**.

(3) குடிப்பதை நிறுத்தியிருப்பான். ஆனா எங்கேயாவது யாராவது குடிப்பதை பார்த்துட்டா ஒரு கிளாஸ் அடிச்சிடுவான். இல்லே தனது நாவை, மனசை 'அடக்க முடியாத'வனுக்கு (irresistible temptation) **செர்ரி ப்ளம்**.

(4) ரெகுலராக குடிக்கமாட்டான். ஆனா 1-ம் தேதி சம்பளம் கையில் கிடைத்ததும் அல்லது போனசு பணம் நிறைய வந்ததும் (கையில் காசு கிடைத்துவிட்டால் மட்டும்) 'ஜாலிக்காக' குடிப்பவன்களுக்கு **வைல்டு ரோஸ்**.

(5) 'கௌரவத்திற்காக', தான் பெரிய ஆள் என மற்றவர் நினைக்க வேண்டும் என status-க்காக குடிப்பவர்களும் உண்டு. கௌரவம் எனில், **சீமை சரக்கு தானே ஐயா போடணும்? ஆகையால் இவனுங்க சீமை சரக்குதான் சாப்பிடுவானுக. இதற்கு ஏற்ற மருந்து வைன்.**

(6) இன்னும் ஒரு இனம் உள்ளது. 'ஓசி'யில் கிடைத்தால் மட்டுமே (தன் காசு செலவழியாமல்) சாப்பிடுபவர்களுக்கு **சிக்கரி.**

நான் சிஷ்யனிடம் **வைன்** என்ற மலர் மருந்து கொடுத்து சொன்னேன். "உன் அப்பா நன்ருக தூங்கும் போது ஐந்து மாத்திரை ஒரு ஸ்பூன் தண்ணீரில் கலந்து அவர் மீது எங்காவது படும்படி தெளித்து விடு. இது அவரது அகம்பாவத்தை நீக்கிவிடும் என்பதால், மறுநாளிலிருந்து நீ மாத்திரை சாப்பிடச் சொன்ஞல் சரியென்று வாங்கி சாப்பிடுவார்."

**கேள்வி:** "இது என்ன சார், மருந்து வைக்கறதுன்னு சொல்வாங்களே, அது மாதிரியா?"

**பதில்:** தமிழ் நாட்டில் 'மருந்து வைப்பது' என்பது ஒருவரை வசியப்படுத்த மட்டுமே உபயோகமாகும் அநாகரீக செயல். அவை வியாதியை குணப்படுத்தாது. தமிழ் நாட்டில் நல்ல விஷயம் என்பதே இல்லாமல் போய்விட்டது†.

**மச்சானுக்கு ஸ்க்ளெரான்த்தஸ் கொடுத்து அவன் குடிப்பதை நிறுத்த வைத்தோமே! இது நல்ல செயல்தானே? இதஞல் அவன் எனக்கு வசியமாகி விட்டாஞ? இல்லையே. தமிழனுக்கு இந்நாள் வரை தெரிந்த வசிய, இடு மருந்து என்பது வேறு விஷயம். பாட்ச் மருந்துகள் வசிய மருந்துகள் அல்ல.**

இனி மீதமுள்ள மருந்துகள் தேவைப்படும் நபர்கள் சொல்லும் வார்த்தைகளை கவனிப்போம்:

**(அக்ரிமனி):** "என் கஷ்டத்தை யாருகிட்ட போய் சொல்லமுடியும்?" "காசு இருந்தென்ன? மன அமைதி அல்லவா முக்கியம்?"

**(ஆஸ்பென்):** "பயமாயிருக்கு.. என்ன பயம்னு சொல்ல தெரியலை"

**(செர்ரி ப்ளம்):** "வலி, எரிச்சல் தாங்க முடியவில்லை" தாங்க முடியாத தாகம், கோபம். வலியில் 'ஐயோ', 'அம்மா' என வீறிட்டு அலறுதல். தற்கொலை மனப்பான்மை. "இந்த வலியுடன் கஷ்டப்படுவதற்கு சாவு எவ்வளவோ மேல்". ஆத்திரத்தில் தலைகால் புரியாமல் கத்துதல். "எனக்கு வந்த கோபத்தில் கொட்டி தீர்த்துவிட்டேன்"

**(சிக்கரி):** "தனியாயிருக்க என்னவோ போல் இருக்கிறது". "மற்றவர்கள் தனக்காக எல்லா உதவிகளையும் செய்ய வேண்டும்" என எதிர்பார்ப்பு.

**(வில்லோ):** "ஏன் என் கழுத்தை அறுக்கறீங்க?". "எல்லோராலும் எனக்கு கஷ்டம்". "ஆண்டவா என்னை ஏன் இப்படி வதைக்கிறாய்?"

**(பைன்):** "யாரை சொல்லி என்ன?" அவனை சொல்லி என்ன? **"நான் செய்த பாவம்.** அனுபவிக்கிறேன்." என் புத்தியை செருப்பாலடிக்கணும்

**(வைல்டு ரோஸ்):** "இராமன் ஆண்டால் என்ன, இராவணன் ஆண்டால் என்ன?" "என்ன பெரிய அவார்டு கொடுத்துடப் போறாளுக்கும்?".

**(கிராப் ஆப்பிள்):** "வலி உள்ள இடம் தனியாக தெரிகிறது". "வலிக்கும் போது காலை தனியாக வெட்டி வைத்து விடலாம்போல் உள்ளது". தலை **பாரம். தலை கனம்.** "இந்த (எனது) தோல்வியாதியை பார்த்தா மத்தவங்க என்ன நினைப்பாங்க?"

**(ஸ்க்ளெரான்த்தஸ்):** "சிறுநீர் போகணும் போல இருக்கு. ஆனா போய் உட்கார்ந்தா போகமாட்டேன்கிறது". "காலையில் மலம் முக்கி முனகி, கொஞ்சமாகத்தான் போகிறது".

"இக்கரைக்கு அக்கரை பச்சை". "குடிகாரன் பேச்சு விடிஞ்சா போச்சு". "க்ஷணச்சித்தம் க்ஷணப்பித்தம்" "அப்புறம் பார்த்துக்கலாம். நாளை செய்யலாம்"

**(ஸ்வீட் செஸ்ட்நட்):** "எனது ஜென்ம விரோதிக்கு கூட, இது மாதிரி கஷ்டம் / வியாதி / வலி வரக் கூடாது". "எனக்கு கதியே (விமோசனமே) இல்லை". "இக்கட்டான நிலை". "தர்ம சங்கடம்". "என் கஷ்டத்தை வார்த்தைகளால் சொல்லமுடியாது."

**(வைன்):** "எனக்கு மிஞ்சினவன் யார்?" "எனக்கு எல்லாமே தெரியும்". "உன்னிடமிருந்து நான் தெரிந்து கொள்ள வேண்டியது எதுவுமில்லை" "நாமதான் எல்லாத்தையும் படிச்சாச்சே... இனி எது வந்தாலும் ஒரு கை பார்த்துவிடலாம்." "நான் சொல்கிறபடி செய்" "உனக்கென்ன தெரியும்". "(உன்) கை, கால ஒடச்சிடுவேன்". "அவனெல்லாம் என் கால் தூசுக்கு சமம்." "நான் அப்படித்தான் (சாராயம்) குடிப்பேன். குழந்தைகளை பெற்றுத்தள்ளுவேன். நீ யார்ரா கேக்கறதுக்கு?". "முதுகெலும்பு எண்ணிடுவேன்". "ஒரு அறைவிட்டேன்னா பல்லு முப்பத்திரண்டும் கழன்டுடும்"

**(ஒயிட் செஸ்ட்நட்):** தலைவலி (அல்லது வேறு வலி, உபாதை) **விடமாட்டேங்கறது".** "நாலு நாளா தொடர்ந்து இருக்கிறது." "ஐந்து வருஷம் முன்பு மதுரையில் அந்த ஹோட்டலில் டிபன் சாப்பிட்ட அன்னிக்கு இந்த வயிறு சங்கடம் ஆரம்பித்தது. இன்றும் அப்படியேதான் இருக்கு". '*சீ*ன்னு வருது, இந்த நெனப்பு விடமாட்டேங்கறதே". "இதைப்பத்தியே நெனச்சு நெனச்சு தூக்கமே போயிட்டது." "எனக்கு இதே கவலை, (நெனப்பு) தான்."

**(கார்ஸ்):** "இதெல்லாம் மருந்திஞல சரியா போகாது". "எனக்கு நம்பிக்கையில்லே". "ஒரே டோசில் ஹோமியோவில் கான்சர் சரியாய்ப் போய்விடுமா? இதல்லாம் நம்பும்படியா இல்லே." "இதற்கு (என் வியாதிக்கு) மருந்தே இல்லே." "நிறைய டாக்டர்கள் பார்த்தாச்சு. டாக்டர்களிடம் எனக்கு நம்பிக்கை போய்விட்டது."

**(ஹார்ன்பீம்):** "எல்லாம் எப்படித்தான் நடக்கப் போகிறதோ?" "எல்லாம் (தடங்கல் இல்லாமல்) ஒழுங்காக நடக்கணுமே" "இந்த வேலையைப் பார்த்தா மலேப்பா (பிரமிப்பு) இருக்கு". "ஏ அப்பா (அம்மாடி), இவ்வளவு வேலேயையும் நான் ஒருத்தனே எப்படி செய்யறது?"

**(இம்பேஷன்ஸ்):** 'சீக்கிரம்,' 'நேரமாச்சு' 'அவசரம்' 'லேட்டாயிடுத்து" 'ஆச்சா?' 'ரெடியா? எவ்வளவு நேரம்' 'என்னே என் பாட்டுக்கு விட்டுடு' 'மணி ஆயிடுச்சு

**(லார்ச்):** "அவன மாதிரி எல்லாம் என்னுல செய்ய முடியாது".

**(ஆலிவ்):** "உடம்பு டயர்டு ஆயிடறது" "சோர்ந்து போயிடறேன்". "உடம்பு முடியலேடி".

**(ஹார்ன்பீம்):** "பலம், தெம்பு வேணும்" "டானிக்" "வைட்டமின் மாத்திரை" "சத்துள்ள உணவு (பாதாம் முதலியன)." "இதை சாப்பிடு, உடம்புக்கு நல்லது." "பலகீனம்".

**(செண்ட்டாரி):** "டைபாய்டு (அல்லது மஞ்சள் காமாலே) வந்த பிறகு உடம்பு 'வீக்' ஆகிவிட்டது."

**சிஷ்யன் :** "அதோ பாருங்க சார். அந்த கடைசி வீட்டு முனுசாமி இருக்கானே. பாவம். ப்யூன் வேலே. மாதக் கடைசி வந்துட்டா பொண்டாட்டி நகைய அடகு வைக்க கிளம்பிடுவான்."

ஏழ்மையை அகற்றவும் மருந்து உள்ளது என சிஷ்யனிடம் நான் கூறி, ஆனுல் ஏழ்மையை அகற்ற மருந்து உள்ளது என்ருல் எவரும் நம்ப மாட்டார்கள். ஆகையால் சிஷ்யனிடம் முனுசாமி பற்றி விசாரித்து அவனுக்கு உடல் உபாதை ஏதும் இருக்கிறதா என கேட்டு அப்படியெனில், அந்த வியாதிக்கு நான் இலவச வைத்தியம் செய்வதாக முனுசாமியிடம் கூறி அழைத்து வரச் சொன்னேன்.

முனுசாமி வந்து, தனக்கு நீண்ட நாட்களாக கால் வலி என சொன்னுன். அவனுடன் வந்த அவன் மனேவி "இராத்திரி பூரா இவர் காலே பிடிச்சுவிட்டே எனக்கு கை வலி வந்துவிட்டது" என அங்கலாய்த்தாள். (இச்சமயம் நான் சிஷ்யனிடம் கண் ஜாடை செய்து இதை கவனித்துக் கொள்ளும்படி சொன்னேன்).

**சிக்கரி** என்ற பாட்ச் மருந்து ஒரு பாட்டில் கொடுத்து, வேளைக்கு ஓரிரு மாத்திரை வீதம் தினம் நான்கைந்து வேளை சாப்பிடச் சொன்னேன். மூன்று மாதம் கழிந்த பின்பு முனுசாமி பற்றி சிஷ்யனிடம் விசாரித்தேன். "மாதக்கடைசி பற்ருக்குறை பட்ஜெட் முனுசாமி, அலுவலக நேரம் போக மீதி ஓய்வு நேரத்தில் **ஊதுவத்தி** தயார் செய்து, வீடுகளில் விற்பனை செய்வதால் மாதக்கடைசியில் அடகு கடைக்கு செல்ல வேண்டிய அவசியமில்லை எனவும், தவிர, அவனுக்கிருந்த கால் வலியும் சரியாகிவிட்டதாக" சொன்ன சிஷ்யன் மேலும் தொடர்ந்தான். "என்ன சார், **சிக்கரி** கால் வலிக்கு நல்லதா?" என்ருன்.

குரு : "கால்வலிக்காக நான் மருந்து கொடுக்கலை. அவனது ஏழ்மையை அகற்ற **சிக்கரி** கொடுத்தேன். பார்த்தாயா, இப்ப எல்லாம் மாசக் கடைசியில் முனுசாமி கடன் வாங்குவதில்லை."

**சிஷ்யன்'**:"அவன்தான் **ஊதுவத்தி** வியாபாரம் ஆரம்பிச்சிட்டானே. ஏன் கடன் வாங்கணும்?".

**சிஷ்யன்**: "அட முட்டாளே! நான் எதற்காக முனுசாமியை அழைத்து வரச் சொன்னேன்? மாதக்கடைசி பற்ருக்குறை பட்ஜெட்டால் கஷ்டப்படுவதை நீக்க மருந்து இருப்பதாக உன்னிடம் நான் சொல்லவில்லையா?"

**சிஷ்யன்**: "அப்படின்ஞ, அவனுக்கு கால் வலி எப்படி சரியாப் போச்சு?"

**நான்**: ஒருவனுக்கு என்ன பிரச்சினையாக இருந்தாலும் பாட்ச் மருந்து சரியாக தேர்ந்தெடுத்து **கொடுத்தால்** அவனது பிரச்சினை (தீராத வியாதியா யிருந்தாலும், **ஏழ்மை**, வயது வந்த தன் பெண்ணிற்கு திருமணமாக வில்லை, தவிர ஆன்மீக விஷயத்தில் சந்தேகம் ஏற்பட்டாலும்), ஒட்டு மொத்தமாக சரியாகிவிடும். மனித இன பிரச்சனைகள் யாவற்றிற்கும் இம்மருந்துகள் தீர்வு கொடுக்கும்.

**சிஷ்யன்**: "அப்படின்ஞ **சிக்கரி** சாப்பிட எல்லோருடைய ஏழ்மையையும் ஒழிச்சிடலாமா? நானும் சாப்பிடவா?"

குரு: "மறுபடியும் பார்த்தாயா? 'ஏழ்மை' என சொல்லாதே. 'ஏழ்மை நிலையில் உள்ள மனிதர்' என சொல். மொதல்ல பார்த்தோமே குடிகாரங்க கேசு. உன் விஷயத்தில் **'பழக்கமாகிவிட்டது' 'சிகரெட் இல்லாமல் முடியாது'** என்ற பழக்க தோஷத்திற்கு உனக்கு **வால்நட்** சிகரெட்டை நிறுத்த உதவியது.

**"நாளை முதல் குடிக்கமாட்டேன்"** (குடிகாரன் பேச்சு விடிஞ்சா போச்சு) என்று சொன்ன உன் மச்சான் **ஸ்க்ளெரான்த்தஸ்** சாப்பிட அவன் குடியை நிறுத்தியது மட்டுமில்லாமல் வயது வந்த தன் பெண் கல்யாணத்தை **'நாளை'**

**'அப்புறம்'** என தள்ளிப்போட்டுக் கொண்டு வந்த மன நிலையும் நீங்கி பெண் கல்யாணத்திற்கு காசும் சேர்க்க ஆரம்பித்தான்.

"நான் அப்படித்தான் குடிப்பேன்." "நீ என்னடா என் குடியை நிறுத்த மருந்து கொடுக்கறது?" என்ற அகம்பாவமுள்ள, அடம் பிடிக்கும் உன் மச்சானுக்கு **வைன்** உதவியது.

"ஏழ்மையில் வாடுபவர்களையும் இனம் காணவேண்டும்."

"மேற்படி குடிகாரர்களை தரம் பிரித்து நீ **'வால்நட்'** டைப், உன் மச்சான் **'ஸ்க்ளெரான்த்தஸ்'** டைப், உன் அப்பா **'வைன்'** டைப் என ரகம் பிரித்தது உனக்கு புரிந்து விட்டதல்லவா?"

**சிஷ்யன்:** "ஆமாம். அது சரிதான். 'குடி'க்குனு இல்லாம, குடிகாரர்கள் பேசும் விதத்தை வைத்து அவர்களை இனம் கண்டுகணும்னு சொல்லறிங்க. அது புரிஞ்சது. இப்ப ஏழ்மையை எப்படி நீக்கறது? "ஏழ்மை"னு சொல்றது தப்புதான். ஏழ்மையில் உழலும் "மனுஷங்க" பற்றி இரகம் பிரிச்சு சொல்லுங்களேன்"

**நான்:** "ஒவ்வொரு மாதக்கடைசியில் கடன் வாங்கும் அல்லது அடகு வைக்கும் நபர்களுக்கு மட்டுமே **சிக்கரி.**

ஒண்ணும் தேதி சம்பளம் வாங்கிய உடனேயே, வாங்கிய சம்பளத்தில் பாதிக்குமேல் கண்ட சமாச்சாரங்களில் காசை செலவழித்துவிட்டு வீட்டிற்கு சில நூறு ரூபாய் மட்டுமே, கொண்டுவரும் நபர்களும் இருக்கிறார்கள். (ஊதாரிகள்) இவர்கள் என்ன சொல்வார்கள் தெரியுமா? "வாழ்க்கையை ஜாலியா அனுபவிக்க வேண்டாமா?" என்பார்கள்.

போனஸ் பணம் வந்தால் அன்று கொண்டாட்டம் தான்! இது மாதிரி 1-ம் தேதி, மற்றும் போனஸ் சமயங்களில் மட்டும் ஊதாரித்தனம் செய்பவர்களுக்கு ஏற்ற மருந்து **வைல்டு ரோஸ்.** "கையில் காசு கிடைச்சா போதும். தொலைத்து விட்டுத்தான் மறுவேலை பார்ப்பான்." என இவரைப்பற்றி மற்றவர் சொல்வார்கள்.

கத்தை கத்தையாக பணம் சம்பாதிக்க **ஹார்ன்பீம்** என்ற மருந்து உதவும்.

**கேள்வி:** "அது சரி, முனுசாமி கேசில் கால் வலிக்குத்தானே மருந்து கொடுத்தே....."

**பதில்:** "அவன் **சிக்கரி** சாப்பிடுவதற்கு முன்பு, ஒவ்வொரு மாத கடைசியிலும் கடன் வாங்கி வந்தான். இது சாப்பிட்ட பின்பு, பற்றாக் குறையை சமாளிக்க பகுதிநேர ஊதுவத்தி தொழில் செய்து சம்பாத்தியம் பெற ஆரம்பித்தான்.

தனக்கு வியாதி வந்திருக்கும்போது "மற்றவர்கள் தனக்கு உதவி

செய்ய வேண்டும்'' என்ற மனநிலையும் **சிக்காி** என்ற மருந்தில் உள்ளது. முனுசாமியுடன் வந்த அவன் மனைவி சொல்லும் போது அதை கவனித்துக் கொள்ளும்படி உன்னிடம் சாடை காட்டினேன். ஞாபகம் இருக்கிறதா? ''இவருக்கு ராத்திரி பூரா காலைபிடித்து எனக்கு கை வலி வந்துவிட்டது''. என்று சொன்னளே. ஆகையால் தான், அவனுக்கு **சிக்காி** கொடுத்தேன்.

தவிர, மாதக்கடைசியில் கடன் வாங்கும் மன நிலையும் இதே சிக்காி மருந்தில் உள்ளது.

எந்த ஒரு நபருக்கும் ஒரு குறிப்பிட்ட கால கட்டத்தில் ஏதாவது ஒரு மருந்திற்கான மனநிலைகள் மட்டுமே காணப்படுமே யல்லாது ஒன்றுக்கு மேற்பட்ட மருந்துகளின் மன நிலைகள் காணப்படாது.

**கேள்வி:** ''**சிக்காி** என்ற மலர் மருந்து சாப்பிட்ட எல்லாரும் ஊதுவத்தி தயாரிக்க ஆரம்பிச்சு விடுவார்களா?''

**பதில்:** ''அப்படியில்லை. யார் யாருக்கு எந்த தொழில் தெரியுமோ, அதில் தேவைக்கேற்ற பணம் பெற **சிக்காி** உதவும். வேறு ஒரு கேசில், இதே மாதக்கடைசி பற்றுக்குறை பட்ஜெட்தான். அவர் **சிக்காி** சாப்பிட்டுவர, ஆபிசில் டிபார்ட்மெண்ட் பரீட்சைக்கு படித்து பாஸ் செய்து சம்பள உயர்வு பெற அவரது பணப்பற்றுக்குறை தீர்ந்தது. இன்னொரு ஒரு கேசில், அவர் அதிக சம்பளம் கிடைக்கும் வேறு வேலைக்குப் போய்விட்டார். ஒவ்வொருவர் கேசிலும், அவரவர்க்கு ஏற்ற சரியான சுலபவழியில் செல்லும்படி இம்மருந்து செய்துவிடும்.''

**கேள்வி:** ''இப்படியெல்லாம் மருந்து சாப்பிட்டால், அவன் போதை மருந்துபோல் இதற்கும் அடிமையாகிவிட மாட்டானு?''

**பதில்:** ''நாம் தினம் மூன்று வேளை உணவு சாப்பிடுகிறோம். இதனுல் கெடுதியா? இல்லையே! தவிர, சாப்பாட்டிற்கு அடிமையாகிவிட்டோம் என சொல்ல முடியுமா? வண்டிக்கு பெட்ரோல் போடுவது போல் மனிதனுக்கு பெட்ரோல், சாப்பாடு. வாழ வழிவகை தெரியும்வரை மட்டும் பாட்ச் மருந்து சாப்பிட்டு வருகிறோம். இதனுல், நல்ல பலன்தான் கிடைக்குமேயல்லாது மருந்து எந்த கெடுதியும் செய்யாது.''

வருடத்தில் ஓரிரு தடவை ரயிலில் 1-2 தினம் தொடர்ந்து பிரயாணம் செய்கிறோம். அதனுல் ரயில் பிரயாணத்திற்கு நீ அடிமையாகி விடுவாய் என பயப்படவேண்டுமா? தேவை யிருப்பதால் பிரயாணம் செய்கிருய். இதே போல் குறிப்பிட்ட கால கட்டத்தில் மலர் மருந்து சாப்பிட அதற்கு பலன் கிடைத்த பின்பு அதை நிறுத்தி விடுகிறோம்.

**கேள்வி:** ''அது என்ன, கத்தை கத்தையாக பணம் சம்பாதிக்க **ஹார்ன்பீம்** என்று சொன்னீர்கள்? குபேர சம்பத்து பெற **மஸ்டர்டு**. இதெல்லாம் நடக்கற காரியமா?''

**பதில்:** "சரியான கேள்வி. எவர் வேண்டுமானாலும் **ஹார்ன்பீம்** சாப்பிட, கத்தை கத்தையா பணம் சம்பாதித்து விட முடியாது.

**சிக்கரி** தேவைப்படும் நபர் என்ன சொல்கிறான்? "மாதா மாதம் இன்னும் ஒரு ஐநூறு ரூபாய் மட்டும் இருந்தால் போதும்" என தனக்கு ஒரு 'லிமிட்' (வரை முறை) வைத்து பேசுகிறார். அந்த அளவு பணம் சம்பாதிக்க, **சிக்கரி** உதவும்.

முனுசாமியின் பக்கத்து வீட்டிலுள்ள, கோபால் என்பவனை பார். அவனுக்கும் அதே அளவு குடும்பம்; அதே அளவு சம்பளம்! ஆனால், அவன் தன் வரவுக்கேற்றபடி அதற்குள் சிக்கனமாக இருக்கிறான். இதனால் அவனுக்கு எந்த கஷ்டமும் இல்லை. "சிறுகக் கட்டி பெறுக வாழ்" என்பது இவனுக்கு மட்டுமே பொருந்தும். இவனுக்கு **சிக்கரி** கொடுக்க, எந்த பலனும் ஏற்படாது. ஏனெனில், குறைந்த சம்பளம் போதவில்லை என இவன் சொல்லவில்லை. ஆனால் முனுசாமிக்கு கொஞ்சம் சௌகர்யமாக இருக்க வேண்டும். இதனால் செலவு சிறிது அதிகம். வாங்கும் சம்பளம் போதவில்லை.

ஒண்ணாம் தேதி சம்பளம் வாங்கியவுடன் ஊதாரித்தனமாக செலவு செய்துவிட்டு ஐந்தாறு தேதிகளிலேயே கடன் வாங்குபவர் சாம்பசிவம் என்பவர். இவருக்கு தேவை "பணம் காய்க்கும் மரம்." இவர் (எல்லோரும் அல்ல) **வைல்டு ரோஸ்** சாப்பிட செலவுக்கேற்றபடி வரவை பெருக்கிக் கொள்ள வழிவகைகளை அம்மருந்து செய்துவிடும். *(வாசக நேயர்களே! ஒண்ணாம் தேதி சம்பளம் வாங்கியவுடன் கண்ட கண்ட சமாச்சாரங்களில் மாதச் சம்பளத்தில் பாதிக்கு மேல் தொலைத்துவிடும் ஊதாரி நபர் கிடைத்தால் விடாதீர்கள். அவரை பிடித்து தினம் தினம் வைல்டு ரோஸ் கொடுத்துவாருங்கள். அதன் பின்பு, அவரிடம் சென்று உமது தேவைகளுக்கு பணம் கேட்டால், கொடுத்துக் கொண்டே இருப்பார். இவர்தான் கடவுள் நமக்காக அனுப்பிய காஷியர். "கேளுங்கள் கொடுக்கப்படும்" என கடவுள் சொன்னது இவரிடம் தான். நாம் இவரிடம் மட்டுமே பணம், பொருள், உதவி கேட்க வேண்டும்.)*

சரி, இனி கத்தை கத்தையாக பணம் சம்பாதிக்க உதவும் **ஹார்ன்பீம்** பற்றி பார்ப்போம்.

**ஹார்ன்பீம்** என்ற மலர் மருந்து தேவைப்படும் நபர் சொல்லும் வார்த்தை '**ஏ... அப்பா...**' '**அம்மாடி**' (மலைப்பு).

மாதம் மூவாயிரம் ரூபாய் சம்பளம் வாங்கும் மூன்று பெண்களுக்கு தந்தையான கல்யாணராமன் தனது மூத்த பெண்ணுக்கு மாப்பிள்ளை பார்த்து அந்நாள் வரை அவர் சேமித்த பணம் மற்றும் பிராவிடண்ட் பண்டில் கடன் வாங்கி ஒரு வழியாக ஒன்றறை லட்சம் வைத்திருந்தார். இவரது மீதி இரண்டு பெண்களும் திருமண வயதிற்கு வந்தவர்கள்தான், கல்யாண தேதிக்கு ஒரு மாதம் முன்பே பத்திரிக்கை அடித்து

எல்லோருக்கும் கொடுத்து வரும் போது, அவரது ஒரு நண்பர் அவரைக் கேட்டார், "ஏனய்யா, இன்னும் ரெண்டு பெண்களுக்கும் சேர்த்து, ஒரே பந்தலில் கல்யாணம் நடத்திட வேண்டியது தானே! அவங்களுக்கும் தான் வயசாகிண்டு போறதே..."

இதைக்கேட்ட கல்யாணராமன் சொல்வதை சற்று கவனமாக பாருங்கள்: "என்னது... இந்த பெண்ணுக்கு கல்யாண செலவுக்கு நகை, சத்திர வாடகையே இரண்டு லட்சத்திற்கு மேல் ஓடிவிட்டது. அவங்க இரண்டு பேருக்கும், இப்பவே கல்யாணம்னு இன்னுமொரு இரண்டு மற்றும் இரண்டு ஆக மொத்தம், நாலு லட்சம்... ஏ அப்பா...!

"ஏ... அப்பா..." என்று வாயைப் பிளந்து மலைத்து நிற்கும் இவருக்கு, ஹார்ன்பீம் தினம் சாப்பிடும்படி கொடுத்துவர, ஐந்து தினம் சென்ற பின்பு இவரது வேறு ஒரு நண்பர் இவரிடம் வந்து, தனக்கு பணமுடை இருப்பதாகவும் ஒரு வியாபாரத்தில் தனது பத்து லட்ச ரூபாய் முடங்கியிருப்பதாகவும் உடனடியாக ஒரு லட்சம்ரூபாய் பத்துநாட்களுக்கு மட்டும் கிடைத்தால், அந்த வியாபாரத்தில் மீதி கொடுக்க வேண்டியதை கொடுத்து, இன்னும் பத்துலட்ச ரூபாய் சம்பாதிக்க முடியும் என கூறவே, கல்யாண ராம ஐயரும் அவருக்கு உடனடியாக கல்யாண செலவிற்கு வைத்திருந்த பணத்தை அவரிடம் கொடுக்க, அவரும் அதை வைத்து வியாபாரத்தை வெற்றிகரமாக முடித்து பத்து தினம் கழித்து அவரிடம் வந்து, அவர் முன்பு பத்து இலட்சத்தை வைத்து "உங்கள் பணத்தினுல் தான் (தக்க சமயத்தில் நீங்கள் கொடுத்ததால் தான்) இதை சம்பாதித்தேன். நீங்கள் உடனடியாக லட்ச ரூபாய் கொடுக்காமல் இருந்திருந்தால், நான் போட்ட முதலும் போயிருக்கும். ஆகையால், உங்களுக்கு வேண்டியதை எடுத்துக்கொண்டு மீதி எது கொடுத்தாலும் எனக்கு சம்மதம் தான்" என சொன்னார். இன்னும் இரண்டு பெண் திருமணத்திற்கு காத்திருப்பதை மற்றவர்கள் சுட்டிக்காட்டி அவர்கள் கல்யாண செலவுக்கான நாலு லட்ச ரூபாயை மட்டுமாவது எடுத்துக் கொள்ளும்படி வற்புறுத்த, அவர் சம்மதித்து அப்பணத்தில் மற்ற இருபெண்கள் திருமணத்தையும் ஒரேபந்தலில் நடத்தி முடித்தார்."

**கேள்வி:**"அப்படின்னு **ஹார்ன்பீம்** சாப்பிட, பொண்ணுங்க கல்யாணத்துக்கு எப்படியோ பணம் வந்துடும்னு சொல்லுங்க."

**பதில்:** "அப்படியில்லை. மேற்படி ஒரே பந்தலில், மூன்று பெண்கள் திருமணத்தையும் நடத்தி முடிக்கும்படி அவரது நண்பர் சொன்னதற்கு கல்யாணராம ஐயர் இடத்தில், சுப்பிரமணி என்பவரின் பதில் கீழ்க்கண்டபடி இருக்கிறது என வைத்துக் கொள்வோம்:

"எனக்கு வருமானம் இவ்வளவுதான். இதுவரை சேர்த்த பணம், பிராவிடண்ட் பண்ட் லோன் ஆகியவற்றில், இந்த ஒரு பெண் திருமணம் தான் செய்யமுடியும். இதை முடித்த பின்பு, மறுபடியும் சிறிது சிறிதாக பணம்

சேர்த்து மூன்று வருடம் கழித்து, இன்னொரு பெண் கல்யாணம். அதற்கடுத்த மூன்று வருஷங்களுக்கு பிறகு, மூன்றாவது பெண்ணுக்கும் செய்து முடிப்பேன்."

மேற்படி பதில், ஒரு ஆரோக்கிய மனநிலை உள்ள மனிதரின் பதில். இப்படிப்பட்ட பதில் சொல்லும் சுப்ரமணியத்திற்கு **ஹார்ன்பீம்** ஒரு பலனையும் தராது.

ஆனால் கல்யாணராம ஐயர், "நா...ன்...கு இலட்சம்.... ஏ..... அ..... ப்.... பா....!" என வாயைப் பிளந்து மலைத்து நிற்கிறார். மலைப்பு தட்டுபவர்களுக்கு மட்டுமே **ஹார்ன்பீம்**. அந்த அளவு பணம் குறுகிய காலத்தில் ***(ஆனால் சரியான, நேரான, சுபலமான, உட்கார்ந்த இடத்திலிருந்தபடியே) சம்பாதிக்க உதவும். 'இதையெல்லாம் நான் நம்ப தயாராயில்லை' என கூறும் வாசகர்கள் கார்ஸ் என்ற மலர் மருந்து சாப்பிட வேண்டும்.)***

***சிஷ்யன் : ஆக ஒருவர் பேசும் விதம், ஆரோக்கிய மன நிலையா அல்லது அது ஒரு பாட்ச் மலர் மருந்தை குறிக்கிறதா என நாம் கவனிப்பது அவசியம்.***

குரு: சுப்ரமணியின் பதில் ஆரோக்கிய மன நிலை. இவரால் மூன்று பெண்களுக்கும் ஒரே பந்தலில் திருமணம் செய்ய முடியாது. **ஹார்ன்பீம்** உதவாது.

ஆனால் கல்யாணராம ஐயர், 'ஏ அப்பா' என மலைத்து நிற்கிறார்.

முத்து என்பவர் எம்.பி.பி.எஸ். முடித்தவுடன் ஒரு வீட்டு வாசல் வராண்டாவில் தடுப்பு அமைத்து கிளினிக் தொடங்கி சில மாதம் சென்ற பின்பு, இவரை பார்க்க வந்த (கடந்தகால பள்ளி) நண்பர் கேட்கிறார்.

"என்னடா, டாக்டர்னு ஒரு நர்சிங் ஹோம், ஒரு பியட் கார் கூட இல்லாம வராண்டாவில் உட்கார்ந்துண்டு இருக்கே..."

**முத்துவின் பதிலை பார்ப்போம்:** "என்னது? நர்சிங் ஹோம் பதினைந்து லட்சம், கார்... இரண்டு லட்சம்... ஏ அப்பாடி..."

இவரது வார்த்தைகளை ("ஏ அப்பாடி...") கேட்ட நான் அவரது மனைவி மூலமாக, அவர் குடிக்கும் தண்ணீரில் தினம் கலந்து கொடுக்க **ஹார்ன்பீம்** கொடுத்தேன். மூன்று மாதம் கழித்து பார்த்தபோது, அந்த வராண்டா காலியாக இருந்தது. அக்கம் பக்கத்தில் விசாரித்த போது, அவர் திடீர் பணக் காரராகி ஊருக்கு மத்தியில் சொந்தமாக நர்சிங்ஹோம், வீடு, கார் என உள்ளதாக கேள்விப்பட்டு அந்த டாக்டரின் மனைவியிடம், **ஹார்ன்பீம்** கொடுக்க ஆரம்பித்த பின்பு நடந்தவற்றை சொல்லச் சொன்னேன்.

**அவளது பதில்:** "அது கொடுக்க ஆரம்பித்த மூன்று வாரம் கழித்து, ஒரு ஞாயிற்றுக்கிழமை எங்கள் தெருவில் உள்ள ஐம்பது நபர்கள் சேர்ந்து பிக்னிக் சென்றோம். பிக்னிக் சென்ற இடத்தில், ஒருவருக்கு ஹார்ட்

அட்டாக் வந்துவிட்டது. என் கணவர் உடனடியாக, தன் கைவசமிருந்த மருந்துகளை கொடுத்து எப்படியோ சமாளித்து அவரை காப்பாற்றி விட்டார். ஹார்ட் அட்டாக் வந்த அவர் பெரிய பணக்காரராம். அதன் பின்பு என் கணவரின் கிளினிக்குக்கு ஒரு தடவை வந்து பார்த்து முகம் சுளித்து "என்னை காப்பாற்றிய டாக்டர், சொந்தமாக ஒரு நர்சிங்ஹோம், கார் கூட இல்லையெனில் எனது status என்னாவது. இந்தாருங்கள் தொகை நிரப்பப்படாத செக்; தேவையான பணத்தை எழுதிக் கொள்ளுங்கள். அடுத்த தடவை நான் வந்து பார்க்கும்போது நீங்கள் சொந்த நர்சிங்ஹோமில் உட்கார்ந்திருக்க வேண்டும்." எனக் கூறி செக் தந்துவிட்டு போனார். அந்த பணத்தில்தான் நர்சிங் ஹோமுக்கு பில்டிங், கார் எல்லாம் வாங்கினோம்.

மேற்படி முத்து என்பவர் இடத்தில் இராமசாமி என்ற MBBS படித்த டாக்டர் கூறும் பதிலைப் பார்ப்போம்.

"ஆமாம். இப்போது தான் பிராக்டீஸ் ஆரம்பித்திருக்கிறேன். கொஞ்சம் கொஞ்சமாக என் பெயர் பரவி, நிறைய நோயாளிகள் வர ஆரம்பித்து கொஞ்சம் பணம் சேர்ந்ததும், வங்கியில் கடன் வாங்கி சிறியதாக நர்சிங்ஹோம் கட்டி அதற்கடுத்த இரண்டு வருடம் கழித்து கார் வங்குவேன்". இது ஆரோக்கிய மன நிலை. (இது எந்த மருந்தின் 'நெகடிவ்' மனநிலையும் அல்ல.) இவருக்கு **ஹார்ன்பீம்** உதவாது.

(நோயாளியின் வாயிலிருந்து வரும் வார்த்தைகளை வைத்தே, அவனுக்கு தேவையான சரியான மருந்தை கண்டு கொள்ளலாம். பேச கற்றுக்கொள்ளாத கைக்குழந் தைகள் மற்றும் பேசமுடியாமல் மயக்க நிலையில் உள்ள நபர்கள் விஷயத்தில், அவரது அங்க அசைவுகள், விருப்பு, வெறுப்புகளை நாம் நமது கண்ணால் பார்த்து மருந்து தேர்ந்தெடுக்கலாம்.) ஒரு சில கேஸ்களில் நோயாளியைப் பற்றி மற்றவர் சொல்லும் விவரம் நமக்கு மருந்து தேர்ந்தெடுக்க உதவும்.

## வாசகர்களுக்கு ஓர் முக்கிய விண்ணப்பம் மற்றும் எச்சரிக்கை!

ஒரு சில வாசகர்கள் தனக்கு எந்த மருந்தும் சரியாக வேலை செய்யவில்லையே என சொல்கின்றனர். ஆனால் உண்மை என்னவெனில் இவர்களிடம் நாம் பேசிய பிறகு எமக்கு என்ன தெரிய வந்தது எனில் மலர் மருந்துகளின் உபயோகங்களை இவர்கள் சரிவர புரிந்து கொள்ளவில்லை என்பது தான்.

தனது பிரச்சினைகள் தீர மட்டும் என்ன மருந்து தேவை என்று ஆராயாமல், முதலில் இம்மருத்துவ முறை பற்றி முழுவதும் தெரிந்து கொள்ள முயற்சி செய்யுங்கள். முடிந்தால் உங்கள் உறவினர்/நண்பர்களின் தேவைகளுக் கேற்ப அவர்களுக்கு சரியான மலர் மருந்து தேர்ந்தெடுத்து கொடுத்து வாருங்கள். இவ்வாறு சில நாட்கள் செய்துவர மலர் மருந்து பற்றிய அறிவு வளரும். இவ்வாறு எல்லா மருந்துகளின் குணாதிசயங்கள், உபயோகங்கள் பற்றி முழுவதும் தெரிந்து கொண்டு (இதற்கு 3-12 மாதம் வரையிலோ, அல்லது அதற்கு மேற்பட்ட காலமோ ஆகலாம்) அதன் பின்பு உங்கள் பிரச்சினைகளுக்கு நீங்கள் மருந்து தேர்ந்தெடுப்பது சுலபமாக இருக்கும்.

## **கார்ஸ்** (Gorse)

### நம்பிக்கையின்மை — Hopelessness (in medicines, doctors etc.)

'கார்ஸ்' என்பது ஒரு மலர் மருந்தின் பெயர். L.I.C.யில் பணிபுரியும் திரு ஸ்தலசயனம் என்பவர் எழுதுகிறுர்: "நான் ஒரு கிராமத்திற்கு (4 சீனிவாசா ரோடு, நேரு நகர், குரோம்பேட்டை) சென்று, (சென்ற வேலையை முடித்துவிட்டு) பஸ் ஸ்டாண்டிற்கு இரவு 10.30 மணிக்கு வந்து பார்த்தால் கடைசி பஸ் சென்றுவிட்டது. மறுநாள் காலேதான் அடுத்த பஸ் என்று சொன்னுர்கள். எனக்கோ அன்றிரவே ஊர் திரும்ப வேண்டும். கடைசி பஸ்ஸும் சென்றுவிட்டதால் அன்றிரவு ஊர் திரும்ப முடியாது என நம்பிக்கை இழந்த நான் **கார்ஸ்** என்ற மலர் மருந்து பற்றி ஞாபகம் வரவே அதில் இரண்டு மாத்திரை எடுத்து சாப்பிட்டு பஸ் ஸ்டாண்டில் காத்திருந்தேன். அடுத்த பத்தாவது நிமிடத்தில் வேறு வழியாக சென்ற பஸ் (சாலே பழுதடைந்து விட்டிருந்ததால்) அக்கிராமத்தின் வழியாக திருப்பி அனுப்பப்பட்டு வந்தது. அதில் நான் ஊர் திரும்பினேன்."

மேற்கு மாம்பலம் குப்பையா செட்டி தெரு எண் 21-ல் வசிக்கும் திரு. நடராஜன் சொல்கிறுர். "எங்களுக்கு மெட்ரோ பைப்பில் தண்ணீர் போதிய அளவு வருவது குறைந்து விட்டிருந்தபடியால் டாங்கர் லாரி தண்ணீர் (ஐநூறு ரூபாய் கொடுத்து மூன்று தினத்திற்கோர் தடவை) வாங்குவதாக தீர்மா னித்தோம். இந்நிலேயில் **கார்ஸ்** மற்றும் **சிக்கரி** என்ற மலர் மருந்துகள் ஓரிரு டோஸ் சாப்பிட, டேங்கர் லாரிதண்ணீர் வாங்க தேவையில்லாமல் பைப்பில் நிறைய மெட்ரோ தண்ணீர் வந்து தினம் தினம் மேல்மாடி தண்ணீர் தொட்டி நிரம்பி வழிய ஆரம்பித்தது. மலர் மருந்துக்கு என் நன்றி!

விழுப்புரம் அருகில் உள்ள கிராமத்திலிருந்து வாசகர் ஒருவர் எழுதுகிறுர்: "பல்லவன் போக்குவரத்து கழகத்தில் நடத்துனர் (கண்டக்டர்) வேலே கிடைக்க இலஞ்சமாக பத்தாயிரம் தர வேண்டும். வேலேக்கு ஆள் எடுக்க தேர்வு நடத்தும் அன்று நான் **கார்ஸ்** என்ற மலர் மருந்து சாப்பிட்டு செல்ல, இலஞ்சம் ஏதும் கொடுக்காமலேயே எனக்கு வேலே கொடுத்தனர். அந்நூறு நபர்களில் நான் ஒருவன் மட்டுமே பணம் கொடுக்காமல் வேலே கிடைக்ப் பெற்றேன்."

உங்கள் குழந்தைகளின் பள்ளி/கல்லூரி அட்மிஷனுக்கு விண்ணப்பம் கொடுக்கும் தேதி ஆகிவிட்டதா? கவலேயை விடுங்கள். **கார்ஸ்** ஓரிரு டோஸ் சாப்பிட்டு விண்ணப்பத்தை எடுத்துக் கொண்டு செல்ல அது பெற்றுக்கொள்ளப்படும்.

அதிக வட்டிக்கு ஆசைப்பட்டு தமிழகத்தில் 'பைஞன்ஸ்' கம்பெனியில் எல்லா பணத்தையும் போட்டு, கம்பெனிக்காரன் சுருட்டிக்கொண்டு ஓடிப்போய், பணத்தை எல்லாம் இழந்தவர்களில் பலர் இரு தினங்களுக்கு

ஒரு முறை **கார்ஸ்** சாப்பிட்டுவர போலீஸ், கோர்ட்டு என அலையாமல் வட்டியும் முதலுமாக தன் பணத்தை பெற்றனர். ஒன்று அந்த கம்பெனிக்காரனே கொடுப்பான். அல்லது, அதற்கு ஈடான பணம் வேறு ஏதோ ஒரு வழியில் கிடைத்துவிடுகிறது. (ஆனால் நீங்கள் நினைக்கும் விதத்தில் அல்ல)

ஒரு நண்பருக்கு பணம் கடன் கொடுத்து இருக்கிறீர்கள். திரும்பி வருவதாக இல்லை. பின்னர் விசாரித்ததில் அவர் இதுபோல் பலரிடம் வாங்கி ஏமாற்றிய விபரம் உங்களுக்கு தெரியவந்து அதை தலைமுழுகுகிறீர்கள் (written off debts). இந்நிலையில் **கார்ஸ்** வாரம் மூன்று தடவை சாப்பிட ஓரிரு மாதத்தில் அதற்கீடான பணம் ஏதோ ஒரு வழியில் உங்களை வந்தடையும்.

**கார்ஸ்** சாப்பிட இமய மலையை ஒரு கையால் தூக்க முடியாதுதான். ஆனால் மற்றவர்களுக்கு நடப்பது ஒருவேளை நமக்கு நடக்கவில்லை எனில், அது நடக்க **கார்ஸ்** உதவும். பள்ளியில் சேர விண்ணப்ப பாரம் பெற கடைசி தேதி ஆகிவிட்டாலும் அந்த பள்ளி ஹெட்மாஸ்டர் அல்லது ஆபீஸ் கிளார்க் சொந்தக்காரர் பையன் எனில், பெற்றுக் கொண்டு உள்ளே எப்படியோ சேர்த்து விடுகிறார் அல்லவா? அது நமக்கும் ஏன் நடக்கக் கூடாது?

பைனான்ஸ் கம்பெனியில் போட்டது நாம் உழைத்து சம்பாதித்த பணம். அதை திரும்பப்பெற **கார்ஸ்** உதவும்.

மலர் மருந்துகள் நமக்கு துணையாக இருக்க எவனும் நம்மை ஏமாற்ற முடியாது.

டாக்டர்கள் மற்றும் மருந்து மீது நம்பிக்கை இல்லாதவர்களுக்கு (settled despair) **கார்ஸ்.** [தன் திறமை, தகுதி மீது நம்பிக்கை இல்லாதவர்களுக்கு (lack of self-confidence) **லார்ச்** என்ற மலர் மருந்து தேவை.]

ஆஸ்த்மா, கான்சர், எய்ட்ஸ் இவைகளுக்கு (அல்லோபதியில்) மருந்து இல்லை என்பது பரவலான அபிப்பிராயம்.

ஆகையால் இந்த வியாதி வந்துவிட்ட நபர்களுக்கு (அவர்களிடம் வேறு மலர் மருந்துக்கான மனநிலை காணப்படாத பட்சத்தில்) **கார்ஸ்** கொடுக்கலாம்.

குணம் கிடைக்காமல் நீண்ட காலமாக அவதிப்பட்டு வரும் ஆஸ்த்மா நோயாளிகள் உலகில் நிறைய பேர் இருக்கத்தான் செய்கிறார்கள். ஆயினும் பூரண குணமானவர்களும் உண்டு. இதே போல்தான் கான்சர் நோயும்.

உலக மக்களின் அனுபவத்தில் (சிலருக்கு மட்டுமே குணம் கிடைப்பதால் அது ஏதோ அதிர்ஷ்டவசம், விதிவிலக்கு என்றும்) பலருக்கு குணம் கிடைக்காததால் இந்நோய்களுக்கு மருந்தில்லை என மனிதர்கள் நினைப்பது சகஜம்.

ஆனால்,

Experience is the best teacher, but fools will learn in no other. (அனுபவம் நல்ல ஆசான்தான். ஆனால் முட்டாள்கள் வேறு விதத்தில் கற்றுக்கொள்ள முடியாது).

**கார்ஸ்** சாப்பிடுவதால் உலகில் நடக்க முடியாத எல்லா விஷயங்களும் நடக்கும் (இமயமலையைக்கூட நமது கைகளால் தூக்கிவிடலாம், வெள்ளை காக்காயும் பறக்கும்) என்று நம்ப ஆரம்பித்து விடுவான் என நினைப்பது சரியல்ல.

உலகில், மனித முயற்சியில் நடக்கக்கூடிய காரியங்கள் நமக்கு (ஏதோ ஒரு காரணத்தால்) நடக்கவில்லையெனில், அது நடக்க **கார்ஸ்** உதவும். இயற்கையிலேயே பாசிடிவ் **கார்ஸ்** தன்மையாளர்களாக உள்ளவர்களை இப்போது பார்ப்போம்.

ஐந்து நண்பர்கள் சினிமா பார்க்கச் சென்றனர். தியேட்டரில் ''ஹவுஸ்ஃபுல்'' போர்டு போட்டிருந்ததால் அதில் நான்கு நண்பர்கள் ''இன்றைக்கு இந்த படம் பார்க்க முடியாது'' என்று நெகடிவ் **கார்ஸ்** தன்மையை குறிக்கும் வார்த்தைகளை உதிர்த்தனர்.

ஐந்தாவது நபர் ஒரு பாசிடிவ் **கார்ஸ் டைப்.** அவர் சொல்கிறார்:

''இன்று இந்த படத்தை இதே தியேட்டரில் நாம் பார்க்கிறோம்.''

இவ்விதம் சொல்லிய அவர், தியேட்டர் வாசலில் உள்ள கூட்டத்தை நோட்டம் விட்டார். அவரது கண்கள் ஒரு நபரின் மீது நிலைகுத்தி நின்றது. நேராக அவரிடம் சென்று ''இந்தா ஐந்து டிக்கெட்டிற்கு 15x5=75 ரூபாய், தவிர உனக்கு பத்து ரூபாய்; ஆக மொத்தம் எண்பத்தைந்து ரூபாய்'' என கொடுத்து (பிளாக்கில் டிக்கெட் விற்கும்) அவனிடமிருந்து டிக்கெட்டைப் பெற்று நண்பர்களுடன் சென்று சினிமா பார்த்தார்.

இதுவே மற்றவர் எனில் ஒவ்வொருவராக பார்த்து எவனாவது 'ப்ளாக்' டிக்கெட் விற்கிறானா என கேட்டு திக்கித் திணறுவார். பல சந்தர்ப்பங்களில் அவ்வாறு கிடைக்காமல் வீடு திரும்புவதும் உண்டு.

மேற்சொன்ன ஐந்து நண்பர்களும் மற்றொரு சமயம் இந்திய அரசால் இரஷ்யாவிற்கு ஒரு கலாசார குழுவில் அனுப்பி வைக்கப்பட்டனர். இரஷ்யாவில் ஒரு மாதம் தங்கி அவர்களது அலுவலக வேலையை முடித்தனர். மறுதினம் இந்தியா திரும்ப வேண்டும்.

முதல் நாள் மாலை ஓய்வாக இருந்ததால் சினிமா பார்க்க கிளம்பினர்.

ஆனால், எங்கு சென்றாலும் 'ஹவுஸ் ஃபுல்,' (இரஷ்யாவில் எந்த கலை நிகழ்ச்சியை எந்த தியேட்டரில் பார்க்க வேண்டும் என்றாலும் ஆறு மாதம் முன்பாகவே பதிவு செய்ய வேண்டும் என்பது தெரிய வந்தது).

அந்த ஐந்து நண்பர் குழுவில் நாம் ஏற்கனவே சொன்ன பாசிடிவ் **கார்ஸ்** நபரை பார்த்து ஏனைய நான்கு பேரும் ஏளனமாக கூற ஆரம்பித்தனர்:

"என்ன, இந்தியாவில் 'ப்ளாக் மார்க்கெட்' உண்டு, அங்கு உன் பாச்சா பலித்தது. ஆனால் இங்கு தியேட்டர் வாசலில் யாருமில்லை. ப்ளாக்கில் டிக்கெட் விற்பது என்பது இரஷ்யாவில் இல்லாத ஒன்று! இப்போது என்ன செய்வாய்?" என்றனர்.

இதை கேட்ட பாசிடிவ் **கார்ஸ்** டைப் நபர், "நாம் இன்று இந்நிகழ்ச்சியை பார்த்து விட்டுத்தான் செல்கிறோம்" எனக்கூறி 'சட்'டென்று நேராக தியேட்டரின் மேலாளர் அறைக்கு சென்று அவரிடம், தான் நான்கு நண்பர்களுடன் இந்தியாவிலிருந்து இரஷ்யா வந்த கலைகுழுவினர் எனவும், அதோடு தாங்கள் பகுதி நேர பத்திரிகை நிருபர்கள் (journalists) என்றும் கூறி, அன்று அந்த தியேட்டரில் நடக்கும் நிகழ்ச்சியை பார்க்க முடியாததால் இந்தியா திரும்பியவுடன் இரஷ்யாவின் பயண அனுபவத்தைப்பற்றி குறிப்பிட்டு, "இரஷ்யாவில் தியேட்டரில் ஏதாவது நிகழ்ச்சி பார்க்க ஆறு மாதம் முன்பே பதிவு செய்ய வேண்டும் என எழுதிவிடவா" என கேட்டார்.

இதை செவியுற்ற அந்த தியேட்டர் மேலாளர் / மானேஜர், "அப்படியெல்லாம் எழுதிவிடாதீர்கள், உங்கள் சக தோழர்களை அழைத்துக்கொண்டு தியேட்டர் உள்ளே செல்லுங்கள்" என கூறி தன் அறையிலிருந்து ஐந்து நாற்காலிகளை எடுத்துவந்து அவர்களை அமரச்செய்து குளிர்பானம் கொடுத்து உபசரித்தார். பணம் கொடுக்க முற்பட்டபோது அந்த மேலாளர் அவர்களை கையமர்த்தி "இன்று நீங்கள் எங்கள் விருந்தினர் (guest) ஏனெனில், நீங்கள் எங்கள் நட்பு நாடான இந்தியாவிலிருந்து வந்திருக்கும் பத்திரிக் கையாளர்கள்" என கூறினார். ஐந்து நண்பர்களும் இலவசமாகவே நிகழ்ச்சியைப் பார்த்துத் திரும்பினர். (வெளிநாட்டு பத்திரிக்கையாளர்கள் எனில், அதுவும் இந்தியாவிலிருந்து வந்தவர் எனில், அவர்களுக்கு குறையேதும் இல்லாமல் திருப்தி செய்து அனுப்ப வேண்டும் என்பது இரஷ்ய அரசு எல்லா மேல்மட்ட அதிகாரிகளுக்கும் எழுதப்படாத கட்டளையாக உத்தரவு போட்டிருந்தது. நமது **கார்ஸ்** டைப் நபருக்கு இது தெரியாதுதான்.)

ஆனால் பாசிடிவ் தன்மையாளர்கள் தாம் அறியாமலேயே, எங்கு தட்டினால் (பலன்) கிட்டுமோ, அங்கு ஆட்டோமேட்டிக்காக தட்டுவார்.

எமது 2-நாள் நேர்முக பாட்ச் மருந்து வகுப்பில் படித்த ஓய்வு பெற்ற ஒருவர் தனது பிடிவாத பேரனுடன் (அவனது வேண்டுகோளுக்காக) சினிமா பார்க்கச் சென்றார். ஆனால் 'ஹவுஸ் ஃபுல்' போர்டு தொங்கவே வீட்டிற்கு திரும்ப எத்தனித்தபோது அந்த பிடிவாத பேரன் "நீ என்னை ஏமாற்றுகிறாய், சினிமா பார்க்காமல் நான் வீட்டிற்கு வரமாட்டேன் போ" என அடம் பிடிக்கத் தொடங்கினான்.

இவர் உடனே **கார்ஸ்** இரண்டு மாத்திரை எடுத்து சாப்பிட்டார். ஓரிரு நிமிடத்திற்கு பிறகு தியேட்டர் ஆபீஸ் ரூமிலிருந்து வெளியே வந்து கொண்டிருந்த ஒருவரை கைதட்டி கூப்பிட்டு "என்ன, என்னை தெரியலையா?" என்று கேட்க, இருவரும் ஒன்றாக பள்ளியில் படித்ததை

அவருக்கு நினைவூட்ட, சட்டென்று நினைவுக்கு வராதவராக, அவர் "உங்களுக்கு என்ன வேண்டும் சொல்லுங்கள், நான் அவசரமாக வெளியில் செல்கிறேன்" என்று சொல்ல, இவர் பேரன் அடம்பிடிப்பதால் இரண்டு டிக்கெட் கேட்க அவர் ஒரு தியேட்டர் பணியாளைக் கூப்பிட்டு இவருக்கு இரண்டு டிக்கட் கொடுக்கச் சொன்னார்.

மனமிருந்தால் மார்க்கமுண்டு. மார்க்கம் (வழி) தெரிய **கார்ஸ்.**

**கார்ஸ்** சாப்பிட, நீச்சல் தெரியாதவன் ஆற்றில் நீந்த முடியாதுதான். (ஆற்றில் அடித்துச் செல்லப்படும் ஒருவனை பார்க்கும் கரையில் உள்ள நீச்சல் தெரியாத ஒருவன் **ராக் ரோஸ்** என்ற மலர் மருந்து சாப்பிட மூழ்கும் நபரை காப்பாற்றி விடுவான்.)

ஆனால் விண்ணப்ப படிவம் பெற கடைசி தேதி முடிந்துவிட்டாலும், அந்த கல்லூரியில் வேலை செய்யும் ஒருவர் நமக்கு நண்பர் அல்லது சொந்தக்காரர் எனில் ஒன்று எடுத்துவந்து தருவாரே. மனிதன் போட்ட சட்டதிட்டங்களினால் நமக்கு ஒரு காரியம் நடக்க முடியாதெனில் அது நடக்க **கார்ஸ்.**

Nature hates our systems.

நாளை மறுதினம் இரயிலில் டில்லி செல்ல வேண்டும். ரிசர்வேஷன் கவுண்டர் சென்றால் வெயிடிங் லிஸ்ட் நம்பர் 150, பெர்த் கிடைக்கவே கிடைக்காது என்கிறான். பிரயாண தினத்தன்று சாதா டிக்கட் வாங்கி ரயிலில் ரிசர்வ் பெட்டியில் உட்கார்ந்து **கார்ஸ்** சாப்பிட்டு பெர்த் வாங்கியவர்கள் ஏராளம்.

"அதெல்லாம் நடக்காது" என சொல்லாதீர்கள். "நடக்காது என்பது என் அகராதியில் கிடையாது" என்று சொல்கிறது **கார்ஸ்** என்ற மலர் மருந்து.

**அனுபவ கேஸ்:** தனது மனைவியை அழைத்து வந்த ஒரு நபர், அவளது வியாதியைப்பற்றி விவரித்தார். ஆனால் அவள் ஒன்றிரண்டு வார்த்தைகள்தான் அதுவும் அசுவாரசியமாக பேசினாள். (**அக்ரிமனி** அல்லது **வைல்டு ரோஸ்**- அலட்சியம் - டைப் ஆக இருக்கலாம் என நினைத்தேன்.) அவளுக்கு ஏதோ மருந்து கொடுக்க நான் முற்பட்டபோது சொல்கிறாள்: "டாக்டர், என் கணவர் வற்புறுத்தியதால் வந்தேனேயொழிய என் வியாதி மருந்தினால் சரியாகப் போகும் என்ற நம்பிக்கை எனக்கு இல்லை."

ஒரு பாட்டில் **கார்ஸ்** அவளது கணவரிடம் கொடுத்து தினம் 2-3 வேளை (வேளைக்கு இரண்டு மாத்திரை வீதம்) கொடுக்கச் சொன்னேன். அடுத்த மாதம் அவளாகவே வந்து தனது வியாதி நன்கு குணமாகியிருப்பதாக, மேலும் மருந்தை கேட்டு வாங்கிச் சென்றாள்.

**சர்க்கரை** நோய், ஆஸ்துமா, கான்சர், எய்ட்ஸ் போன்ற வியாதிகளுக்கு (நிரந்தர குணம் கிடைக்க) மருந்து இன்னும் கண்டுபிடிக்கவில்லை என்று

அல்லோபதி டாக்டர்களால் அரசு தொலைக்காட்சி, வானொலி, செய்தித்தாள்களில் தினமும் டமாரம் அடித்து இதற்கு மருந்தே இருக்க முடியாது என்ற பிரமையை மக்கள் மனதில் ஏற்படுத்தி விடுகின்றனர். ஆகையால் மக்கள் இதை நம்பி விடுவது இயற்கை. இந்நோயாளிகளுக்கு நாம் எந்த முறையில் மருந்து கொடுத்தாலும் அவற்றுடன் (வேறு மலர் மருந்துக்கான மனக்குறிகள் இல்லாத பட்சத்தில்) **கார்ஸ்** கொடுப்பது விரைவில் பலன் கிடைக்க உதவும்.

**நம்பிக்கையின்மைக்கான மருந்துகள்:**

for hopeless despair — Gorse
for abject despair — Sweet Chestnut

(1) தன் மீது நம்பிக்கையில்லாதவர்களுக்கு **லார்ச்.**

(2) வீட்டை சரியாக பூட்டிவிட்டு வந்தோமா, இல்லையா என்ற நிச்சயமற்ற தன்மைக்கு **ஸ்க்ளெரான்த்தஸ்.**

(3) தன் வியாதி சரியாகாது என்று "குறை" பட்டு துக்கப்பட்டுக் கொள்ளும் நபர்களுக்கு **ஜென்ஷன்.**

(4) டாக்டர், மருந்துகள் மீது நம்பிக்கையின்மை (**கார்ஸ்**)

**கார்ஸ்** என்ற இந்த மலர் மருந்தில் நமது அன்றாட வாழ்க்கையில் நிறையவே உபயோகங்கள் உண்டு. இப்புத்தகத்தின் முந்தைய பதிப்பு வாசகர்களின் அனுபவத்தை பார்ப்போம்:

சென்னையிலிருந்து டில்லி/பம்பாய் செல்ல இருபது தினங்களுக்கு முன்பாக ரிசர்வ் செய்தாலொழிய ரயிலில் பெர்த் கிடைப்பது குதிரைக் கொம்புதான். முன் பதிவு ஏதும் செய்யாமல் பிரயாண தேதியன்று சாதாரண டிக்கெட் வாங்கி ரிசர்வ் பெட்டியில், ஏறி உட்கார்ந்து **கார்ஸ்** ஓரிரு டோஸ் சாப்பிட, டிக்கெட் பரிசோதகர் நம்மை அணுகி (நாம் ஏதும் கேட்காமலேயே) பெர்த் கொடுத்து விடுவது பலரது அனுபவம். (**கார்ஸ்** சாப்பிடுவதால் டிக்கெட் கூட வாங்காமல் ரிசர்வ் பெட்டியில் பயணம் செய்யமுடியும் என நாம் எழுதவில்லை என்பதை வாசகர்கள் இங்கு கவனிப்பது அவசியம்.)

ஓரிருவருக்கு எனில் **கார்ஸ்** சரி. டில்லி செல்லும் ஒரு பெட்டியில் முப்பது நபர்கள் ஏறி எல்லோரும் **கார்ஸ்** சாப்பிட்டால் எப்படி வேலை செய்யும் என சில வாசகர்கள் எம்மை மடக்க நினைத்து கேட்கிறார்கள். இப்படி ஒரு சந்தர்ப்பத்தில் வாரணாசி எக்ஸ்பிரஸில் (செப்டம்பர், 2001) இருபது உறவினர்களுடன் சென்ற Dr. L. இராமமூர்த்தி, (Plot 310, காமராஜ் சாலை, ராமகிருஷ்ணா நகர், ஆழ்வார் திருநகர், சென்னை-87, தொலைபேசி: 4861584) என்பவர் ரயில்வே ப்ளாட்பாரம் சென்றவுடன் எல்லோருக்கும் ஒரு டோஸ் *கார்ஸ்* கொடுக்க, "இன்று கூட்டம் அதிகமாக இருக்கிறது" என்று பேசிக்கொண்ட ரயில்வே ஊழியர்கள் அதிகப்படியாக ஒரு கம்பார்ட் மென்டை அந்த வண்டியில் இணைத்தனர். இது ஓர் உண்மை நிகழ்ச்சி.

நாம் **கார்ஸ்** சாப்பிட அவர்களை (நேர் விதத்தில்) சுறுசுறுப்படைய செய்து விடலாம். நாம் காசு கொடுத்து டிக்கெட் வாங்கித்தானே பெர்த் கேட்கிறோம்? அதிக இரயில்களை இயக்குவதால் வேலையில்லாத் திண்டாட்டம் தானே ஒழியும்?

'திரும்பி வராது' என நாம் தலை முழுகிய விஷயங்களில் (written off debts, closed files) கடன் கொடுத்த பணம் திரும்ப கிடைக்க **கார்ஸ்** வாரம் மூன்று தடவை சாப்பிட்டு வந்தால் போதும்.

எமது 2-நாள் நேர்முக வகுப்பில் கலந்து கொண்ட நபர்கள் சொல்வதை படிப்போம்.

டாக்டர் G.R. நாயுடு, (Plot No.6, "Shilabadra Nivas", Udaya Nagar, Hubli - 580 023. Phone : 0836 - 280177 எழுதுகிறார்: "பெங்களூரிலிருந்து சென்னை செல்ல பிருந்தாவன் எக்ஸ்பிரஸில் (சாதா டிக்கெட் வாங்கிக் கொண்டு) ரிசர்வ் பெட்டியில் ஏறி உள்ளே சென்றதும் ஒரே கூட்டம். ஒரு டோஸ் **கார்ஸ்** என்ற மலர் மருந்து 2 மாத்திரை வாயில் போட்டு சுவைத்து சாப்பிட்டேன். சுமார் 15 நபர்களுக்கு மேல் கையில் டிக்கெட் வைத்துக்கொண்டு பெர்த் கேட்டு T.T.R. பின்னால் சென்று கொண்டிருந்தனர். T.T.R. என்னைப் பார்த்ததும் நான் என் டிக்கெட்டை நீட்டினேன். மற்றவர்களை பார்த்து அவர் சொன்னார். "அவருக்கு (என்னை சுட்டிக்காட்டி) நான் முதலில் கொடுக்கவேண்டும்" என்று சொல்லி அதுவும் கீழ் பர்த் கொடுத்தார்."

"மற்றொரு சமயம் ஹூப்ளியிலிருந்து சிர்ஸி வரை பஸ்ஸில் செல்ல வேண்டியிருந்தது. இரண்டு மணி நேர பஸ் பயணத்தில் எனக்கு ஜன்னல் சீட் தேவை. வேகமாக அடிக்கும் காற்று என் முகத்தில் பட வேண்டும். அப்படியில்லாமல் வேறு இடத்தில் உட்கார்ந்தாலோ, நின்று பிரயாணம் செய்தாலோ எனக்கு கூட்டத்தில் மூச்சு விடுவது சிரமமாகி தவித்துப்போவேன். தவிர எனக்கு அடிக்கடி தாகம் எடுக்கும். ஒரு பாட்டில் தண்ணீரை அப்படியே முழுவதும் குடித்துவிட வேண்டும்.

அன்று நான் பஸ்ஸில் ஏறியபோது கூட்டம் அதிகமாக இருந்ததால் உட்கார இடம் கிடைக்காமல் நிற்கவேண்டி வந்து விட்டது. தவிர, தண்ணீர் பாட்டிலும் எடுத்து செல்ல மறந்து விட்டேன். கூட்டம், வெயில் நேரம், தாகம் வேறு. நான் சுற்று முற்றும் பார்த்தபோது ஜன்னல் சீட்டில் ஒரு நபர் தன் கையில் ஒரு பாட்டில் தண்ணீருடன் உட்கார்ந்திருந்தார். அவரிடம் தண்ணீர் கேட்டால்கூட முழுவதையும் குடித்து விட முடியாதே. எனக்கு முழு பாட்டிலும் குடித்தால்தான் தாகம் அடங்கும்.

இன்று தாகத்துடன் ஜன்னல் சீட் வேறு இல்லாமல் பிரயாணம் செய்ய வேண்டியதுதான் என நான் நம்பிக்கை இழந்த நிலையில், மலர் மருந்து **கார்ஸ்** பற்றி ஞாபகம் வரவே ஒரு டோஸ் எடுத்து சாப்பிட்டேன். இரண்டு நிமிடங்கள் கழித்து கொஞ்சமாவது தண்ணீர் குடிப்போம் என்று ஜன்னல் சீட்டில் உட்கார்ந்திருந்த அவரிடம் சிறிது தண்ணீர் கேட்க அந்நபர் நான் கேட்பதற்காக காத்திருந்தது போல் "இந்தாங்க. பாட்டில் பூராவும் உங்களுக்குத்தான். நான் தண்ணீர் குடிப்பதே கிடையாது. என் மனைவி வற்புறுத்தி இதை என்னிடம் கொடுத்தாள். இது எனக்கு தேவையில்லை. முழுவதும் உங்களுக்குத்தான்" என்று சொல்லி பாட்டிலை என் கையில் திணித்ததோடில்லாமல், உடனடியாக எழுந்தவர் அந்த சீட்டில் என்னை உட்காரச் சொல்லிவிட்டு வேகமாக டிரைவர் சீட் பின்புறம் இருந்த நபர்

பக்கத்தில் நின்று சிர்ஸி என்ற ஊர் செல்லும்வரை பேசிக் கொண்டேயிருந்தார். **கார்ஸ்** சாப்பிட நமக்கு இராஜ மரியாதைதான்!

**கார்ஸ்** என்ற மேற்சொன்ன மலர் மருந்துடன் வேறு சில மருந்துகளை ஒப்பிட்டு படித்து புரிந்து கொள்வது அவசியம்.

வீட்டில் திருடு போய்விட்டால் (திகில்) இது தெரிந்த உடன், வீட்டில் உள்ள அனைவரும் நான்கு மணிக்கோர் தடவை **ராக் ரோஸ்** என்ற மலர் மருந்து இரண்டு மாத்திரை (மூன்று டோஸ்கள் மட்டும்) சாப்பிட்டுவர, அடுத்த 24-72 மணி நேரத்தில் திருடுபோன பொருட்களை போலீஸ் மீட்டு கொடுத்து விடும். அல்லது அதற்கு ஈடான பொருள்/பணம் வேறு ஏதோ ஒரு வழியில் நமக்கு வந்து சேர்ந்து விடும். திருடுபோன உடனேயே **ராக் ரோஸ்** சாப்பிட வேண்டும்.

(ஆனால் பல மாதம்/வருடம் முன்பு திருடு போன பொருள் கிடைக்க நாம் சாப்பிட வேண்டிய மலர் மருந்து **கார்ஸ்**.)

டூரிஸ்ட் டாக்சி சர்வீஸ் நடத்தும் மேற்கு மாம்பலம் திரு. பன்னகசயனன் (**VENO MPPS** டூரிஸ்ட் டாக்ஸி, ஜி.கே. ஐஸ்வர்யம் காம்ப்ளெக்ஸ், புதிய எண் 23, (பழைய எண் 8) ஆர்ய கவுடா ரோடு, மேற்கு மாம்பலம்) (தொலைபேசி 24719484, 24849992) சொல்கிறார்: "எனக்கு சொந்தமான வேன் திருடு போய்விட்டது. உடனடியாக நாலா திக்கிலும் நான்கு டாக்ஸிகளை அனுப்பி தேடச் சொல்லலாம் என நினைத்தேன் (இதற்கே ஐயாயிரம் வரை ஆகும்.) ஆனால் அதை செய்யாமல் நீங்கள் சொல்லியபடி போலீஸில் கம்ப்ளெயிண்ட் எழுதி கொடுத்து விட்டு நான்கு மணிக்கோர் தடவை **ராக் ரோஸ்** சாப்பிட்டேன். இரண்டு நாட்கள் கழித்து வண்டியை திருடி எடுத்துச் சென்று விருது நகரில் R.T.O. ஆபீசரிடம் மாட்டி, வண்டி பறிமுதல் செய்யப்பட்டு, அதைத் திருடிய டிரைவர் நேராக என்னிடம் வந்து பொய் சொன்னான். அவனை போலீசில் பிடித்துக் கொடுத்து, அடி விழுந்த பின்பு திருடியதை ஒப்புக் கொண்டான். நான் விருதுநகர் சென்று வண்டியை எடுத்து வந்தேன்."

டாக்டர்கள் கை விரித்து விட்ட நிலையில் அந்த நோயாளி உயிர் பிழைக்க (எய்ட்ஸ், இரத்தபுற்று நோய், நான்காம் நிலை புற்றுநோய்) ஆகிய நிலைமைகளில் நோயாளிக்கு நெருங்கிய உறவினர், நண்பர் ஆகியோர் தினம் 2-3 வேளை (3-5 தினங்களுக்கு) **ரெட் செஸ்ட்நட், ராக்ரோஸ், ஸ்வீட் செஸ்ட்நட், கார்ஸ்** ஆகிய நான்கு மருந்துகளையும் சேர்த்து சாப்பிட்டு வர, டாக்டரால் கை விடப்பட்ட நோயாளி எப்படியோ பிழைத்து எழுந்து விடுவான்.

## வாழ்க்கைப் பிரச்சினை, வியாதி, பணப்பற்றுக் குறை ஏற்பட காரணங்களும் அவை தீர வழிகளும்

கடவுள் மனிதர்களை முப்பத்தெட்டு விதமாக பிரித்து ஒவ்வொருவரும் (மற்ற எவராலும் எதிர், நிகழ் அல்லது இறந்த காலத்தில் செய்ய முடியாத) ஒரு குறிப்பிட்ட வேலையை செய்யும்படி அவரவருக்கு 'தனி'த் தன்மை (individuality) unique *i. c.* (integrated circuit) unit கொடுத்து பூமிக்கு அனுப்பி வைத்திருக்கிறார். இந்த 38 விதங்களில் ஏதோ ஒரு விதமாக இல்லாத மனிதரே இல்லை எனலாம்.

(A) கடவுளால் தனக்கிடப்பட்ட வேலையை செய்து வருபவனுக்கு வியாதி, வாழ்க்கைப் பிரச்சினை ஆகியவை வராமல் இருப்பதோடு தேவைக்கு மேல் பணம், செல்வம், வசதிகள் அவன் கேட்காமலேயே கிடைக்கின்றன.†

(B) கடவுளால் தனக்கிடப்பட்ட வேலையை செய்யாமல் பள்ளி, கல்லூரியில் B.A., M.A., M.Sc., என படித்து எட்டு மணிநேர ஆபீஸ் வேலை அல்லது சொந்தத் தொழில் மட்டுமே போதும் என இருப்பவர்களுக்கு அவர்கள் கடமையை நினைவூட்ட அவர்களுக்கு வியாதி, பணப் பற்றுக்குறை போன்ற பிரச்சனைகளை கடவுள் கொடுக்கிறார்.

மேற்சொன்ன (A) -யில் உள்ள நபரை 'பாசிடிவ்' அல்லது நேர்மறை தன்மையாளர் எனவும் (B) -யில் உள்ளவரை 'நெகடிவ்' அல்லது எதிர்மறை தன்மையாளர் எனவும் சொல்வோம்.

'பாசிடிவ்' தன்மையாளராக (அதாவது கடவுளால் தனக்கு இடப்பட்ட வேலையை செய்து) வாழ்ந்து வந்தால் இவர்களுக்கு வியாதி, பிரச்சினைகள் வராமலும் (அப்படியே வந்தாலும் உடனடியாக மருந்தில் குணமாகி) தேவைக்கு மேல் செல்வம், வசதிகள் அடைவர் என்று சொன்னோம்.

உண்மையிலேயே 'பாசிடிவ்' ஆக வாழ்ந்தவர்களைப் பார்த்தால் இது புரியும். உதாரணம்: மகாத்மா காந்தி, அன்னை தெரஸா, பாடகி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி போன்றோர்.

"நான் பாடுவதை கேசட்டில் பதிவு செய்து விற்பனை செய்து அதன் விலையில் எனக்கு ஒரு பகுதியை (royalty) தருகிறாயா?" என எம்.எஸ். அவர்கள் எந்த ரிகார்டிங் கம்பெனிக்காரனிடமும் போய் படியேறி கேட்காமலேயே பின்னவர், எம்.எஸ். இடம் வந்து அவருக்கு சௌகரியமான நேரம் கேட்டு அவர் பாடுவதை பதிவு செய்து கேசட் விற்று அதில் ஒரு பகுதியை எம்.எஸ்.க்கு கொடுக்கின்றனர்.

---

† *நீ 'உன்' கடமையை (ஏதோ ஒரு தொழில், ஆபீஸ் வேலை அல்ல) செய்தால் உன் தேவைகளை நான் பூர்த்தி செய்வேன்—பகவத் கீதை.* Every man is sent on earth for a particular purpose–*Bible*

நாம் வெளிநாடு செல்ல வேண்டுமானால் நமது சேமிப்பில் எவ்வளவு பணம் உள்ளது என பார்த்து பிறகு 'விசா' வாங்க வெளிநாட்டு தூதரகம் சென்று அவன் கேட்கும் கேள்விகளுக்கெல்லாம் பதில் சொல்லி.... டிராவல் ஏஜெண்டிடம் சென்று விமான டிக்கெட் வாங்கி, அதுவும் 'வெயிடிங் லிஸ்ட்' என சொல்லப்பட்டு... இத்யாதி... இத்யாதி...

அன்னை தெரஸா போன்றோர் வெளிநாடு செல்ல வேண்டுமானால் அவர்கள் எதற்காகவும் அலைய வேண்டாம். காசை தொடக் கூட அவசியமில்லை. எல்லாம் விறுவிறுப்பாக, ஆட்டோமேடிக்காக, செய்யப் பட்டு விடும். வெளிநாட்டில் ஐந்து நட்சத்திர ஹோட்டலில் தங்கினால் ஹோட்டல்காரன் வாடகை வாங்க மாட்டான்.

சித்தா அல்லது ஆயுர்வேத மருந்து ஒரு மண்டலம் (48-நாள் கோர்ஸ்) நீங்கள் சாப்பிட்டு வருவதாகவும், இதற்கு பசும் பால் அவசியம் எனவும் வைத்துக் கொள்வோம். மருந்து சாப்பிட்டு வரும்போது இடையில் வெளியூர் செல்ல வேண்டி வந்தால், அந்த ஊரில் பசும் பால் எங்கு கிடைக்கும் என நீங்கள் அலைய வேண்டும்.

ஆனால் நீங்கள் வருவது அவ்வூர்வாசிகளுக்கு முன்கூட்டியே தெரிந்து அவர்கள் நல்ல பசு மாடு தேர்ந்தெடுத்து அதற்கு பாதாம் போன்ற ஊட்டச் சத்துள்ள உணவு கொடுத்து நாம் சென்றவுடன் அதன் பாலை கறந்து தினம் இரு வேளை உங்களுக்கு (காசு ஏதும் வாங்காமல்) கொடுத்தால் எவ்வளவு சௌகர்யமாக இருக்கும்!

உங்களுக்கும் எனக்கும் இது நடக்காது. ஏனெனில் நாம் 'நெகடிவ்' டைப் ஆக உள்ளோம்.

ஆனால் காந்தி வெளியூர் சென்றால் இவ்வாறு பசும்பால் முதலியன முன் கூட்டியே (அவர் கேட்காமலேயே) ஏற்பாடு செய்யப்பட்டது. ஏனெனில் அவர் 'பாசிடிவ்' தன்மையாளராக வாழ்ந்தார்.

நீங்கள் 'பாசிடிவ்' ஆக வாழ்ந்தால் எல்லோரும் உங்களுக்கு கை கட்டி (கூலி வாங்காமல்) சேவகம் செய்வர்.

'நெகடிவ்' ஆக வாழ்ந்தால் எல்லோருக்கும் நீங்கள் கைகட்டி (அதுவும் தினம் எட்டு மணி நேரம் வேலை செய்து) முப்பது நாட்களுக்கு ஒரு முறை ஏதோ சில ஆயிரம் ரூபாய் மட்டும் பெறுவீர்கள்† (இதற்கு பள்ளிப்படிப்பு பத்து வருடம், கல்லூரி ஐந்து வருடம் படித்த பிறகுதான் அதுவும் கிடைக்கும்).

கடவுள் மனிதர்களை 38 விதமாக பிரித்து படைத்துள்ளார் என பார்த்தோம். எந்த ஒரு மனிதரும் இந்த 38-ல் ஏதோ ஒரு 'இரக'மாகத்தான் இருப்பார் எனவும் பார்த்தோம்.

'பாசிடிவ்' ஆக வாழ்க்கை நடத்தாதவர்களை (அதாவது கடவுள் இட்ட வேலையை செய்யாதவர்களுக்கு) அவர்கள் கடமையை நினைவுபடுத்த, அவரவருக் கேற்ற 38 வித வியாதி, பணப் பற்றுக்குறை போன்ற பிரச்சினைகளை கடவுள் கொடுத்துள்ளார். அவர் கொடுத்த வேலையை செய்ய, பிரச்சினைகள் நீங்கி விடும்.

அவர் கொடுத்த வேலை என்ன வென்று தெரியாவிட்டால் அதைத் தெரிந்து கொள்ள, 38 வித நபர்களுக்கும் மருத்துவ குணம் வாய்ந்த 38 வித மலர்களை இங்கிலாந்தில் உள்ள அடர்ந்த காடுகளில் விளையும்படி கடவுள் செய்துள்ளான். இவற்றில் ஒரு மலர்கூட இந்தியாவில் காணப்படவில்லை. (இவற்றை நாம் இந்தியாவில் இறக்குமதி செய்து மாத்திரை வடிவில் விற்பனை செய்கிறோம்).

அடுத்த பக்கங்களில் உள்ள அட்டவணையில் 38 விதங்களையும் கொடுத்துள்ளோம். அதைப்பார்த்து நீங்கள் என்ன 'இரகம்' என்றும் அதன் 'பாசிடிவ்' ஆக உள்ளவரா அல்லது 'நெகடிவ்' தன்மையாளரா என சுலபமாக தெரிந்து கொண்டு, நெகடிவ் தன்மையாளராக இருக்கிறீர்கள் எனில் அதற்கென கொடுக்கப்பட்டுள்ள மலர் மருந்தை தினம் 2-3 வேளை சாப்பிட்டுவர விரைவில் 'பாசிடிவ்' ஆக மாறி விடுவீர். இதனால் உங்கள் வியாதிகள் மட்டுமின்றி, வாழ்க்கைப் பிரச்சினைகளும் அடியோடு நீங்கி தேவைக்கேற்ற/செலவுக்கேற்ற பணம் சம்பாதிப்பீர்கள்.

நீங்கள் எவ்வளவுதான் படித்தாலும் மாதம் சில ஆயிரம் ரூபாய்தான் சம்பாதிக்க முடியும். ஏனெனில் படித்து வேலை தேடியலைந்து சம்பாதித்து... இவையெல்லாம் மனிதன் உண்டாக்கிய நெகடிவ் தன்மைகளே. Nature hates our systems.†

'பாசிடிவ்' தன்மையாளர்கள் கடவுள் இட்ட வேலையை செய்கிறார் என சொன்னோம். மகாத்மா காந்தியின் 'அகிம்சை', தெரஸாவின் 'அனாதை குழந்தைகளுக்கு ஆதரவு' மற்றும் சகுந்தலா தேவியின் கணிதம் (mathematical calculations) இவற்றை அவர்கள் எந்த கல்லூரியிலும் சென்று படிக்கவில்லை.

உலகிலேயே நம்பர் ஒன் ஆங்கில அகராதி எது என்று கேட்டால் 'ஆக்ஸ்போர்டு' என எவரும் சொல்வர். நீதிமன்றங்களில் ஒரு வார்த்தைக்கு சரியான அர்த்தம் என்ன என்று குழப்பம் வந்தால் ஆக்ஸ்ஃபோர்டு டிக்ஷனரியைத் தான் 'அத்தாரிடி'யாக எடுத்துக்கொள்வர்.

ஆக்ஸ்போர்டு டிக்ஷனரி எழுதியவன் தனது பதினைந்தாவது வயதில் (ஒன்பதாவது வகுப்பில்) பள்ளிப்படிப்பை நிறுத்திவிட்டு டிக்ஷனரி எழுத ஆரம்பித்தான்.

மனிதனால் உண்டாக்கப்பட்ட கல்லூரியில், M.A., Ph.D. (ஆங்கில இலக்கியம்) படித்தவனால் ஏன் ஆக்ஸ்போர்டை விட நல்ல டிக்ஷனரி எழுத முடியவில்லை?

Nature hates our systems.† மனிதன் உண்டாக்கிய வழிமுறைகளை (systems, கல்லூரி, லைப்ரரி, ஆபீஸ், இன்சூரன்சு கம்பெனி, சீட்டு கம்பெனி) கடவுள் வெறுக்கிறார்.

†மாதச் சம்பளத்திற்கு வேலை அல்லது சொந்த தொழில் செய்து சில பல ஆயிரம் சம்பாதித்து வியாதி மற்றும் பணப்பற்றாக்குறை ஏதுமில்லாமல் எல்லா விதத்திலும் சந்தோஷமாக இருப்பவர்களுக்கு இந்நூலாசிரியரின் வணக்கங்கள் மற்றும் பாராட்டுக்கள். வாங்கும் சம்பளம் போதாமல் இருப்பவர்களுக்காக இந்த புத்தகம் எழுதப்படுகிறது.

உலகிலேயே நம்பர் ஒன் டிக்ஷனரி எழுத அவர் ஆக்ஸ்ஃபோர்டு என்பவனை அனுப்பி வைத்தார். ஆக்ஸ்ஃபோர்டு தலைமுறையினருக்கு (பேரன், கொள்ளு பேரன்களுக்கும்) இன்றளவும் மாதாமாதம் பல இலட்சக்கணக்கான ரூபாய் 'ராயல்டி'யாக வருகிறது.

கல்லூரி, C.A., NIIT என படிக்காமல் கடவுள் உனக்கிட்ட வேலையை நீ செய்தால் உனக்கும் கோடிக்கணக்கில் வருமானம் உண்டு. 'சரித்திரத்தைப் பார்த்தாவது நல்ல விஷயங்களை தெரிந்து கொள்ளுங்கடா' என்கின்றன மலர் மருந்துகள்.

கடவுளால் உங்களுக்கிடப்பட்ட வேலையை செய்து (அதாவது அவரால் கொடுக்கப்பட்ட unique in-built mechanism அல்லது i. c. (integrated circuit) unit -ஐ வேலை செய்ய விட்டு) வியாதிகள், பிரச்சினைகள் தொலைந்து எல்லா வசதிகளையும் பெற்று வாழ்வோமாக!

| 38 வித வேலையின் தன்மை | எதிர்மறை அல்லது 'நெகடிவ்' (Negative) | நேர்மறை அல்லது 'பாசிடிவ்' (Positive) | 'நெகடிவ்'தன்மையாளர் 'பாசிடிவ்' ஆக மாற சாப்பிடவேண்டிய மலர் மருந்தின் பெயர் |
|---|---|---|---|
| குரலை உயர்த்தி, உரக்க உபயோகித்தல் | வலியில் 'ஐயோ', 'அம்மா' என்று 'அழுதல்'. 'வீறிட்டலறுதல்', நீடித்த பிரசவ கால வலியில் மணிக்கணக்கில் 'ஐயையய்யோ... என வீறிடுதல்'. வியாதி, வாழ்க்கைப் பிரச்சினை, பணக்கஷ்டம் ஆகியவை "தாங்க முடியாமல்" போய் 'அழுதல்'. கோபம், 'கத்துதல்' அல்லது 'தற்கொலை செய்து கொள்வது'. 'தாங்க முடியாத' தாகம், கோபம், 'ஆத்திரத்தில்' பல்லை நற நறவென்று கடித்தல், குழந்தைகளை திட்டுவது, அடிப்பது, சாராயம் குடிப்பதை நிறுத்திவிட்டாலும், பாட்டிலை பார்த்தால் நாவை அடக்க முடியாமல் ஒரு தடவை குடித்து விடுதல், நாவை அடக்க முடியாமல் குழந்தைக்கு வைத்திருக்கும் சாக்லெட்டை தின்றுவிடும் பெரியவர்கள். பத்தியம், விரதம் இருக்க முடியாமை. | உச்சஸ்தாயில் உரக்க பாட்டு பாடுதல்: எம். எஸ். சுப்புலக்ஷ்மி, தென்னிந்தியாவில் (வடக்கே: லதா மங்கேஷ்கர்) (இவர்கள் கோபப்பட்டதே இல்லை; அழும்படியான வியாதி, பணக்கஷ்டம், பிரச்சினை வந்ததும் கிடையாது)<br>பகவான் நாம பஜனையில் ஜால்ரா போடுவது. | செர்ரி ப்ளம் |
| ஒரே செயலை தினம் தினம் மணிக் கணக்கில் செய்தல் | பீடி, சிகரெட், தினம் அடிக்கடி குடித்தல் - ஏழெட்டு கப் காபி, டீ சாப்பிடுதல் - கெட்ட சகவாசம், போதை மருந்து அடிமை, வெற்றிலை, புகையிலை தினம் அடிக்கடி போடுதல், இதனால் காசு செலவு, ஆரோக்கியம் இழத்தல், கொலை, கொள்ளை, கற்பழிப்பு பற்றி தினசரியில் தினம் காலையில் ஒரு மணி நேரம் பேப்பர் படித்தல். | வயலின், புல்லாங்குழல் தினம் தினம் மணிக்கணக்கில் பிராக்டீஸ் செய்து நல்ல வித்வானாகி தினம் தினம் தொடர்ந்து மணிக்கணக்கில் கச்சேரி செய்து, சில மணி கச்சேரிக்கு பல ஆயிரம் என சம்பாதித்தல் (மைசூர் சௌடையா, லால்குடி ஜெயராமன், வீணை காயத்ரி, மாண்டலின் சீனிவாசன், சித்தார் ரவி சங்கர் போன்றோர்) | வால்நட் |

| | | | |
|---|---|---|---|
| தப்பிக்கும் மனப்பான்மை | ப்ளஸ் டூ-வில் பெயிலான மாணவ, மாணவிகள் எங்காவது ஓடி விடுவது. திருடர்கள் "தப்பிக்க" பொய் சொல்லுதல் / பொய்க்கணக்கு எழுதி வருமான வரி ஏமாற்றுவோர்; தங்கள் திருமணத்திற்கு பெற்றோர்கள் சம்மதம் கொடுக்காததால் ஊரைவிட்டு ஓடிவிடும் காதல் ஜோடி; குடும்ப பிரச்சினை தாங்காமல் "எங்காவது ஓடிவிடலாம் போல் இருக்கிறது" என சொல்லும் குடும்ப தலைவர் | நல்ல குரு ஒருவரை தேடி ஓடி, அவரை கண்டுபிடித்து அவரது ஆசி, உபதேச மொழிகளைப் பின்பற்றி, சில கலைகளை கற்று இதனால் தேவைக்கு மேல் பல மடங்கு பணம் சம்பாதித்தல் | *செஸ்ட்நட்பட்* |
| கடுகு போன இடம் ஆராய்வார். பூசணிக்காய் போன இடம் தெரியாது | அசிங்கம், அருவருப்பு பற்றியே அதிகம் நினைத்தல், பேசுதல், கவலைப்படுதல், தனது ஒல்லியான அல்லது குண்டான உடல், தொந்தி போன்றவற்றால் மற்றவர்கள் தன்னை அசிங்கமாக நினைப்பதாக நினைந்து வருந்துதல், நரைமுடி, வழுக்கை, குள்ள உயரம் பற்றி கவலை. அடிக்கடி கை கழுவுதல், வீட்டு தரையை டெட்டால் போட்டு கழுவுதல். மற்றவர்களின் கர்சீப், துண்டு இவைகளை தொட பிடிக்காமை. | புதையல் கிடைப்பவர். அல்லது எவரும் கேலி செய்ய முடியாத, அதே சமயத்தில் எல்லோராலும் பாராட்டப்படக்கூடிய செயலை செய்தல்; இதனால் புதையல் போல் வருமானம் கிடைத்தல் (water diviner) கண்ணிவெடி அகற்றுவோர், இலவச வைத்தியம் செய்பவர், தண்ணீர் பந்தல், சத்திரம் அமைப்பவர் | *கிராப் ஆப்பிள்* |

(மீதி மருந்துகளைப் பற்றி அந்தந்த மருந்தின் கீழ் பார்க்கவும்)

குறிப்பு: எல்லோருமே பாடலாம். பகவான் படத்திற்கு முன்பு பக்தியுடன், ஆனால் சங்கீதத்தை தொழிலாக, வாழ்க்கையின் குறிக்கோளாக, நாம் செய்யும் வேலையாக செய்வது **செர்ரி ப்ளம்** டைப் நபருக்கு மட்டுமே உரித்தது.

ஆனால் கச்சேரி, தொலைக்காட்சியில் நிறைய நபர்கள் பாடுகிறார்கள். இவர்கள் எல்லோரும் ஏன் சுப்புலக்ஷ்மி, லதா மங்கேஷ்கர் போல் வாழ்க்கையில் உச்சாணிக்கிளைக்கு செல்லவில்லை எனில் இவர்கள் **செர்ரி ப்ளம்** டைப் நபர்கள் அல்ல. அதாவது கடவுள் இவர்களுக்கு இட்ட வேலை சங்கீதம் அல்ல. உலகில் பிரச்சினைகளுக்கு காரணம் ஒவ்வொருவரும், தனக்கு கடவுளால் இடப்பட்ட வேலையை செய்யாமல் அதற்கு சம்மந்தமில்லாத வேலையை செய்து கொண்டிருப்பதால்தான்.

**செர்ரி ப்ளம்** டைப் நபர் வங்கியில் ஆபீசராக இருக்கிறார். Interior decoration (அறை அலங்காரம்) தொழில் செய்யவேண்டியவர் போஸ்ட் ஆபீசில் குமாஸ்தாவாக இருக்கிறார்.

நடனம் ஆடவேண்டியவர் 'டிபார்ட்மெண்ட் ஸ்டோர்' நடத்திக் கொண்டிருக்கிறார்.

# **செர்ரி ப்ளம்** (Cherry Plum)

தமிழகத்தில் புகழ் பெற்ற பாடகர், பாடகி யார் எனில் எல்லோரும் எம்.எஸ். சுப்புலக்ஷ்மி அல்லது பாலமுரளி கிருஷ்ணு என்று சொல்வார்கள். இவர்கள் பாசிடிவ் **செர்ரி ப்ளம்** டைப் நபர்கள். எம்.எஸ்.க்கு ஈடாக யாரும் இல்லையா?

மனிதர்களை 38 விதமாக கடவுள் படைத்துள்ளார் எனில் சுமார் 3 சத விகித நபர்கள் **செர்ரி** ப்ளம் டைப் ஆக இருக்க வேண்டும் எனலாம். அதாவது தெருவுக்கு மூன்று எம்.எஸ். சுப்புலக்ஷ்மிகள் இருக்க வேண்டும்.

பாட்டு பாடி கோடீஸ்வரி ஆக தகுதியானவர் ஒரே ஒரு•சுப்புலக்ஷ்மி மட்டும்தானு?

இல்லை, இல்லவே இல்லை. எம்.எஸ். சுப்புலக்ஷ்மிகள் ஊருக்கு ஊர் இருக்கின்றனர். ஆனுல்...

நெகடிவ் தன்மையாளர்களாக.

எம்.எஸ். சுப்புலட்சுமியாக (கோடிக்கு சொந்தமானவர்களாக) இருக்க வேண்டியவர்களை இனம் காண புறப்படுவோமே.

பிரசவ ஆசுபத்திரியில் வார்டுக்கு வெளியே அர்த்த இராத்திரியில் சென்று சற்று காது கொடுத்து கேளுங்கள்.

"ஆ.....ஆ....." "ஐயோ" "ஐயய்யோ......"

கழுத்தை நெறித்து கொலை செய்யப்படும் நபர் எவரோதான் அவ்வாறு அலறுகிருரோ என்று எண்ணத் தோன்றும்.

(சுமார் மூன்று சதவிகித பிரசவ கேசுகளில்) பிரசவ நேரம் நெருங்கியதும் குழந்தை வெளியே வர முயற்சி செய்து அதே நேரத்தில் கர்ப்பப்பை வாய் திறக்காமலும் (undilated *os*) இருக்கும் நிலையில் தாங்க முடியாத வலியால் வீறிட்டலறும் சத்தம்தான் அது. இது பல மணிநேரம் கூட நீடிக்கும்.

இவர்களுக்கு **செர்ரி ப்ளம்** என்ற பாட்ச் மலர் மருந்து சில டோஸ்கள் கொடுக்க கர்ப்பப்பை வாய் விரிந்து சுகப் பிரசவம் ஆகிவிடும். இதே மருந்தை இவர்கள் வாரம் 2-3 தடவை சாப்பிட்டுவர விரைவில் சங்கீதத்தில் ஆர்வம் ஏற்பட்டு அதைக் கற்க ஆரம்பித்து ஒரு எம்.எஸ். சுப்புலக்ஷ்மியாக ஆகி விடுவர்.

குறிப்பு: **செர்ரி ப்ளம்** 'சுகப்பிரசவ'த்திற்கு ஏற்ற மருந்து அல்ல. பிரசவ நேரத்தில் மட்டும் என்றில்லாது வேறு எந்த வியாதியிலும் நோயாளி மணிக்கணக்கில் வலி தாங்காமல் அழுதாலோ அல்லது வீரிட்டலறிஞலோ **செர்ரி ப்ளம்** அவரது நோயை குணமாக்கும். இதே மருந்து தொடர்ந்து வாரம் 2-3 முறை சாப்பிட விரைவில் நம்பர் ஒன் பாடகர் ஆகி விடுவார்.

தெருவுக்குத் தெரு (கோடிஸ்வரி ஆக வேண்டிய) சுப்புலக்ஷ்மிகள் இருக்கத்தான் செய்கின்றனர். ஆனால் ஏதோ வியாதி (அல்லது பிரசவ நேரத்தில்) மணிக்கணக்கில் வலி தாங்காமல் அல்லது ஏதோ வாழ்க்கைப் பிரச்சினை ஏற்பட்டு அழுது அல்லது வீறிட்டலறிக் கொண்டு 'நெகடிவ்' ஆக உள்ளனர்.

**செர்ரி ப்ளம்** என்ற இங்கிலாந்தில் மட்டுமே விளைகின்ற மலர் மூலமாக இவர்களைப் பார்த்து இயற்கை கூறுகிறது:

"நல்ல சங்கீதம் கற்று நம்பர் ஒன் பாடகி ஆகி இலட்சக்கணக்கில் சம்பாதித்து இன்பமாக வாழ உன்னை உலகில் அனுப்பி வைத்தேன். நீ அது தெரியாமல் வேறு வேலை செய்கிறாய். நீ செய்ய வேண்டிய வேலையை உனக்கு ஞாபகப்படுத்தவே நீ அழும்படியான வலி உள்ள நோயை கொடுத்தேன். ஆகையால், இனியாவது **செர்ரி ப்ளம்** சாப்பிட்டு உன் வலியை போக்கி, சங்கீதம் கற்று (பகவான் மீது) பக்தி பூர்வமாக பாடல்கள் பாடு."

இயற்கை அல்லது கடவுளால், பூமியில் வாய்ப்பாட்டு பாடுவதற்காக அனுப்பப்பட்டவர்கள் தான் **செர்ரி ப்ளம்** டைப் நபர்கள். இவர்கள் பாடாமல் மற்றவர்கள் (non-Cherry Plum type) தான் இன்று அதிக எண்ணிக்கையில் பாடிக் கொண்டிருக்கின்றனர். (வாத்தியங்கள் இசைத்து கோடிக் கணக்கில் சம்பாதிக்க வேண்டிய நபர்கள் பற்றி **வால்நட்** என்ற மலர் மருந்தின் கீழ் பார்க்கவும்.)

புரந்தரதாஸர், ஸத்குரு ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள், முத்துசாமி தீட்சிதர், சுவாதித் திருநாள் ஆகியோர் பாசிடிவ் **செர்ரி ப்ளம்** டைப் நபர்கள்.

நூறு சதவிகித பாசிடிவ் நபர்களுக்குத்தான் கோவில், ஆராதனை எல்லாம் காலம் காலமாக நடைபெறும் (தியாகராஜ சுவாமிகள் நூறு சதவிகித **செர்ரி ப்ளம்** டைப், மந்திராலய மகான் ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகள் நூறு சதவிகித **ஸ்வீட் செஸ்ட்நட்** என்ற மலர் மருந்தின் டைப். நூறு சதவிகித **வைல்டு ரோஸ் டைப்** எனில் (பகவான் மேல் பாட்டு/ தோத்திரம் இயற்றிய) ஆதி சங்கரர், இராமலிங்க அடிகள், மாணிக்கவாசக ஸ்வாமிகள் ஆகியவர்களை சொல்லலாம்.

ஆன்மீகத்தில் முன்னேற தியானம், யோகம் என தலைவலியை வரவழைத்துக் கொள்ள வேண்டாமே!

**த்யானவு க்ருத யுக தல்லி**
**யக்ஞ, யாகவு த்ரேதா யுக தல்லி**
**தேவதார்ச்சனெயு த்வாபர யுக தல்லி**
**கீர்த்தன மாத்ரதி கலி யுக தல்லி**

என்ற கன்னட பாட்டின் பொருள்: க்ருத யுகத்தில் த்யானத்தினாலும், த்ரேதாயுகத்தில் யக்ஞ, யாகங்களினாலும், த்வாபர யுகத்தில் தேவதை அர்ச்சனையினாலும், **கலியுகத்தில் கீர்த்தனையினால் மட்டுமே பகவான் சந்தோஷிப்பதாக** ஸ்ரீ புரந்தரதாசர் தமது பதத்தில் கூறியுள்ளார்.

இதையேதான் சமீபகாலத்து நூறு சதவிகித பாசிடிவ் ஸ்வீட் செஸ்ட்நட் டைப் நபராக வாழ்ந்த பகவான் ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்சரும் சொல்கிறார்: "மந்திரங்கள் எச்சில் பட்டு போய்விட்டன . . . யோக மார்க்கத்தில் அபாயங்கள் நிறைய உண்டு . . . கை கொட்டி இறைவனுடைய திருநாமத்தை உரக்கச் சொல்லும்போது பாபம் என்னும் பறவை பறந்தோடிப் போகிறது. இக்கலி யுகத்தில் நாம ஜபத்துக்கு நிகரான சாதனம் இல்லை. யோகம் முதலியன பயிலுவதற்கு அனைத்தையும் சார்ந்திருக்கும் உடல் தகுதியற்றது. (ஸ்ரீ ராமகிருஷ்ண உபதேச மஞ்சரி: உபதேசம் 682, மயிலாப்பூர் இராமகிருஷ்ண மடம் வெளியீடு).

<u>ஓர் முக்கிய குறிப்பு</u> : **செர்ரி ப்ளம்** டைப் நபர்கள் பாடுவதை தொழிலாக கொண்டு நிறைய சம்பாதிக்கலாம். ஏனையோர் (**செர்ரி ப்ளம்** டைப் அல்லாத நபர்) பாடுவதை தொழிலாக கொள்ள முடியாது. ஆனாலும் பாட வேண்டும். (பாடத் தெரியாதவர்கள் குறைந்த பட்சம் கடவுள் மீது தோத்திரங்களை தினம் சிறிதளவாவது உரக்க சொல்லி பாராயணம் செய்ய வேண்டும்). கடவுள் மீது இல்லாதது சங்கீதமே அல்ல. இராகம் ஏதுமில்லாமல் கன்னா பின்னா வென்று கடவுள் புகழ் பாடி கத்தினாலும் அது சங்கீதமே—தியாகராஜ சுவாமிகள்.)

ஏனெனில் நாம் எல்லோரும் ஏதோ ஒரு சமயத்தில் கோபப்படுகிறோம் அல்லது பணம்/வியாதி தொல்லையில் கத்துகிறோம். இதுபோல் அழுது அல்லது கத்தும்படியான பணப்பிரச்சினை/வியாதி நம் வாழ்க்கையில் வராமலிருக்க தினம் சில நிமிடங்களாவது கடவுள் மீது பக்திப் பாடல் தெரிந்தவரை உரக்க பாடுவது மிக மிக அவசியம்.

தற்காலத்தில் தமிழ்நாட்டில் சங்கீதம் இல்லை. அகம்பாவம், ஆத்திரம், கோபம் ஆகியவைகள்தான் உள்ளன. மந்திரி முன்னிலையில் மதுராந்தகம் ஏரியில் நின்று வயலினில் அமிர்தவர்ஷணி இராகம் பாடி மழை வரவழைக்கிறேன் என்று ஏமாற்றினான் குன்னக்குடி பிராமணன்.

(தனக்கு நல்ல சாரீரத்தை பகவான் கொடுத்தானே என்று அவனுக்கு தலைவணங்காமல்) கேரளாவில் உள்ள இந்து கோயிலில் உள்ளே நுழைய அனுமதி மறுக்கப்பட்டு, 'நான் பாட்டு பாடியே கோயில் கதவை எனக்காக திறக்க வைக்கிறேன் பார்' என உளறுகிறான் ஜேஸுதாஸ். இவன் சங்கீதத்தை அல்லது கடவுளை இழிவுபடுத்துகிறானா அல்லது தன்னையே இழிவு படுத்திக் கொள்கிறானா?

சங்கீதம் மன அமைதிக்காக. விமர்சனம் என்பது வாக்குவாதத்தை தோற்றுவித்து மன அமைதியை கெடுக்கும் என்பதால் சங்கீத விமர்சனம்/ சர்ச்சை என்ற ஒன்று வேண்டாம் என்று தியாகராஜ சுவாமிகள் சொல்லியதற்கு நேர்மாறாக சங்கீத விமர்சனம் (music critic) செய்யும் சுப்புடு கிழவர் மற்றும் பரம்பரையாக தியாகராஜ சுவாமிகள் பூஜித்து வந்து தற்போது தஞ்சாவூரில் அந்த பரம்பரையில் வந்த ஒருவர் பூஜித்துவரும் இராமர் விக்கிரகத்தை தனக்கு ஒரு இலட்சம் ரூபாய்க்கு விற்று விடுமாறு கேட்கும் பாலமுரளி கிருஷ்ணாக்கள் இருக்கும்வரை தமிழ்நாடு முன்னேற முடியாது. 'நிதிசால சுகமா' என்ற பாட்டை மேடையில் பாடுவதற்கு பத்தாயிரம், ஐம்பதாயிரம் கொடு என கேட்பவர்கள் தன்னையும்

சங்கீதத்தையும் இழிவு படுத்துகிறார்கள். சங்கீதம் என்பது பக்தி செய்வதற்காக ஏற்பட்டது என இவரது குருமார்கள் இவர்களுக்கு சொல்லித் தரவில்லையே. பாவம் தமிழ்நாடு!

இந்த பிரபலங்கள் வாரம் ஒரு தடவையாவது தன் வீட்டில் கடவுள் படத்தின் முன்பு பய பக்தியுடன் உட்கார்ந்து ஓரிரு தியாகராஜ கீர்த்தனைகளாவது பாடுகிறார்களா என்பது சந்தேகமே. நாம் பாடுவதை கேட்டு கடவுள் நம்மை பாராட்டினால் இராஜ போக வாழ்வு நமக்கு நிச்சயம்.

மேடையில் பாடி எல்லோரிடமும் கை தட்டுதல், பத்திரிகைகளில் பாராட்டு என மனிதர்களிடம் நாம் பாராட்டு பெற்றால் வாழ்க்கையில் ஆபத்து, வியாதி, தரித்திரம் தான் கிடைக்கும். இவ்வாறு வாழ்க்கையில் வழி தவறிப் போன பிரபலங்கள் ஏராளம்.

*'சிந்து பைரவி' என்ற தமிழ் சினிமாவில் சங்கீத வித்வானாக இருந்த கதாநாயகன் வயலின் போன்ற பல இசைக் கருவிகளை உடைக்கிறான். இது சங்கீத வித்வான்களின் மனம் புண்படச் செய்யும் செயலாகும். நமது சங்கீத கலாநிதிகள் அல்லது மியூசிக் அகடமியினர் மேற்படி சினிமாவில் இக்காட்சியை நீக்க நீதிமன்றத்தை அணுகாமல் என்ன செய்து கொண்டிருந்தனர்?*

(கோபத்தில் அல்லது ஆத்திரத்தில் மற்றவர்களை அடிப்பவர், பல்லை 'நற நற' என்று கடிப்பவர்கள், பொருட்களை கோபத்தில் விட்டெறிபவர்கள் மற்றும் வெறியில் மற்றவர்களை கொலை செய்பவர்கள், பகவான் நாம பஜனை செய்யுமிடங்களில் ஜால்ரா போடும் வேலையை செய்ய வேண்டும்.)

வலிப்பு நோய் உள்ளவர்கள் பகவான் நாம பஜனையில் ஜால்ரா போட்டு வர வலிப்பு நோய் அறவே குணமாகி விடும். இதுதான் உண்மையான, சரியான இயற்கை வைத்தியம்!

கோபத்தில் குதித்தல் அல்லது சுவரில் தலையை முட்டிக் கொள்ளும் நபர்கள் பகவான் நாம பஜனை செய்யுமிடத்தில் ஜால்ரா போட்டுவர விரைவில் கடவுள் தரிசனம் கிடைத்து வாழ்க்கையில் நல்ல நிலையை அடைந்து விடுவர்.

வியாதியுற்ற மனிதர்கள் பேசும் விதம், செயல், எண்ணங்கள் ஆகியவற்றின் பேரிலேயே மருந்து தேர்ந்தெடுக்கப்படுகிறது. நோய்களின் பேரில் அல்ல.

நோயுற்ற மனிதர்கள் பேசும் விதம், அவரது மனப்பான்மை, செய்கை ஆகியவற்றை இயற்கை முப்பத்தெட்டு விதமாக பிரித்துள்ளது. இவ்வகையில் சேராத மனிதர்களே இல்லை. இவர்கள் ஒவ்வொன்றுக்கும் ஒரு மலர் என முப்பத்தெட்டு மலர்களை எட்வர்டு பாட்ச் கண்டு பிடித்துள்ளார். (இவற்றை நாம் மாத்திரை ரூபத்தில் விற்பனை செய்கிறோம்.)

'மனநிலை' மீது பாட்ச் மருந்துகள் தேர்ந்தெடுத்து கொடுக்கப்படுகிறது என்று படித்தவுடன் பல வாசகர்கள் இது ஏதோ 'சைக்கோ தெரபி'

(psychiatric treatment) என நினைத்து நோயாளியின் உள் மனதை ஆராய முற்பட்டு அவருக்கு ஏதாவது கவலை, திகில், வருத்தம் உள்ளதா என கேள்விகள் கேட்க ஆரம்பித்து விடுகின்றனர். இது மிக தவறு.

திரும்பத் திரும்ப ஒரு விஷயத்தைக் குறிப்பிட்டு நாம் சொல்வது இதுதான். "நீ கேள்வி கேட்க ஆரம்பித்து விட்டால் அந்த கேசில் உன்னால் மருந்து தேர்ந்தெடுக்க முடியாது." நோயாளி சொல்வதை நாம் பொறுமையாக, கவனமாக, உன்னிப்பாக, (அவர் பேசும்போது இடை மறிக்காமல்) நம் காதுகளால் கேட்டாலே போதுமானது.

ஒரு பெண்மணிக்கு வயிற்றில் ஆபரேஷன் நடந்து சில மணி நேரங்களில், "தாங்க முடியாத" தாகம் ஏற்பட்டது. அவளுக்கு தண்ணீர் கொடுத்தால், வாந்தி ஏற்பட்டு வயிற்றில் போடப்பட்டிருக்கும் தையல் விட்டு விடும் என்பதால், தண்ணீர் கொடுக்கக் கூடாது என டாக்டர்கள் கூறியிருந்தனர். அவளோ தாகத்தினாலும், நாவறட்சியினாலும் பக்கத்தில் உள்ளவர்களிடம் தண்ணீர் கொடுக்கும்படி கெஞ்சிக் கொண்டிருந்தது, பார்க்கப் பரிதாபமாக இருந்தது. "தாங்க முடியாத" தாகத்தினால் துடித்த அவளுக்கு **செர்ரி ப்ளம்** இரண்டு மாத்திரை வாயில் போட, உடனடியாக அவளது தாகம் தணிந்தது. மருந்து கொடுத்த என்னை மனதாரப் பாராட்டினாள்.

ஏனெனில் "தாங்க முடியாத" எல்லா நிலைகளுக்கும் ஏற்ற மருந்து **செர்ரி ப்ளம்.** "தாங்க முடியாத" கோபம், வலி ஆகிய **(தாங்கமுடியாத)** எல்லா நிலைமைகளிலும் அது என்ன வியாதியாயிருந்தாலும், **செர்ரி ப்ளம்** குணமாக்கி விடும்.

26-ம் பக்கத்தில், மூல நோயால் அவதிப்பட்டுக் கொண்டிருந்த ஒரு சப்-இன்ஸ்பெக்டர், பலவித வைத்தியம் செய்தும் குணமாகாமல் ஆசன வாயில் எரிச்சல் அதிகமாகி, இடுப்பிற்கு கீழே உடை ஏதுமில்லாமல் கால் இரண்டையும் அகல வைத்துக்கொண்டு எரிச்சல் குறைய எதிரில் மின் விசிறி வைத்து படுத்திருந்தார். நான் சென்று விசாரித்த போது, "எரிச்சல் தாங்க முடியவில்லையே ஐயா" என்று பல்லை நறநறவென கடித்து ஆத்திரத்துடன் கூறியவருக்கு **செர்ரி ப்ளம்** கொடுத்து குணப்படுத்தியதைப் பார்த்தோம்.

(இது போல் இவ்வளவு துரிதமாகவும் அதே சமயம் முதல் டோஸிலேயே பூரணமாகவும் வேறு எந்த முறையிலும் குணம்

இல்லாததால் நோயாளி இந்த மருந்துகளின் மீது நம்பிக்கை வைக்காமல் மலர் மருந்து கொடுத்த நம் கைராசியைத்தான் பாராட்டுவார்கள்).

மேற்படி சப்-இன்ஸ்பெக்டருக்கு ஒரு பாட்டில் **செர்ரி ப்ளம்** கொடுத்து (நோய் திரும்பி வராமல் பூரண குணமாக) தினம் இரு வேளை, ஒரு மாதம் சாப்பிடும்படி கூறி கொடுக்கப்பட்டது.

**செர்ரி ப்ளம்** சாப்பிட்டு வந்த இவர் பாட்டு கற்று பாட ஆரம்பித்தால் லைட் மியூசிக் ட்ரூப்பில் சேர்ந்து மாதம் பதினைந்தாயிரத்திற்கு மேல் சம்பாதிக்கத் தொடங்கி விடுவார்.

வெயில் காலத்தில் உச்சி வேளையில் வெளியில் செல்லும் போதெல்லாம் ஒரு நபர் வழியில் தாகம் "தாங்க முடியாமல்", இரண்டு மூன்று தடவை குளிர்பானம் சாப்பிடுவார். இதற்கே தினம் இருபது ரூபாய் வரை செலவழிந்து விடும்.

இவ்வாறு கோடை வெயிலில் செல்லும்போது தாகம் தாங்க முடியாமல் இருந்தால் **செர்ரி ப்ளம்** சாப்பிடும்படி கொடுத்தனுப்பினேன். இதை சாப்பிட தாகம் குறைந்து இதனால் அவர் மாதம் முன்னூறுரூபாய் வரை சேமிக்க முடிந்தது.

வியாதி அல்லது உபாதை எதுவாயினும் நோய் என்ன என்பதை நாம் மறந்துவிட்டு, நோயாளி சொல்லும் வார்த்தைகளை உன்னிப்பாக காதால் கேட்டு அதற்கேற்ப மருந்து கொடுக்க வியாதி உடனடியாக, பரிபூரணமாக மற்றும் நிரந்தரமாக குணமாகி விடும். (எவ்வளவு தண்ணீர் சாப்பிட்டாலும் தாகம் அடங்கவேயில்லை எனில் **ஸ்க்ளெரான்த்தஸ்** என்ற பாட்ச் மருந்து தேவை).

கை, கால்களில் கொதிக்கும் திரவம் கொட்டி விடுகிறது எனில், "தாங்க முடியாத" எரிச்சல் உண்டாகிறதல்லவா? **செர்ரி ப்ளம்** ஒரு டோஸ் சாப்பிட எரிச்சல் உடனடியாக நிற்பதுடன், மறுநாள் நெருப்புப் புண்பட்ட சுவடே தெரியாது! (அல்லோ பதியில் நெருப்புக் காயத்தை உடனடியாக முழுவதும் குணப்படுத்தும் மருந்து இல்லை.

"காயம் ஆறினாலும் வடு ஆறாது" என்பார்கள். ஆனால், வடு இல்லாமலேயே காயம் பூராவும் ஆறி விடுவது, இந்த மருந்துகளின் தனிச்சிறப்பு.

அல்லோபதி, ஆயுர்வேதம், சித்தா போன்ற மற்ற முறைகளில் "வியாதிக்கு" மருந்து கொடுக்கப்படுகிறது. இதனால் நோய் உள்ளுக்குள் அமுக்கப்பட்டு சில நாட்கள் கழித்து, வேறு பெரிய நோய்கள் உண்டாகும். உதாரணமாக தலைவலிக்கு "ஆஸ்பிரின்" மாத்திரை சாப்பிட, ஒரு சிலருக்கு வலி குறைந்தாலும் மறுபடியும் திரும்பி வருவது உறுதி. சிலருக்கோ, அம்மருந்தின் பின் விளைவுகளான வயிற்றுப்புண், வாந்தி வரும். வேறு சிலருக்கோ, தலைவலி குறைவதற்குப்பதில் அதிகமாகி விடும். இவற்றிற்கெல்லாம் காரணம், 'நோய்க்கு' மருந்து கொடுப்பதால்தான்.

ஆனால், இந்த பாட்ச் மருத்துவ முறையில் 'நோயாளிக்கு' மருந்து கொடுக்கப்படுவதால், அவனுக்கு வியாதி எதுவாயினும் பரிபூரணமாகவும், நிரந்தரமாகவும் குணமாகிவிடும். ஒரு குறிப்பிட்ட நோயாளிக்கு சரியான பொருத்தமானதொரு மருந்து கொடுக்க, அவனது வாயிலிருந்து வரும் வார்த்தைகளை நாம் காதால் கேட்டாலே போதுமானது.

இனி **செர்ரி ப்ளம்** தேவைப்படும் வேறு சில மன நிலைகளைப் பார்ப்போம்:

அடிக்கடி எரிச்சலடையும் நபர்கள், "எனக்கு எரிச்சலாக வருகிறது" "பத்திண்டு வரது" என்று சொல்பவர்கள் தனக்கு **செர்ரி ப்ளம்** கொடுக்கப்பபட வேண்டும் என்பதை நமக்கு உணர்த்துகிறார்கள்.

தன் மனதை கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமை, இதனால் உணர்ச்சி வசப்பட்டு ஆத்திரம், கோபப்படுதல், 'இனி என்னால் பொறுக்க முடியாது' என சொல்வது, வலி **பொறுக்க முடியாமல்** 'தற்கொலை' செய்து கொள்ள நினைப்பவர்களுக்கு **செர்ரி ப்ளம்** கொடுக்கப்பட வேண்டும்.

"வயிற்று வலியில் பல வருடமாக அவஸ்தைப்பட்டு பல டாக்டர்களிடம் வைத்தியம் செய்தும் குணமாகாமல் வலி **'பொறுக்க மாட்டாமல்'** கடைசியில் தற்கொலை செய்து கொண்ட" நபர்களைப்பற்றி தினசரிகளில் அடிக்கடி படிக்கிறோம் அல்லவா? இவர்களுக்கு **செர்ரி ப்ளம்** கொடுத்து வர தற்கொலை மனப்பான்மை நீங்குவதுடன், வயிற்று வலியும் பூரணமாக குணமாகி விடும்.

திரு இராமசாமி (B/20, Milind Apts, Sane guruji Nayar, Mulund East, Mumbai) சுவர்க் கடிகாரத்திற்கு சாவி கொடுத்துக்கொண்டிருக்கும் போது அளவுக் கதிகமாக கொடுத்துவிட, மெயின் ஸ்பிரிங் அறுந்து அவர் பிடித்திருந்த நீண்ட சாவி அதிவேகமாக பின்னோக்கி சுழன்று, சாவியின் கைப்பிடியின் இரண்டு கூரான முனைகளும் சாவியைப் பிடித்துக் கொண்டிருந்த அவரது வலது கையின் மூன்று விரல்களையும் ஆழமாக கிழித்து இரத்தம் கொட்டியது. "ஐயையோ, வலி தாங்க முடியவில்லையே" என கத்தினார். உடனடியாக, தனது மேஜையின் மீது வைத்திருந்த **செர்ரி ப்ளம்** பாட்டிலிலிருந்து இரு மாத்திரைகள் எடுத்து சாப்பிட்டார். முப்பது வினாடிகளில் வலி பாதிக்குமேல் குறைந்து, கட்டு ஏதும் போடாமல் இரத்தம் கொட்டுவது முழுவதும் நின்றது. அன்று மாலையும், இரவும் அதே மருந்து ஒரு டோஸ் சாப்பிட மறுநாள் கையில் காயம் பட்ட சுவடே இல்லை. (இதற்கெல்லாம் அல்லோபதி டாக்டரிடம் சென்றால் கையில் கட்டு போட்டு, தண்ணீர் படாமல் வைத்திருந்து வலியுடன் அவஸ்தை பட வேண்டும்).

கோபம், ஆத்திரம் தாங்க முடியாமல் குழந்தை, மனைவியை அடிப்பவர்கள், வீட்டில் உள்ள பொருட்களை ஆத்திரத்தில் தூக்கி எறிந்து உடைக்கும் நபர்களுக்கு **செர்ரி ப்ளம்** கொடுத்து வர சாந்தமாகி விடுவர்.

இம்மருந்து தொடர்ந்து சாப்பிட்டு பகவான் நாம சங்கீர்த்தனம் (பஜனை) செய்ய, விரைவில் நிறைய பணம் கொட்டும்.

அலுவலகத்தில் தனக்கு வரும் ஆத்திரத்தில், தனது மேலதிகாரிகள் என்பதையும் மறந்து அவர்களை திட்டி விடுவது. ('ஆத்திரக்காரனுக்கு புத்தி மட்டு'). ஆத்திரத்தில் தன் தலையில் அடித்துக் கொள்வது, சுவரில் முட்டிக்கொள்வது, கண்டபடி திட்டுதல், குழந்தைகளை அடித்தல் ஆகிய நபர்களுக்கு **செர்ரி ப்ளம்** கொடுத்து வர ஆத்திர குணம் நீங்கி சாந்தமாக பேசுவார். இவருக்கு உடல் வியாதி ஏதாவது இருந்தால் அதுவும் குணமாகி விடும்.

''எனக்கு பைத்தியமே பிடித்து விடும் போல் இருக்கிறது'' என்று சொன்னால் **செர்ரி ப்ளம்** தேவை.

டயபிடீஸ் (சர்க்கரை) நோய் உள்ள ஒருவருக்கு இனிப்பு சாப்பிடக் கூடாது என்ற கட்டுப்பாடு. அவருக்கு இரத்த அழுத்தம், கிட்னி பாதிப்பு வேறு. இதனால் சாப்பாட்டில் உப்பு சேர்க்கக்கூடாது என டாக்டர்கள் கூறியிருந்தனர்.

காபியில் சர்க்கரை இல்லை. சாப்பாட்டில் உப்பு இல்லை, நாக்கு செத்து விட்ட நிலையில் அவர் கோபத்தில் கத்துவார்: ''என்னால் இதையெல்லாம் (பத்தியத்துடன்) சாப்பிட முடியாது, நான் செத்துப் போனாலும் பரவாயில்லை; எனக்கு சாப்பாட்டில் உப்பு, காபியில் சர்க்கரை போட்டுக் கொடுங்கள்'' என எரிந்து விழ ஆரம்பித்தார்.

உப்பு சேர்த்தால் அவரது இரத்த அழுத்தம் அதிகமாகும். சேர்க்காவிட்டாலோ அவர் கோபத்தில் கத்தி இதனால், இரத்த அழுத்தம் இதை ஜாஸ்தியாகி விடும். அந்த வீட்டில் உள்ளவர்கள் சமாளிக்க முடியாமல் அன்றாடம் திணறும் பரிதாப நிலையைப் பார்த்த நான், இது போன்ற நிலைமைக்கு மருந்து இருக்கிறது என அவர்களிடம் கூறி **செர்ரி ப்ளம்** ஒரு பாட்டில் கொடுத்து வேளைக்கு இரண்டு மாத்திரை, தினம் மூன்று வேளை கொடுக்கச் சொன்னேன். ஒரு வாரம் கழித்து பார்த்தபோது உப்பு போடாத சாப்பாட்டை அவர் மறுக்காமலும், கத்தாமலும் சாப்பிட்டு வந்தார் எனவும், அவரது வியாதியில் அல்லோபதி மருந்துகளைவிட நல்ல குணம் தெரிந்ததாக கூறினார்கள்.

இவ்வாறு உப்பில்லாமல் பத்தியமாக இருக்க வேண்டிய சமயங்களில் ''நாவை அடக்க முடியாத''வர்களுக்கு **செர்ரி ப்ளம்** உதவும். மற்றும், என்ன வியாதிக்காக அவர் உப்பில்லா பத்தியம் இருந்தாரோ அந்த வியாதியையும் **செர்ரி ப்ளம்** குணமாக்கி விடும்.

(சில நபர்கள் குழந்தையை ஆத்திரத்தில் அடித்துவிட்டு. பிறகு, 'குழந்தையை அடித்து விட்டோமே' என **வருந்துவர்**. இப்படிப்பட்ட நபர்களுக்கு **செர்ரி ப்ளம் உதவாது.** ஏனெனில் ''தான் செய்த தவறுக்கு பின்னால் வருந்துபவர்களுக்கு (regretting)'' ஏற்ற மலர் மருந்து **ஹனிஸக்கிள்** ஆகும்.)

இந்த மருந்துகளை படித்து உபயோகிக்க விரும்புபவர்கள் ஒவ்வொரு மருந்துக்கும் அதற்கு ஒப்புமை போல் உள்ள மருந்துகளையும் ஒப்பீடு செய்து

(comparison) புரிந்து கொள்வது அவசியம். (உதாரணமாக 'பயம்', 'திருடர் பயம்', 'இருட்டு பயம்', என்றால் **மிமுலஸ்** என்ற மருந்து கொடுக்கப்பட வேண்டும். ஆனால் ஒரு நபர், தான் வீட்டில் இரவில் "தனியாக இருந்தால் மட்டுமே பயம் இருப்பதாகவும், யாராவது துணையிருந்தால் பயம் கிடையாது" எனில் இவருக்கு **மிமுலஸ்** மருந்து பலன் கொடுக்காது. 'துணை' அல்லது 'மற்றவர் உதவி' நாடுபவர்களுக்கு **'சிக்கரி'** என்ற மருந்து கொடுக்க, அவர் பயமில்லாமல் தனியாக பேய் பங்களாவில் கூட இரவில் தூங்க முடியும்.

இதைப் படித்தவுடன் ஒரு சில வாசகர்கள் 'இது என்னடா, எல்லாம் புதிதாக படித்து புரிந்து கொள்வது சிரமம்' என நினைத்தால் அவர்கள் கவலைப்பட வேண்டாம். 'புதிய' விஷயங்களை சுலபமாகவும், சீக்கிரமாகவும் கற்க தேவையான **வால்நட்** என்ற மலர் மருந்தை தினம் இரண்டு சாப்பிட்டு வர இம்முறையை சுலபமாக கற்க முடியும்.)

**செர்ரி ப்ளம்** என்ற மருந்து பற்றி மேற்கொண்டு பார்ப்போம். "உப்பில்லாத பத்தியக்காரன் ஊறுகாயை பார்த்தாலும்" என்பர். ஆனால் **செர்ரி ப்ளம்** சாப்பிட்டு வர உப்பில்லாமல் சாப்பிடும் நபர் ஊறுகாயைப் பார்த்தாலும் நாக்கில் ஜலம் ஊறாமல், தன் மனதை கட்டுப்படுத்திக் கொள்ள முடியும். ஏகாதசி விரதம் இருக்க பழகிக் கொள்ள **செர்ரி ப்ளம்** என்ற மருந்தை ஏகாதசி தினத்தன்று இரு வேளை சாப்பிட்டு வரலாம்.

அனாவசியமாக அடிக்கடி முன் கோபத்தில் கத்துபவர்களுக்கு **செர்ரி ப்ளம்.**

இம்மருந்து தேவைப்படும் நபர் கூறும் வார்த்தைகளை கேளுங்கள்:

"எனக்கு வருகிற கோபத்திற்கு அவனை வெட்டிப் போட்டு விடலாம் போலிருக்கிறது" "எனக்கு கோபம் வந்து விட்டால் நான் என்ன செய்வேன் என்று எனக்கே தெரியாது" "அவனை ஒரு கிழி கிழிக்கிறேன் பார்", "எனக்கு கோபம் தாங்க முடியவில்லை, கொட்டித் தீர்த்து விட்டேன்."

"காபி சாப்பிட வேண்டாமென்றுதான் 'பார்க்கிறேன். ஆனால் முடிய வில்லையே" என்றால் **செர்ரி ப்ளம்.**

கடும் கோடை வெய்யிலில் வெளியில் செல்லும் முன்பு, ஒரு டோஸ் **செர்ரி ப்ளம்** சாப்பிட, வெய்யிலின் கொடுமையை தாங்க முடிவதுடன் தாகமும் ஏற்படாது.

"வறுமையில் ஒரு குடும்பமே தற்கொலை செய்து கொண்டது" என தினசரிகளில் அடிக்கடி படிக்கிறோமல்லவா? முன்பு அக்குடும்பத்தினர் எல்லோருக்கும் **செர்ரி ப்ளம்** கொடுக்க, தனது ஏழ்மையை நினைத்து மனம் பேதலித்து நிற்பதிலிருந்து மீண்டு, வறுமை நீங்க ஏதோ ஒரு வழி கண்டுபிடித்து அதில் வெற்றியும் அடைந்து விடுவர்.

உலகம் முழுவதிலும் தற்கொலை செய்துகொள்வோர் எண்ணிக்கையில் பத்தில் ஒரு பங்கை வகிக்கிறது இந்தியா. மக்கள் தொகை எண்ணிக்கை ஒரு மடங்கு அதிகரித்தால் தற்கொலை செய்துகொள்பவர்களின்

எண்ணிக்கை மூன்று மடங்கு அதிகரிப்பதாக ஆய்வுகள் கூறுகின்றன. இந்தியாவில் ஆறு நிமிடத்திற்கு ஒருவர் தற்கொலை செய்துகொள்கிறார்.

இந்தியாவில், மாநிலங்களைப் பொருத்தவரை தற்கொலை செய்து கொள்வோர் எண்ணிக்கை கேரளாவில் அதிகம். படிப்பறிவு விகிதம் அதிகமுள்ள மாநிலத்தில் இந்த நிலை என்பது விந்தையே. அடுத்து வருவது தமிழகம். யூனியன் பிரதேசங்களைப் பார்த்தால் முன்னணியில் இருப்பது புதுவை.

கடந்த ஆண்டில் ஒரு லட்சத்துக்கும் மேற்பட்டவர்கள் தற்கொலை செய்துகொண்டனர்.

காதல் தோல்வி, நோயால் ஏற்படும் தாங்கமுடியாத வலி ஆகியவற்றால் மரணத்தை நாடுகின்றனர். தேர்வில் தோல்வியடையும் மாணவர்கள் கூட இந்த முடிவுக்கு வந்துவிடுகின்றனர். வறுமைக்கும் இதில் பெரும்பங்கு உண்டு. வேலையில்லாத் திண்டாட்டமும் ஒரு காரணமாக அமைகிறது. மற்றொரு பெண்ணுடன் கணவனுக்குத் தொடர்பு இருப்பது தெரிய வருகையிலும் அந்தப் பெண் மனமுடைந்து இந்த அபாயகரமான முடிவை எடுக்கிறார். தாழ்வு மனப்பான்மை உள்ளவர்களும் இதற்குப் பலியாகின்றனர். 'ஆசிரியர் திட்டியதனால் மாணவர் தற்கொலை' போன்ற செய்திகளையும் நாம் படிக்கிறோம். பெரும்பாலும் குடும்பப் பிரச்சினைகளாலேயே தற்கொலை முடிவுக்கு வருகின்றனர்.

மணவாழ்க்கையில் ஏற்படும் பிரச்சினைகள், உளவியல் பிரச்சினைகள், துயரம், தோல்வி, கடன் சுமை, போதைக்கு அடிமையாகுதல் போன்றவை தற்கொலைக்கு இட்டுச் செல்கின்றன.

(தங்களது அந்தஸ்து திடீரெனக் குறைவதைத் தாங்கமுடியாதவர்களும் இந்த முடிவை நாடுகிறார்கள். சமுதாயத்தில் தாங்கள் மரியாதையை இழந்து விட்டதாக உணரும்போது அவர்களுக்கு உடனடியாகத் தோன்றுவது தற்கொலை தான் இதற்கு ஏற்ற மலர் மருந்து *அக்ரிமனி* அவமானத்தில் தற்கொலை செய்து கொள்ளும் மனநிலைக்கு *அக்ரிமனி.*)

காதல் தோல்வியால் மனமுடைந்த 'காதலர்கள் தற்கொலை', இதற்கு *சிக்கரி* என்ற மலர் மருந்து கொடுக்கப்பட வேண்டும். 'வரதட்சிணைக் கொடுமையால் பெண் தற்கொலை', 'கடன் சுமை தாங்காமல் விஷமருந்தித் தற்கொலை' - இத் தலைப்புகள் செய்தித்தாள்களை தினமும் நிரப்புவது மறுக்கமுடியாத உண்மை. இவை மட்டுமா, தாய்வீட்டுக்குப் போக அனுமதிக்கவில்லை என்று பெண் தற்கொலை, தொலைபேசியில் ஆபாசப் பேச்சைக் கேட்டு மனமுடைந்த பெண் தற்கொலை, 'தீபாவளிக்குப் புதுத்துணி வாங்கவில்லை என்று பெண் தற்கொலை' போன்ற செய்திகளுக்கும் பஞ்சமில்லை. 'இந்த அற்ப காரணத்துக்காகவா தற்கொலை செய்துகொள்வது' என்று நாம் அதிர்ச்சி அடைகிறோம். இதயத்தால் சின்ன விஷயத்தைக் கூடத் தாங்கமுடியாமல் போவதே இதற்குக் காரணம். நமது பார்வைக்கு அற்பமாகத் தோன்றும் இந்தக் காரணங்கள் அவர்களைப் பொறுத்தவரை வாழ்க்கையையே நிர்ணயிக்கக்கூடியதாக அமைகின்றன.

நடிகைகள் ஷோபா, சில்க் சுமிதா, விஜி என்று திரையுலகின் பலரது முடிவு மக்களிடத்தில் பெரிய பாதிப்பை ஏற்படுத்தியிருப்பதைக் காணமுடிகிறது.

நடிகை விஜியின் தற்கொலை நம் அனைவரையும் பாதித்த ஒன்று. தற்கொலை செய்துகொள்வதற்கு முந்தைய நாள் அவர் அளித்த பேட்டியில் தான் எந்த முடிவுக்கும் போகக்கூடும் என்று அவர் கூறியுள்ளதாகத் தெரிகிறது.

ஒரு பிரச்சினை "தாங்க முடியாமல்" தற்கொலை மனப்பான்மை வந்துவிட்டால் **செர்ரி ப்ளம்** கொடுத்து வர தற்கொலை மனப்பான்மை நீங்குவது மட்டுமில்லாமல் தனது பிரச்னைகளுக்கு சரியான வழி அவரது மனதில் உதிக்கும்.

(பிரச்சினைகளை சமாளிக்க முடியாமல் 'எங்காவது ஓடிப்போய் விடலாம்' என்று சொன்னால் இதற்கான மலர் மருந்து **செஸ்நட்பட்**. பிரச்சினைக்கு சரியான தீர்வு மனதில் உதிக்க புதிய பாட்ச் மலர் மருந்து **கோலா** ஓரிரு டோஸ் சாப்பிட்டால் போதும்.)

"சிகரெட், மற்றும் காபி, சாராயம்" போன்ற கெட்ட பழக்கங்களை கைவிட **வால்நட்** என்ற மருந்து உதவும். "கெட்ட பழக்கத்தை நிறுத்த இந்தா மருந்து" என, நாம் கண்ணை மூடிக்கொண்டு எல்லா நபர்களுக்கும் *வால்நட்* கொடுத்தால், வேலை செய்யாது. ஏனெனில், கெட்ட பழக்கமுள்ள நபரின் **வாயிலிருந்து வரும் வார்த்தைகளை நமது காதால் கேட்டு**, அதற்கேற்ற மருந்து தேர்ந்தெடுத்து கொடுத்தால்தான் அவரது கெட்ட பழக்கத்தை நிறுத்த முடியும்.

**முதல் நபர்:** "காபி (அல்லது சிகரெட், மது) **பழக்கமாகி விட்டது**. பழக்கமாகி விட்ட இதை எப்படி நிறுத்தமுடியும்? காலையில் எழுந்தவுடன் காபி சாப்பிடாவிட்டால், வேலையே ஓட்மாட்டேன் என்கிறதே". "காபி சாப்பிடாமல் என்றால் இருக்க முடியாது, தலைவலி வந்துவிடும்" என்ற வார்த்தைகளை சொல்லும் நபர்களுக்குத்தான் **வால்நட்** என்ற மலர் மருந்து பலனளிக்கும்.

**இரண்டாவது நபர்**: "சிகரெட் குடிப்பதை நிறுத்த வேண்டும் என முடிவு செய்து விட்டேன். அதை தொடுவதில்லை. ஆனால், சிகரெட்டைப் பார்த்து விட்டால் அல்லது யாராவது புகை பிடிப்பதை பார்த்துவிட்டால் என் **மனதை கட்டுப்படுத்திக்கொள்ள முடியாமல்** ஒரு சிகரெட் பிடித்து விடுகிறேன்" என்று கூறுகிறார். இவருக்கு **வால்நட்** பலனளிக்காது. கெட்ட பழக்கத்தை நிறுத்த முடிவு செய்து, ஆனால் யாராவது குடிப்பதை பார்க்கும்போது **தன் மனதை கட்டுப்படுத்திக்கொள்ள முடியாத** இவரது மன நிலைக்கு ஏற்ற மருந்து **செர்ரி ப்ளம்**.

முதல் நபரால், கெட்ட பழக்கத்தை கைவிட முடியவில்லை. இதற்கு **வால்நட்**. இரண்டாவது நபர் கெட்ட பழக்கத்தை விட்டு விட முடிவு செய்து நிறுத்தியும் விட்டார். ஆனால் எப்போதாவது சிகரெட்டைப் (சாராயம், காபியைப்) பார்த்தவுடன் ஆவலை அடக்க முடியாமல் (தன்னை, தன் மனதை

கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல்) சிகரெட் பிடித்து விடுகிறார். இவருக்கு ஏற்ற மருந்து **செர்ரி ப்ளம்.**

**செர்ரி ப்ளம், வால்நட்** ஆகிய இரு மருந்துகளுக்கும் இடையே உள்ள வித்தியாசம் இதுதான். **செர்ரி ப்ளம்** தேவைப்படும் நபர் தன்னிடம் உள்ள கெட்ட பழக்கத்தை விட்டு விடுவார். ஆனால் அதை (காபி, சிகரெட், சாராயம்) பார்த்துவிட்டால் ஆவலை "அடக்க முடியாமல்" சாப்பிட்டு விடுவார். **வால்நட்** கேஸில் பழக்கத்தை கை விடும் பேச்சிற்கே இடமில்லை.

இவ்வாறு பல மருந்துகளுக்கிடையே உள்ள ஒற்றுமை-வேற்றுமைகளை (comparison) கவனமாக, புரிந்து கொள்ளுதல் இம்முறையில் மிக மிக அவசியம். நூலிழை வேறுபாடுகளும் உண்டு. ஆங்கிலத்தில் razor-thin-difference என்பர்.

பின்வரும் பக்கங்களில் **ஸ்க்ளெரான்த்தஸ்** என்ற மருந்தைப்பற்றி விரிவாக படிக்கப் போகிறோம். 'மன சஞ்சலம்' 'சோம்பேறித்தனம்', 'நாளைக்கு என வேலைகளை தள்ளிப்போட்டுக் கொண்டேயிருத்தல்' போன்றவை **ஸ்க்ளெரான்த்தஸ்** தேவைப்படும் நபரின் மனநிலைகள் ஆகும்.

"இதுதான் கடைசி பாக்கெட், இதற்கப்புறம் சிகரெட்டை கையால் கூட தொட மாட்டேன்" என தீர்மானித்து இருப்பான். அந்த பாக்கெட்டில் உள்ள பத்து சிகரெட்டுகளை ஊதி தள்ளியதும் "இன்னும் ஒரேயொரு பாக்கெட்தான்" என்பான். சாராயம் குடிப்பவன், "நாளை முதல் கிடையாது, இன்றோடு சரி" என கடைக்குப் போய் சாராயம் குடிப்பான். மறு தினம் விடிந்ததும், "இன்று மாத்திரம்தான்; நாளையிலிருந்து குடிப்பதில்லை" என்பான்.

"நாளைக்கு" என்பது சுவரில் எழுதி வைத்த கதைதான். 'இதுதான் கடைசி பாக்கெட்/பாட்டில்' என்பது தொடர்கதையாகி விடும்.

"குடிகாரன் பேச்சு பொழுது விடிஞ்சா போச்சு."

இவர்கள் தங்களது முடிவில் தீவிரமாக, வைராக்கியமாக இருக்க முடியாத நிலையில் உள்ளவர்கள். இதற்கேற்ற மருந்து **ஸ்க்ளெரான்த்தஸ்.** இவருக்கு **வால்நட்** அல்லது **செர்ரி ப்ளம்** எவ்வளவு கொடுத்தாலும் சிறிது கூட பலன் தெரியாது.

habit: வால்நட்

irresistible temptation: செர்ரி ப்ளம்

unsteadiness of mind: ஸ்க்ளெரான்த்தஸ்

இவ்வாறு "குடிப்பழக்கம்" என்ற ஒரே நிலையில் உள்ள பலரின் மன நிலைகளுக்கிடையே உள்ள ஒற்றுமை, வேற்றுமைகளை தெள்ளத் தெளிவாக புரிந்து கொண்டு விட்டால் நீங்கள் பாட்ச் மலர் மருந்துகளை வெற்றிகரமாக பிராக்டீஸ் செய்யலாம். ஏனெனில் நாம் மனிதர்களுக்குத்தான் வைத்தியம் செய்கிறோமேயல்லாது மிருகங்களுக்கு அல்ல.

# **கிராப் ஆப்பிள்** (Crab Apple)

மற்றவர்களின் கைக்குட்டையை நுனி விரல்களால் எடுப்பவர் மற்றும் மற்றவர் உபயோகித்த கர்சீப், சோப் ஆகியவற்றை அருவருப்புடன் பார்ப்பவர்களுக்கு இம் மருந்து தேவை.

மற்றவருடன் கை குலுக்கினுல் கூட கையை கழுவிவிட்டு வரும் நபர்கள், வீட்டு தரையை அடிக்கடி 'டெட்டால்' போட்டு கழுவும் நபர்கள் ஆகியோரும் **கிராப் ஆப்பிள்** டைப் நபர்களே.

'எக்சிக்யூடிவ்' ஆபீசர் வேலைக்கு (M.B.A. போன்று) படித்து ஆனுல் ஐந்து அடி உயரமே இருப்பதால் எங்கு வேலைக்கு சென்றுலும் தனது உருவமே முதல் தகுதியின்மையாகி தனது குள்ளத் தன்மையை நினைத்து கவலைப்படும் நபரைப் பார்த்து இயற்கை (**கிராப் ஆப்பிள்** என்ற மலர் மூலமாக) நமக்கு சொல்கிறது:

''எல்லோராலும் பாராட்டப் படக்கூடிய ஒரு வேலையை செய்வதற்காக உன்னை உலகிற்கு அனுப்பினேன். நீ அதை செய்துவர எல்லோராலும் பாராட்டப்பட்டு, உனது உருவம் கேலிக்குரியதாக இருப்பது அர்த்த மில்லாததாக போய் விடும்.''

இருபத்தி ஐந்து வயதிற்குள் இருப்பவர்கள் **கிராப் ஆப்பிள்** மற்றும் **ஹார்ன்பீம்** ஆகிய இரு மலர் மருந்துகளை தினம் 2-3 வேளை (மற்றும் **சுரபா** வாரம் இருமுறை காலை - மாலை 2 மாத்திரை) சில மாதம் தொடர்ந்து சாப்பிட, தான் விரும்பிய அளவு உயரமாக வளர்ந்து விடுவர். இது low-key approach. இவர்கள் தொடர்ந்து **கிராப் ஆப்பிள்** சாப்பிட எக்சிகியூடிவ் வேலையைவிட சிறந்த வேலை செய்து அதன் மூலம் புதையல் போல் பணம் கிடைக்கப் பெறுவர்.

தனது அசிங்கமான உருவம், முகப் பரு, தோல் வியாதி பற்றி மற்றவர்கள் தன்னை கேலியாக பார்ப்பதாக நினைக்கும் 'டீன் ஏஜ்' பெண்கள், படை (eczema), முன்னங்கையில் வெண் புள்ளி இருப்பதால் அதை மற்றவர்கள் பார்க்காமல் இருக்க முழுக்கைச் சட்டை அணிபவர்கள், அசிங்கம், அருவருப்பு, infection, contagion, contamination பற்றியே நினைத்து முகம் சுளிப்பவர்கள் மற்றும் இடுப்பு, கால் வலியில் 'காலை வெட்டி வைத்து விடலாம் போல் உள்ளது' என்று அல்லது, 'வலி உள்ள இடத்தை பிடுங்கி தனியாக வைத்துவிடலாம் போல் உள்ளது' போன்ற வார்த்தைகள் சொல்பவர்களை **கிராப் ஆப்பிள்** என்ற மலர் மருந்தின் 'நெகடிவ்' தன்மையாளர்கள் (அல்லது இம் மருந்து தேவைப்படும் நபர்) என்று சொல்கிறேம். இவர்களைப் பார்த்து **கிராப் ஆப்பிள்** சொல்கிறது:

''உனக்கு இந்த தொந்தரவுகளை இயற்கை கொடுத்தது உன் வேலையை நினைவூட்டத்தான். நீ **கிராப் ஆப்பிள்** சாப்பிட்டு மேற்சொன்ன வியாதிகள் குணமாகி விட்டாலும் தொடர்ந்து அதே மருந்து சாப்பிட்டுவர எல்லோராலும் பாராட்டக்கூடிய வேலையை என்னவென்று தெரிந்து அதை நீ செய்துவா. இதனுல் உனக்கு புதையல் போல் வருமானம் வரும்படி செய்கிறேன்.''

புதையல் (தங்கக் காசு நிறைந்த சொம்பு பூமிக்கடியில்) அல்லது அந்த அளவு சொத்து ஒரே நேரத்தில் கிடைத்தால் யார்தான் வேண்டாம் என்பார்கள்?

ஆனால் ஒருவர் **கிராப் ஆப்பிள்** என்ற மலர் மருந்தின் நெகடிவ் தன்மையாளராக இருந்தால் மட்டுமே அவர் அம்மருந்து சாப்பிட பாசிடிவ் தன்மையாளராக மாறி (செயல்கள் செய்து) புதையலை பெறுவர்.

**மிக முக்கிய குறிப்பு:** ஒருவர் **கிராப் ஆப்பிள்** டைப் ஆக இல்லாத பட்சத்தில் (முகப்பரு இருந்தாலும் அதை அசிங்கமாக நினைக்காதவர், தொந்தி பற்றி மற்றவர் கேலியாக பார்ப்பார் என நினைக்காதவர்) **கிராப் ஆப்பிள்** சாப்பிட்டு புதையலை பெற முடியாது.

ஆனால் **கிராப் ஆப்பிள்** என்ற மலர், மற்றவர்களை (non-Crab Apple types) பார்த்து சொல்கிறது:

"உனக்கும் புதையல் உண்டு. அதற்கு நீ பாசிடிவ் **கிராப் ஆப்பிள்** நபர் செய்யும் வேலையை செய்தாலே போதும்."

மற்றவர்கள் தன்னைப் பார்த்து கேலி செய்வார்களோ என்று நினைப்பவர்கள் அந்த நினைப்பை விரட்ட / மறக்க செய்ய வேண்டிய பாசிடிவ் செயல் இதுதான்: ஒருவராலும் குறை சொல்ல முடியாத, மற்றும், எல்லோராலும் பாராட்டப் படக்கூடிய செயலை செய்வதுதான்.

தான் ஒரு '**கிராப் ஆப்பிள்**' டைப் நபர் ஆக இல்லாமலிருந்தும் கூட, பாசிடிவ் டைப் **கிராப் ஆப்பிள்** நபர் செய்யும் வேலையை தானும் செய்து ஒரேயொரு தடவை பல கோடி பெற்ற ஒரு நபரை இப்போது பார்ப்போம்.

இன்சூரன்ஸ் ஆபிசில் வேலை செய்து வரும் ஒருவர் (பழைய எண் 28, நடுத்தெரு, ராதா ஸில்க் எம்போரியம் எதிரில், மயிலாப்பூர்) மஞ்சட் காமாலைக்கு மருந்து கற்று தண்ணீரால் பரவும் மஞ்சட் காமாலை நோயாளிகள் (infective hepatitis only) பலரை ஒருவேளை மருந்திலேயே இன்று வரை குணப்படுத்தி வருகிறார். இவரிடம் வந்து குணமாகாத நோயாளியே கிடையாது என சொல்லலாம். இதற்கு அவர் காசு வாங்கியது கிடையாது.

காசு ஏதும் வாங்காமல், தன்னிடம் வரும் எல்லா மஞ்சட்காமாலை (water-borne jaundice) நோயாளிகளையும் குணப்படுத்தி விடுகிறார் என்றால் இவரை பாராட்டாதவர் இருக்க முடியாது. தவிர எவரும் இவரை குறை, கேலி செய்யவும் முடியாது.

ஒரு சமயம், எல்லா டாக்டர்களாலும் கைவிடப்பட்ட ஒரு மஞ்சட்காமாலை நோயாளி, இவரிடம் குணம் பெற்று, அந்த சந்தோஷத்தில் மவுண்ட்ரோடில் உள்ள தனது சொத்தில் பத்து கிரவுண்ட் அந்த டாக்டருக்கு எழுதி வைத்தார். இதன் மதிப்பு சில கோடி ரூபாய்கள் ஆகும்.

ஒல்லியாக இருப்பவர் சதை பிடிக்கவும் மிக குண்டாக உள்ளவர்கள் உடல் இளைக்கவும் **கிராப் ஆப்பிள்** உதவும்.

"அது எப்படி? ஒருவரை இளைக்கச் செய்யும் மருந்து, ஒல்லியாக உள்ள இன்னொருவரை குண்டாக்குமா?" என்ற கேள்வி வாசகர்கள் மனதில் உடனடியாக எழக்கூடும்.

"இளைக்க" வைக்க ஒரு மருந்து, "குண்டாக" மற்றொரு மருந்து என்ற வாய்ப்பாடு எல்லாம் மற்ற முறைகளில் மட்டுமே. பாட்ச் மருத்துவ முறையில் வாய்ப்பாடு அல்லது பரிபாஷையே வேறு. இது அலாதியானது. புரியும்படி சொல்ல வேண்டுமானால்,

"ஒரு நபர் தனது உடல் பருமன் எந்த அளவுக்கு இருக்க வேண்டும் என விரும்புகிறரோ அந்த அளவுக்கு மாற்றிக் கொள்ள" **கிராப் ஆப்பிள்** உதவும்.

"சார், என் கடைசி பெண் மிக குண்டாக இருக்கிறள். அவளுக்கு **கிராப் ஆப்பிள்** கொடுத்தால் உடல் இளைத்து விடுமா?" என்று கேட்டால் 'ஆம்' அல்லது 'இல்லை' என பதில் சொல்ல முடியாது. ஏனெனில், ஒல்லியான, அல்லது குண்டாக உள்ளவர்களுக்கு இம்மருந்து எப்படி உதவும் என்பதை முதலில் தெரிந்துகொள்வது அவசியம். **கிராப் ஆப்பிள்** தேவைப்படும் நபர்கள் யார்?

'அசிங்கம்', 'அருவருப்பு', 'தன் தோற்றத்தைப் பார்த்து மற்றவர்கள் கேலி அல்லது பரிகாசம் செய்வார்களே' என நினைப்பவர்களுக்கு மட்டுமே இம்மருந்து உதவும்.

ஒல்லியாக உள்ள அசோக் என்பவனைப் பார்த்து மற்றவர்கள் "கொத்தவரங்காய் மாதிரி இருக்கிறன்" என பரிகாசம் செய்கின்றனர். இதைப்பற்றி அசோக் கவலைப் படாமலிருந்தால் அவனுக்கு இம்மருந்து உதவாது.

"மற்றவர்கள் தன்னை கேலியாக பார்ப்பார்களே" என கூனி குறுகிப்போய் விடுபவர்களுக்கு மட்டுமே **கிராப் ஆப்பிள்** உதவும். ***(மற்றவர்களை சதா கேலி செய்து கொண்டிருப்போருக்கு வைல்டு ரோஸ் என்ற மலர் மருந்து கொடுக்கப்பட வேண்டும்.)***

"கண்ணாடியில் என் உடம்பை பார்ப்பதற்கு எனக்கே அசிங்கமாக இருக்கிறது" என்று சொல்பவர்களுக்கு இந்த மருந்து உதவும்.

தோல் வியாதிக்கு இது நல்ல மருந்து என சொல்கிறேம். ஏனெனில் தோல் வியாதி உள்ள எவருமே அதை எப்படியாவது குணப்படுத்திக் கொள்ள முயற்சிப்பர்.

முன்னங்கையில் வெண்புள்ளி (leucoderma) உள்ள ரமேஷ், மற்றவர்கள் தன் கையை பார்த்து விட்டால் தன்னை அசிங்கமாக நினைப்பார்களே என்று எண்ணி முழுக்கை சட்டை அணிந்து அதை மறைத் துக் கொள்கிறர். இவர் **கிராப் ஆப்பிள்** சாப்பிட வெண் புள்ளிகள் குணமாகும்.

ஒருவருக்கு முகம், உடல், கால் முழுவதும் வெண்புள்ளிகள். ஆனால் அதைப்பற்றி மற்றவர்கள் என்ன நினைப்பார்கள் என அவர் சிறிதும் கவலைப் படுவதில்லை. இவருக்கு **கிராப் ஆப்பிள்** உதவாது.

அசிங்கம், அருவருப்பு, infection, contamination, contagion ஆகிய வார்த்தைகளை மனதில் வைத்துக்கொண்டால் இம்மருந்து பற்றி புரிந்து கொள்வது சுலபம்.

உடலில் எங்காவது 'கனமாக', 'பாரமாக' இருப்பதாக அல்லது பாதிக்கப் பட்ட பகுதி தனியாக கோடிட்டு காண்பிக்கும்படி நோயாளி உணர்தல்.

'தலைகனம்', 'தலைபாரம்' இவற்றிற்கு **கிராப் ஆப்பிள்**.

**<u>கிராப் ஆப்பிள் தேவைப்படும் நபர்கள் சொல்லும் வேறு சில வார்த்தைகள்:</u>**

கை, கால் வலியில் "காலையே தனியாக கழற்றி வைத்து விடலாம்" போல் உள்ளது.

வயிறு 'கல்போல்' இருப்பதாக சொல்லுதல்.

"காலையில் சாப்பிட்ட சாதம் இன்னும் வயிற்றில் அப்படியே உள்ளது."

பானு என்ற நோயாளி சொன்னாள்: "டாக்டர், எனக்கு வந்திருக்கும் மஞ்சட் காமாலை, பித்தம் அதிகரிப்பதால் வந்திருந்தால் பரவாயில்லை. ஆனால் infective type எனில் உடனே வைத்தியம் செய்யுங்கள்."

எந்த காரணத்தினால் வந்தாலும் மஞ்சட்காமாலை என்பது ஜாக்கிரதையாக பத்தியம் இருந்து மருந்து சாப்பிட்டு சரி செய்து கொள்ள வேண்டியதே.

ஆனால் தனக்கு மஞ்சட் காமாலை வந்து விட்டதை பற்றி இவள் சிறிதும் கவலைப்படவில்லை. அது தொத்து வியாதியால் (infection) வந்திருக்கக்கூடாதே என மட்டும் அக்கறைப் படுகிறாள். **கிராப் ஆப்பிள்** இவளது காமாலை நோயை குணப்படுத்தி விடும். ஒரே நாள் 5-6 டோஸ் கொடுத்தாலே போதும்.

பள்ளி, கல்லூரி மாணவிகள் (குறிப்பாக இளம் பெண்களுக்கு) முகப் பரு வந்து விட்டால் கேட்கவா வேண்டும். அதைப்போக்க கடையில் உள்ள எல்லா கிரீம்களையும் வாங்கி அப்பிக்கொண்டு நிற்பார்கள். முகப்பரு தன் முக அழகை கெடுத்து விட்டதே என நினைப்பவர்கள் **கிராப் ஆப்பிள்** சாப்பிட, முகப்பரு நீங்கி விடும்.

குள்ளமானவர்கள் உயரமாக வளர (அவர்கள் இருபத்தி ஐந்து வயதிற்குட்பட்டவர்கள் எனில்) இம்மருந்து உதவும். எல்லோருக்கும் அல்ல. தனது குள்ள தன்மையை நினைத்து ஏங்குபவர்களுக்கு மட்டுமே. இத்துடன் **ஹார்ன்பீம்** மற்றும் **சுரபா** (புதிய பாட்ச் மலர் மருந்து) சேர்த்து சாப்பிடவும். சாப்பிடும் முறை: ஞாயிறு, வியாழன், (காலை, மாலை) சுரபா 2 மாத்திரை. மீதி நாட்களில் (காலை, மாலை) **கிராப் ஆப்பிள், ஹார்ன்பீம்** ஒவ்வொன்றிலிருந்தும் இரண்டு மாத்திரை சேர்த்தே சாப்பிடலாம்.

Foreign body sensation inside our body. உடலுக்குள் எங்காவது, ஏதோ பொருள் இருப்பது போல் அல்லது பூச்சி ஊர்வது போல், குதிப்பது போல்,

அசைவது போல் இருப்பதாக சொன்னால் **கிராப் ஆப்பிள்**. [*யாரோ தன்னை கூப்பிட்டது போல், மணி அடித்தது போல் தோன்றும் வெளிப்புற மாயத்தோற்றங்களுக்கு* (delusion, illusion, hallucination - auditory and visual) *கொடுக்கப்பட வேண்டிய மலர் மருந்து ஒயிட் செஸ்ட்நட்.*]

**உறுத்தல்,** குத்துவலி.

'மெட்ராஸ் ஐ' (Madras eye) **கண்ணில்** மணல் **இருப்பது**போல் **உறுத்தல் இருந்தால் கிராப் ஆப்பிள்** ஒரிரு டோஸ் குணப்படுத்திவிடும்.

**இறுக்க உணர்ச்சி,** (constricted, contracted, congested sensation) கயிற்றால் இருக கட்டியது போல் வலி, பாரம், **கனம்,** அடைப்பு, அமுக்குவது போல் **உணர்தல்.** இது எந்த வியாதியில் இருந்தாலும் **கிராப் ஆப்பிள்** சாப்பிட, அந்த வியாதி குணமாகிவிடும்.

இதுவரை **கிராப் ஆப்பிள்** என்ற மருந்தின் நெகடிவ் தன்மையாளர்களை பார்த்து வந்தோம்.

இவர்கள் **கிராப் ஆப்பிள்** சாப்பிட்டு வர பாசிடிவ் (நேர்மறையாளர்கள்) ஆக மாறி விடுவர்.

**பாசிடிவ் கிராப் ஆப்பிள் தன்மை:** தேவையில்லாத† குப்பைகளை வீட்டிற்கு வெளியே கொண்டு போய் கொட்டுவது போல் ஒரேயொரு முறை கிடைத்தால் கூட போதும் என, கிடைத்தவுடன் வீட்டிற்குள் கொண்டு வந்து அதி ஜாக்கிரதையாக எதை வைத்துக் கொள்கிறோம்?, 'புதையல்' கிடைக்கவும் **கிராப் ஆப்பிள்** சாப்பிட்டு வரலாம். (பூமிக்கடியில் நிறைய புதையல்கள், மரகதம், வைரம் போன்ற விலையுயர்ந்த கற்கள் புதையுண்டு கிடக்கின்றன. இராமர் ஆட்சியின் போது இருந்த தங்க ஆபரணம், தங்கத்தினாலான எண்ணிலடங்கா அண்டாக்கள், பாத்திரம் இன்றும் பூமிக்கடியில் புதைந்து உள்ளன. நாம்தான் எடுத்துக்கொள்ளாமல், ஏழ்மை வறுமையில் உழன்று கொண்டிருக்கிறோம். **கிராப் ஆப்பிள்** சாப்பிட இவை இருக்குமிடம் நமக்கு தெரிய வரும். புதையல் கிடைக்க சாப்பிடுங்கள் **கிராப் ஆப்பிள்**)

**கிராப் ஆப்பிள்** சாப்பிடும் எல்லோருமே புதையலை அடைய முடியாது.

'அசிங்கம்' 'அருவருப்பு' பற்றியே முக்கியத்துவம் கொடுத்தும், வீட்டு தரையை சதா 'டெட்டால்' போட்டு கழுவிக்கொண்டிருக்கும் நபர்களுக்கு மட்டுமே **கிராப் ஆப்பிள்** சாப்பிட புதையல் கிடைக்கும்.

கழுத்து சுளுக்கு, மூச்சு பிடிப்பு நீங்க **கிராப் ஆப்பிள்**. (வலியால் ஐயோ, அம்மா என முனகினால் **செர்ரி ப்ளம்** சேர்த்தும் கொடுக்கலாம்).

---

† *தேவையில்லாத நினைப்புகள் திரும்ப திரும்ப, அடிக்கடி வருவதை (நெகடிவ் தன்மை) விரட்டியடிக்க* **ஒயிட் செஸ்ட் நட்** *என்ற மருந்து. தேவையான 'ஐடியா', 'ப்ளான்' போன்றவை ஒரு தடவை மட்டும் மின்னலென மனதில் உதிக்கவும்,* **ஒயிட் செஸ்ட்நட்** *(பாசிடிவ் தன்மை).*

வலி உள்ள இடம் 'தனியாக' தெரிகிறது எனில் **கிராப் ஆப்பிள்**

'கடுகு போன இடம் ஆராய்வார்; பூசணிக்காய் போன இடம் தெரியாது' என்ற பழமொழி **கிராப் ஆப்பிள்** மனநிலைக்கு பொருந்தும்.

ஸ்ரீராம் என்பவனுக்கு எப்போது திட உணவு சாப்பிட்டாலும் உடனடியாக மலம் கழித்தாக வேண்டும். ஆபிசில் லஞ்ச் சாப்பிடும்போது கூட, அருகில் பாத்ரூம் உள்ள இடமாக சென்றுதான் சாப்பிட வேண்டும். இது தவிர, சளி, இருமல், தோலில் கட்டிகள், முகத்தில் தாடியில் ஒரேயொரு இடத்தில் மட்டும் நரை. தினம் தினம் கண்ணாடி முன்பு பார்த்து, அந்த நரை முடியை கத்தரித்து எடுத்து விடுவான்.

"டாக்டர் எனக்கிருக்கும் வயிறு சம்பந்தமான தொந்தரவு, சளி, ஆஸ்த்மா இவற்றையெல்லாம் விட்டு விடுங்கள். இந்த நரையை மட்டும், எப்படியாவது குணப்படுத்தி விடுங்கள். எவ்வளவு பணம் செலவழிந்தாலும் பரவாயில்லை" என்று நூறு, இருநூறு என எடுத்து கொடுத்து விடுவான்.

தனக்குள்ள பெரிய வியாதிகளான கான்சர், ஆஸ்த்மா பற்றி கவலைப்படாமல் நரைமுடி, தோல்வியாதி போன்ற அற்ப வியாதிகளுக்கு (அவை தன்னை அசிங்கமாக காட்டுவதால்) மட்டுமே அக்கறைப்படுபவர்களுக்கு, **கிராப் ஆப்பிள்** கொடுக்க ஆஸ்த்மா மட்டுமின்றி தோல் வியாதியும் குணமாகும்.

மேற்படி, நரைமுடி பற்றியே கவலைப்பட்ட ஸ்ரீராமுக்கு **கிராப் ஆப்பிள்** தினம் மூன்று தடவை கொடுத்துவர, நரைமுடி மட்டுமின்றி அவனுடைய எல்லா வியாதிகளும் குணமாகியது.

மேனி எழில் (complexion) அதிகரிக்க, முக அழகு, உடல் அழகு பற்றி கவலைப்படுவோருக்கும், கண்ணாடி முன்பு காலத்தை கணக்கின்றி செல வழிக்கும் அலங்கார பிரியைகளுக்கும், **கிராப் ஆப்பிள்.**

'ஆன்ட்டி' (aunty) என்பவள் 'அக்கா'வாக மாற 'ஹேர்டை' (hair dye) போட வேண்டாம்; **கிராப் ஆப்பிள்** சாப்பிட்டாலே போதும்!

(தனது செயல்களால்) மற்றவர்கள் தன்னை பரிகசிப்பதாக, **கேலி பேசுவதாக** நினைத்து கொண்டிருப்பவர்களுக்கும் **கிராப் ஆப்பிள்.**

அதிக உடல் சூட்டை குறைக்க **கிராப் ஆப்பிள்.**

தினம் ஐந்தாறு தடவை சோப் போட்டு முகம் கழுவுபவர்களுக்கு **கிராப் ஆப்பிள்.**

கீழே சில **கிராப் ஆப்பிள்** தேவைப்படும் மனிதர்களைப் பற்றி குறிப்பிட்டுள்ளோம்.

தரையை அடிக்கடி 'டெட்டால்' போட்டு கழுவும் நபர் மற்றும் பிறர் உபயோகித்த கைகுட்டை, சோப் போன்ற பொருட்களை அருவருப்புடன் நுனி விரலால் எடுக்கும் நபர்களுக்கு **கிராப் ஆப்பிள்** கொடுத்து வர, சில

வாரம் அல்லது மாதங்களில் பகுதி நேர -(part-time) மாக water diviner வேலை செய்து (அவர் ஆபிசில் சம்பாதித்தது போல் பல மடங்கு) சம்பாதிக்க ஆரம்பித்து விடுவர்.

பள்ளியில் L.K.G. முதல் பன்னிரண்டாவது வரை படித்து அதன் பின் கல்லூரி அட்மிஷன் வாங்கி பட்டம் பெற்று அதன்பின் வேலைக்கு அலைந்து.... (இதிலேயே அவனுக்கும் அவன் பெற்றோருக்கும் வாழ்நாளில் பாதி போய்விடும்). இப்படியெல்லாம் கஷ்டப்பட்டு மாதம் இண்டாயிரம் தான் சம்பளமாம்.

இவ்வாறு மனிதர்கள் பணத்திற்கு கஷ்டப்படும்படி கடவுள் வைக்கவில்லை.

கல்லூரி படிப்பு, வேலைக்கு இண்டர்வ்யூ, இதெல்லாம் மனிதன் உண்டாக்கியவை.

Nature hates our systems. இயற்கை (கடவுள்) நமது முறைகளை வெறுக்கிறது.

தினம் தினம் எதை வீட்டில் கொண்டு வந்து பத்திரமாக மூடி வைத்துக் கொள்கிறோம்.? குடிக்கும் தண்ணீரை.

பத்திரமாக வீட்டிற்குள் எதை மாதம் ஒரு தடவை கொண்டு வந்து பூட்டி வைத்துக் கொள்கிறோம்? பணம் அல்லது 1-ம் தேதி சம்பள பணத்தை.

அதைவிட ஒரேயொரு தடவை சர்வ ஜாக்கிரதையாக, (ஒரேயொரு தடவை மட்டுமே அது கிடைத்து) வீட்டிற்குள் கொண்டு வந்து எதை ஜாக்கிரதையாக பத்திரப்படுத்தி வைத்துக்கொள்கிறோம்...

சிறிது யோசனை செய்யுங்கள். அதுதான் treasure (புதையல்). பல லட்சம் அல்லது ஓரிரு கோடி மதிப்புள்ள தங்கநாணயம் / நகை. இது ஒரு தடவை கிடைத்தால் மட்டுமே போதும். வாழ்நாள் முழுவதும் ஜாலிதான். வேலைக்கே போக வேண்டாம்.

(A) 'அசிங்கம்' 'அருவருப்பு' பற்றியே நினைத்துக் கொண்டிருக்கும் நபர்களை **கிராப் ஆப்பிள்** என்ற மலர் மருந்தின் நெகடிவ் தன்மையாளர் என சொல்கிறோம்.

(B) Water diviner தொழிலில் (அல்லது யுத்தமுனையில் கண்ணிவெடி அகற்றுபவரை) கொடி கட்டிப்பறக்கும் நபரை பாசிடிவ் **கிராப் ஆப்பிள்** தன்மையாளர் என சொல்கிறோம்.

"A'ல் குறிப்பிட்ட நபர் **கிராப் ஆப்பிள்** சாப்பிட்டுவர 'B'-ல் குறிப்பிட்ட தொழிலை செய்ய ஆரம்பித்து நிறைய பணம் சம்பாதிப்பர்.

(1) 'A' யில் குறிப்பிட்டுள்ளவரை பூஜ்யம் மார்க் வாங்கிய **கிராப் ஆப்பிள்** தன்மையாளர் என்போம்.

(2) 'B'-யில் குறிப்பிட்ட நபரை (water diviner) ஐம்பது மார்க் வாங்கிய **கிராப் ஆப்பிள்** தன்மையாளர் என சொல்வோம்.

(3) அப்படியெனில் நூறு மார்க் வாங்கிய **கிராப் ஆப்பிள்** தன்மையாளர் யார்?

மேற்படி 'A' அல்லது 'B' நபர் தொடர்ந்து (வாரம் இருமுறை) **கிராப் ஆப்பிள்** சாப்பிட்டு வர ஓரிரு மாதம் அல்லது வருடத்தில் 'புதையல்' கிடைத்து கோடீஸ்வரர் ஆகிவிடுவர். இதுவரை கண்டு பிடிக்கப்பட்ட புதையல்களின் எண்ணிக்கையைவிட நூறு, ஆயிரம் மடங்கு புதையல் பூமிக்கடியில் இருக்கத்தான் இருக்கிறது.

புதையல் கிடைப்பவர் 60-75 மார்க் வாங்கிய **கிராப் ஆப்பிள்** டைப் நபர்.

எவர் வேண்டுமானாலும் **கிராப் ஆப்பிள்** சாப்பிட்டு வர அவர்களுக்கு புதையல் கிடைக்குமா? கிடைக்காது.

அசிங்கம், அருவருப்பு பற்றியே கவலைப்படும் நெகடிவ் **கிராப் ஆப்பிள்** நபர்கள் மட்டுமே, இம்மருந்து சாப்பிட்டுவர புதையல் கிடைத்து கோடீசுவரர் ஆகிவிடுவர்.

ஒவ்வொருவருக்கும் ஆண்டவன் ஒரு I. C. unit அல்லது in-built mechanism வைத்துத்தான் அனுப்பி உள்ளார். அவரவர்க்கு ஏற்ற மலர் மருந்து சாப்பிட எல்லோருமே கோடீசுவரர்தான்.

மனிதர்களை கடவுள் மொத்தம் முப்பத்தெட்டு விதமாக பிரித்து உலகில் அனுப்பி உள்ளான்.

முப்பத்தெட்டுவித மனிதர்களுக்கு முப்பத்தெட்டு விதமான மலர்களை (இங்கிலாந்தில்) விளையும்படி ஆண்டவன் செய்து இருக்கிறார். (இம்மருந்துகளை நாம் இந்தியாவில் இறக்குமதி செய்து மாத்திரை வடிவ விற்பனை செய்கிறோம். எல்லா மருந்துகளும் ஒரே விலைதான். ஒவ்வொன்றும் 300 மாத்திரை அடங்கிய 10ml புட்டிவிலை ரூ. 30=00 மட்டுமே.)

மேற்சொன்ன "அசிங்கம், அருவருப்பு" பற்றியே அதிகம் கவலைப்படும் நபர் **கிராப் ஆப்பிள்** சாப்பிட முதலில் water diviner தொழில் ஆரம்பித்து அதி லேயே பல இலட்சம் பார்த்து அதன் பின்பு புதையலும் கிடைத்து கோடீசுவரர் ஆகிவிடுவார் என பார்த் தோம். இது மட்டுமல்ல. 'போனசும்' உண்டு. அது என்ன?

**கிராப் ஆப்பிள்** டைப் நபர் இம்மருந்து சாப்பிட பணக்காரர் ஆகிவிடுவதோடு அவருக்குள்ள உடல் வியாதி எல்லாம் மறைந்து விடும். தவிர வாழ்க்கைப் பிரச்சினைகளையும் தீர்ந்துவிடும்.

தரித்திரம், வியாதி ஆகிய இரண்டும் வெவ்வேறான விஷயங்கள் அல்ல. தேவையில்லாத ஒரு அரக்கனின் இரு முகங்கள்தான். தேவை யில்லாத விஷயங்களை நீக்குவதோடு தேவையானவற்றை (பணம், ஆரோக்கியம்) கொடுப்பதும் மலர் மருந்துகளின் வேலையே.

அசிங்கம், அருவருப்பு பற்றியே பேசும் **கிராப் ஆப்பிள்** டைப் நபராக நீ இல்லாத பட்சத்திலும் உனக்கு புதையல் கிடைக்க நீ செய்ய வேண்டிய வேலை இதுதான்:

அசிங்கமாக உள்ள தோல் வியாதிக்கு (அல்லது infective disease எதற்காவது) எல்லா கேசுகளிலும் நிச்சய வெற்றியளிக்கக்கூடிய வைத்தியம் கற்று காசு வாங்காமல் நீ வைத்தியம் செய்து வந்தால் உனக்கும் ஒரு நாள் புதையல் (அல்லது அதற்கு ஈடான பணம்) நிச்சயமாக கிடைத்து விடும்.

ஹோட்டலில் சாப்பிடும் போது டிபனை இலையில் கொண்டுவா என்று சொல்வார். **கிராப் ஆப்பிள்** டைப் நபர். இன்னும் சிலர் பலர் எச்சில் செய்து சாப்பிட்டு சரியாக கழுவுவது இல்லை என்பதால் ஹோட்டலில் தண்ணீர் சாப்பிட மாட்டார்கள்.

ஒரு சில குழந்தைகள் பள்ளிக்கூடம் சென்றால் அங்கு கழிவறை, பலர் உபயோகித்து அசிங்கமாக இருக்கும் என்பதால் சிறுநீர் வந்தால் கூட போகாமல் அடக்கிக் கொண்டு வீட்டுக்கு வந்து தான் சிறுநீர் போவார்கள்.

குழந்தைகளில் கூட சிலர் நண்பர் உறவினர் வீட்டிற்கு சென்றால் அங்கு டாய்லட் உபயோகிக்க அருவருப்பு படுவார்கள். இதே போல் சினிமா தியேட்டர்களில் பாத்ரூம் போனால் அங்கு முகம் சுளிப்பர் **கிராப் ஆப்பிள்** டைப் நபர்கள்.

நீங்கள் 'தோல் நோய் நிபுணர்' (Skin Specialist) என போர்டு போட்டுக் கொண்டு உங்களிடம் வரும் தோல் நோயாளிகள் எல்லோருக்கும் தினம் 2-3 வேளை **கிராப் ஆப்பிள்** கொடுக்க அவர்களில் 90 சதவிகித நபர்கள் முழுவதும் குணமாகிவிடுவார்கள்.

அல்லோபதியில் M.B.B.S., M.D. (Skin) படித்த டாக்டர்களே தங்களிடம் வரும் தோல் நோயாளிகளை 15 சதவிகிதத்திற்கு மேல் (அல்லோபதி மருந்துகளால்) குணப்படுத்த முடியவில்லை என சொல்கின்றனர். ஆகையால் M.B.B.S., M.D. படிக்காத நீங்கள் 50 சதவிகித கேசுளில் வெற்றி பெற்றாலே அது பாராட்டுக்குரிய விஷயமாகும்.

தனக்குள்ள தோல் நோய் பற்றி அருவருப்படைந்து அதை எப்படியாவது குணப்படுத்திவிட வேண்டும் என ஒற்றைக் காலில் நிற்பவர்களைத்தான் **கிராப் ஆப்பிள்** குணப்படுத்தும் இவர்கள் தான் ஸ்கின் ஸ்பெஷலிஸ்ட்டிடம் செல்பவர்களில் 90 சதவிகிதமாக இருக்கின்றனர்.

ஆகையால், நீங்கள் 'ஸ்கின் ஸ்பெஷலிஸ்ட்' என போட்டுக் கொண்டால் உங்களிடம் வரும் நபர்களில் 90 சதவிகித்தத்திற்கு மேல் **கிராப் ஆப்பிள்** மன நிலை உள்ளவர்களாகத்தான் இருப்பார்கள்.

உன்னை ஒரே நாளில் M.D. படித்தவரைவிட நல்ல Skin specialist ஆக ஆக்கி விடுகிறேன் என்று சொல்கின்றன மலர் மருந்துகள்.

# ஸ்க்ளெரான்த்தஸ் (Scleranthus)

## 'இப்படியா, அப்படியா' என இரண்டில் ஒன்று முடிவெடுக்க முடியாத நிலை — குழப்பம் — தலைசுற்றல் சோம்பேறித்தனம் — 'இக்கரைக்கு அக்கரை பச்சை' 'ஆற்றில் ஒரு கால், சேற்றில் ஒரு கால்' 'கூழுக்கும் ஆசை, மீசைக்கும் ஆசை'

பதவி உயர்வு பெற்று ஊர் மாற்றம் ஆகும் நபர் அதிக சம்பளம் என்பதால் வெளியூர் போக ஆசைப்படுகிறார். ஆனால் தற்போது உள்ள சொந்த வீட்டை விட்டு போகவும் மனமில்லை.

இரண்டில் எது என்று தீர்மானிக்க முடியாத நிலை.

காலையில் டாக்டரிடம் போக வாசற்படி வரை சென்றவுடன் 'வேண்டாம், நாளை போய்க் கொள்ளலாம்' என நினைத்து திரும்புகிறான். உள்ளே வந்ததும் நாளை எப்படியிருக்குமோ இன்றே போய்விடலாம் என நினைக்கத் தோன்றுகிறது.

ineffectual urging to stool, urine.

மலம் கழிக்கச்செல்ல வேண்டும் போல் உள்ளது. போய் உட்கார்ந்தால் வரவில்லை. இவரை **ஸ்க்ளெரான்த்தஸ்** குணப்படுத்தும்!

காலையில் ஒரு குறிப்பிட்ட நேரத்திற்கு உந்துதல் (urging) வந்து எல்லோரும் தினம் மலம் கழிக்கிறோம்.

போக வேண்டும் போல உணர்வு வந்தவுடன் டாய்லெட்டில் போய் உட்கார்ந்தால் போகமாட்டேன் என்கிறது. ineffectual urging to stool or urine.(**சிலர் 3 நாட்களுக்கு ஒரு முறைதான் மலம் கழிப்பர். ஏனெனில் தினசரி காலை 'போக வேண்டும்' என்ற உந்துதல் (urging) அறவே இருக்காது. இதற்கான மலர் மருந்து **ஒயிட் செஸ்ட்நட்**.)

"மலம் சரியாக போகாமல் பாதிமட்டும் போனால்", அல்லது "போக வேண்டும்போல் உள்ளது. ஆனால் போகவில்லை" எனில் **ஸ்க்ளெரான்த்தஸ்**.

பத்து மணிக்கு ஆபீஸ். வீட்டிலிருந்து 9 மணிக்கு கிளம்ப 7.30 அல்லது 8 மணிக்கு மலஜலம் கழித்து, பின்பு குளித்து, டிரெஸ் செய்து போகவேண்டும். 7.30 - 8.30 மணிக்கு அந்த உந்துதல் (urging to stool) சிறிதுகூட 'இல்லாததால்' என்னென்னவோ செய்து பார்ப்பார். அல்லது உடலை பலவிதமாக வளைத்து (டான்ஸ் ஆடாத குறையாக) முயற்சி செய்வார். இவருக்கு **ஒயிட் செஸ்ட்நட்**.

தூக்கமின்மைக்கு 90 சதவிகித கேசுகளில் **ஸ்க்ளெரான்த்தஸ்** அல்லது **ஒயிட் செஸ்ட்நட்** உபயோகமாகும்.

(A) இரவில் தூக்கம் வராமல் படுக்கையில் ஆடாமல் அசையாமல் கண்ணை திறந்துகொண்டு படுக்கிருன். தூக்கம் சிறிதுகூட வராததால் கண்ணை மூடவில்லை. அல்லது (B) புத்தகம் படித்துக் கொண்டோ, வேறு வேலை செய்துகொண்டோ இருப்பர்.

மேற்சொன்ன (A) மற்றும் (B) நபருக்கு தேவை **ஒயிட்செஸ்ட்நட்.**

இரவில் தூக்கம் வராமல் கட்டிலில் இப்படியும் அப்படியும் புரண்டு புரண்டு படுக்கிருர் எனில் இது குழப்பமான நிலையை குறிக்கிறது. இதற்கு **ஸ்க்ளொரான்த்தஸ்.** எந்தபக்கம் அல்லது நிலையில் (position) படுத்தால் தூக்கம் வரும் என்று தெரியாத குழப்பமான மனநிலை இருப்பதால்தான் புரண்டு புரண்டு படுக்கிருர். இதற்கு **ஸ்க்ளொரான்த்தஸ்.**

இன்னும் சிலர் கட்டிலிலிருந்து கீழே இறங்கி படுப்பார்கள். அங்கு தூக்கம் வராததால் சோபாவில் படுத்து தூங்க முயற்சிப்பர். இவ்வாறு இடத்தை மாற்றிக்கொண்டே இருப்பவருக்கும் **ஸ்க்ளொரான்த்தஸ்.**

'**தூக்கம்**' என்ற தலைப்பில் வேறு சில விஷயங்களையும் பார்ப்போம்.

'இரவில் தூக்கம் வர **ஸ்க்ளொரான்த்தஸ்.** பகலில் (பள்ளி அல்லது அலுவலகத்தில்) தூங்கி வழியாமல் இருக்கவும் **ஸ்க்ளொரான்த்தஸ்.**

எப்படி ஒரே மருந்து தூக்கம் வரும்படியும் செய்யும், தூக்கம் வராமல் தடுக்கவும் செய்யும் என்பது சிலரின் கேள்வி. இதற்கு பதில் தெரிந்து கொள்ள பாட்ச் மலர் மருத்துவ பரிபாஷைகளை நாம் கற்க வேண்டும்.

ஒரு காரியம் நடக்க வேண்டிய சமயத்தில் (regular) நடக்காமல் வேறுநேரத்தில் (irregular) நடந்தால் அதை impromptness என சொல்வோம்.

உதாரணமாக பள்ளி அல்லது ஆபிசில் (அதுவும் பகலில்) தூக்கம் வரக்கூடாது. இப்படி பகலில் தூங்கி வழிபவர்களை இரவில் பார்த்தால் தூக்கம் வராமல் புரண்டு புரண்டு படுப்பர்.

இந்த irregular விஷயத்திற்கு (பகலில் தேவையில்லாத தூக்கம் வரும்) இரவில் தேவையுள்ள தூக்கம் வராமல் இருப்பது எனில் இவ்விரண்டிற்கும் **ஸ்க்ளொரான்த்தஸ்.**

காலையில் எழுப்பிவிட்டால்தான் எழுந்திருக்கும் குழந்தைகளுக்கு **ஸ்க்ளொரான்த்தஸ்.**

**Impromptness.** பாடங்களை படிக்காமல் டி.வி, கதை புத்தகம், விளையாட்டு போன்றவற்றில் அதிக ஈடுபாடு உள்ள சோம்பேறிகளுக்கு **ஸ்க்ளொரான்த்தஸ்** . இவர்கள் நாட்களை வீணடித்துவிட்டு பரீட்சைக்கு இரண்டு நாட்கள் முன்பு கண்விழித்து படிப்பர்.

Doing things at the eleventh hour. தான் உடுத்திய துணியை அன்றுடம் துவைத்து வைக்காமல் நாளை, நாளை என தினம் தினம் துணிகளை சேர்த்துவைத்து மறுதினம் ஆபீஸ் போக சட்டை இல்லை என்ற நிலையில் சேர்த்துவைத்த அழுக்கு மூட்டை எல்லாவற்றையும் துவைக்க ஆரம்பிக்கும் நபருக்கு **ஸ்க்ளொரான்த்தஸ்.**

ஒருநாள் போல் தினமும் பள்ளி, ஆபீசுக்கு நேரம் கழித்து வருபவர்களை regularly irregular என்பர். இவர்கள் நேரத்திற்கு வர **ஸ்க்ளெரான்த்தஸ்.**

**Postponing work.** வேலைகளை நாளைக்கு செய்யலாம் என தள்ளிப் போட்டுக் கொண்டேயிருக்கும் சோம்பேறிகளுக்கு **ஸ்க்ளெரான்த்தஸ்.**

இந்தியாவில் எங்கேயாவது நிகழ்ச்சி குறிப்பிட்ட நேரத்திற்கு ஆரம்பிக்கப்பட்டிருக்கிறதா? பத்து மணி என்றால் பத்தரைக்கு மேல்தான் ஆரம்பமாகும். இதை Indian punctuality என்பர்.

நிறைய வேலைகள் இருக்கும்பொழுது எதை முதலில் செய்வது என குழம்பி நிற்பவருக்கு **ஸ்க்ளெரான்த்தஸ்.**

வகுப்பில் மாணவர்கள், ஆபீசில் ஊழியர்கள் தூங்கி வழிந்தால் **ஸ்க்ளெரான்த்தஸ்.**

மாணவர்களுக்கு கதைப்புத்தகம் எவ்வளவு பக்கமாக இருந்தாலும் அதை இரவு 2 மணிவரைகூட படிக்க தூக்கம் வராது. ஆனால் இரவு 9 மணிக்கு கூட பாடப் புத்தகத்தை எடுத்து வைத்து படிக்க ஆரம்பித்து ஓரிரு பக்கம் முடிப்பதற்குள்ளேயே கொட்டாவி வந்து தூங்கிவழிந்து புத்தகத்தின் மீது தலைவைத்து தூங்கிவிடும் தூங்குமூஞ்சி மாணவர்களுக்கு **ஸ்க்ளெரான்த்தஸ்** கொடுக்கப்பட வேண்டும்.

(தன் முன் இருக்கும் வேலைகளைப்பார்த்து 'அம்மாடி' என்றோ 'இவ்வளவு வேலைகளையும் எப்படி செய்யப்போகிறோமோ' என மலைத்துப் போய் நிற்பவருக்கு **ஹார்ன்பீம்.**)

**ஓர் உண்மை நிகழ்ச்சி:** நான் டில்லியிலிருந்தபோது பாங்க் ஆப் இந்தியாவில் வேலை செய்யும் எனது நண்பன், தான் டிபார்ட்மெண்ட் பரீட்சைக்கு படிப்பதாகவும், படித்தால் தூக்கம் வந்து விடுகின்றது என்று சொல்லவே **ஸ்க்ளெரான்த்தஸ்** ஒரு புட்டி மாத்திரை கொடுத்து புத்தகம் படிக்கும்போது தூக்கம் வந்தால் மட்டும் இரண்டு மாத்திரை போட்டுக்கொள்ளும்படி சொன்னேன்.

ஆபிசில் டேபிள் மீது **ஸ்க்ளெரான்த்தஸ்** மாத்திரை அடங்கிய பாட்டிலை வைத்து விட்டு பாடங்களை படித்துக் கொண்டிருக்கும்போது இவர் மேஜை மீது இருக்கும் மருந்து பாட்டிலை பார்த்த சக ஊழியர்கள் "தெம்புக்கு மாத்திரை சாப்பிடுகிறாயா? எனக்கும் ஒரு டோஸ் கொடு" என போக வர எல்லோருமே சாப்பிட ஆரம்பித்தனர். (வட இந்தியாவில் பொதுவாக எவராவது மருந்து சாப்பிட்டால் அது தெம்பிற்கு என்றுதான் எல்லோரும் நினைப்பர். இது அங்கு ஒரு பைத்தியக்காரத்தனம்.)

**ஸ்க்ளெரான்த்தஸ்** எல்லோரையும் சுறுசுறுப்படையச் செய்துவிட்டது.

ஒவ்வொருவர் மேஜை மீது இடது பக்கம் உள்ள ட்ரேயில் செய்ய வேண்டிய வேலைகள் அடுக்கடுக்காக இருக்கும். வலது ட்ரேயில் செய்து முடித்து மேலதிகாரி கையெழுத்துக்காக உள்ளே எடுத்துச் செல்ல வைத்திருக்கப்பட்டிருக்கும். ஆனால் எவருமே வேலை செய்யாததால் வலது

ட்ரே எப்போதும் காலிதான். மேலதிகாரி திரும்பத் திரும்ப வற்புறுத்தி கேட்ட பின்புதான் அந்த ஃபைல் மட்டும் வேலை முடிக்கப்பட்டு உள்ளே போகும்.

**ஸ்க்ளெரான்த்தஸ்** எல்லோரையும் சுறுசுறுப்படையச் செய்யவே இடது பக்கத்தில் உள்ள ட்ரே கிடுகிடு என்று காலி ஆகி வலது ட்ரே நிரம்பி வழிந்து மானேஜர் அறைக்குள் (கையெழுத்துக்காக) நிறைய ஃபைல்கள் வேகமாக செல்ல ஆரம்பித்தன.

கேட்டாலும் வேலை செய்யாதவர்கள், கேட்காமலேயே எல்லா வேலைகளும் உடனுக்குடன் செய்யப்பட்டு பைல்கள் உள்ளே மலைபோல் குவியத் தொடங்கியதைப் பார்த்து எல்லோருமே சொல்ல ஆரம்பித்தனர். "என்னவென்று தெரியவில்லை. நமது ஆபிசில் பிசாசு ஏதாவது புகுந்து விட்டதா? எல்லா வேலைகளும் சுறுசுறுப்பாக நடக்கின்றனவே?" (पता नहीं आजकल क्या हो रहा है। दफतर में भूत आ गया क्या? सारा काम फटाफट हो जाता है !)

காலையில் ஒரு ரிப்போர்ட் சமர்ப்பிக்க முதல் நாள் இரவு இரண்டு மணி வரை கண்விழித்து வேலை செய்ய வேண்டும். ஆனால் பத்து மணிக்கு தூங்கி பழக்கம் எனில் பத்துமணிக்கு ஒரு டோஸ் **ஸ்க்ளெரான்த்தஸ்** சாப்பிட கண்ணில் ட்யூப் லைட் போட்டது போல் இரண்டு மணி வரை தூக்கம் வராமல், செய்து, வேலை முடிந்து படுத்தவுடன் நல்ல தூக்கம் வந்து எட்டு மணி நேர தூக்கத்தை நான்கு மணி நேரத்தில் ஆழ்ந்து தூங்கி காலை 6 மணிக்கு எப்போதும் போல் சுறுசுறுப்பாக எழுந்துவிடலாம்.

குடிப்பழக்கத்தை ஒழிக்க

(a) "சாராயம் சாப்பிடாவிட்டால் கை நடுங்கும் — பழக்கமாகிவிட்டது — கைவிட முடியவில்லை" எனில் இவர்களுக்கு தேவை **வால்நட்**

(b) "குடிப்பதை நிறுத்திவிட்டேன். ஆனால் யாராவது குடிப்பதை பார்த்தால் ஒரு 50 மில்லிபோட்டு விடுவேன்" என்பவர்க்கு (ஆவலை அடக்க முடியாமை) **செர்ரி ப்ளம்**

(c) குடித்து விட்டு வந்து "நாளைமுதல் குடிக்க மாட்டேன்" என பெண்டாட்டி தலையில் கை வைத்து சத்தியம் செய்வான். மறுநாளும் இதே கதைதான். 'குடிகாரன் பேச்சு விடிந்தால் போச்சு' என்ற பழமொழி **ஸ்க்ளெரான்த்தஸ்** என்ற மலர் மருந்து தேவைப்படும் மனநிலையை குறிக்கிறது.

இதுதான் கடைசி பாக்கெட் / பாட்டில். இதற்கப்புறம் கிடையாது என்பான். ஆனால் அந்த பாக்கெட்டில் உள்ள கடைசி சிகரெட் குடித்து முடித்த உடன், 'இன்னும் ஒரேயொரு பாக்கெட்; அதற்கப்புறம் அறவே கிடையாது' என சொல்பவனுக்கு (unsteadines of mind) **ஸ்க்ளெரான்த்தஸ்** தேவை. 'நாளை என்பது சுவரில் எழுதி வைத்த கதைதான்.'

பல வருடங்களுக்கு முன்னால் நரம்பு சிகிச்சையில் சென்னை மருத்துவ கல்லூரியில் உதவி பேராசிரியராக இருந்த ராமமூர்த்தி என்பவர் காலை 9 மணிக்கு வகுப்பறையில் இருக்க வேண்டுமானால் காலை 6 மணிக்கு அலாரம் அடித்தும், அலாரத்தை நிறுத்திவிட்டு 7 மணிவரை தூங்குவோமே என தீர்மானித்து தூங்குவார். 7 மணி ஆனவுடன் இன்னும் இரண்டு மணிநேரம் இருக்கிறது. குளித்து பஸ் பிடித்து போவதற்கு ஒரு மணிநேரம் போதும். ஆகையால் எட்டு மணிவரை தூங்குவோமே என நினைத்து தூங்குவார். ஆனால் மணி எட்டு அடித்தவுடன் இன்னொரு 15 நிமிடம் தூங்கி பிறகு விறுவிறுவென்று - குளித்து போகலாம் என இவ்வாறு (பிறகு ஐந்து நிமிடம் மட்டும் ஒரு தூக்கம்) 8.30 மணிக்கு கிளம்பி குளித்தும் குளிக்காமலும் டாக்ஸி பிடித்து ஓடுவார். தனது இந்த நிலையை மந்தைவெளி தெருவில் பழைய எண் 6ல் வசித்து வந்த இராமசாமி என்ற டாக்டரிடம் சொல்ல பின்னவர் ராமமூர்த்திக்கு **ஸ்க்ளொரான்த்தஸ்** ஒரு பாட்டில் மாத்திரை கொடுத்து தினம் 2-3 வேளை சாப்பிட கொடுத்தார். ஒரு வாரம் கழித்து ராமமூர்த்தி அந்த டாக்டரிடம் வந்து "இப்போதெல்லாம் காலை ஆறுமணிக்கு ஸ்பிரிங் போல் எழுந்துவிடுகிறேன்" என்றார்.

# ராக் வாட்டர்

பாட்ச் மலர் மருத்துவ முறையில் மொத்தம் 38 மருந்துகள் உள்ளன. இவற்றில் முப்பத்தேழு மருந்துகள் ஒவ்வொன்றும் இங்கிலாந்து காடுகளில் மட்டுமே கிடைக்கும் ஒவ்வொரு மலரிலிருந்து தயாரிக்கப்படுகிறது. முப்பத்தெட்டாவது மருந்து மட்டும் பாறை இடுக்கிலிருந்து வெளியேறும் ஊற்று நீர் ஆகும். இதன் பெயர் **ராக் வாட்டர்.**

அடங்காப் பிடாரி, பேட்டை ரவுடி, போலீஸ் அராஜகம், பொய் சாட்சி, கொடூர கணவன்/மாமியார் மற்றும் பெற்றோர்களுக்கு கட்டுப் படாத குழந்தைகளை அடக்க, பாதிக்கப்பட்ட நபர் சாப்பிட வேண்டிய மலர் மருந்தின் பெயர் *ராக் வாட்டர்.*

**திரு ஜான்சன் சொல்கிறார்:** [Flat No. 2, Golden Court, 865 (பழைய எண் 60) அப்பு தெரு, மயிலாப்பூர்] நான் வேலை செய்யும் அலுவலகத்தில் கம்ப்யூட்டர் செக்ஷனில் சம அந்தஸ்தில் உள்ள நாங்கள் ஐவர் வேலை செய்கிறோம். என்னுடன் பணி புரியும் ஒரு நபர் மேலதிகாரிகளுக்கு லஞ்சம் கொடுத்து அயோக்கியத்தனமான காரியங்களை செய்து வந்தார். அவர் அட்டகாசம் சகிக்க முடியாமல் போகவே அதை அடக்க நான் தினம் ஓரிரு வேளை *ராக் வாட்டர்* சாப்பிட்டு வந்தேன். ஒரு வாரம் சென்றபின் ஒரு நாள் அலுவலகத்தில் காலை எல்லோரும் வந்த பிறகு என்னுடன் பணி புரியும் ஒருவர் (நாங்கள் எல்லோரும் உபயோகிக்கும்) ரகசிய வார்த்தையை உபயோகித்தும் கம்ப்யூட்டர் திறந்து கொள்ளவில்லை என என்னிடம் சொன்னார். அந்த அயோக்கியன்தான் ஏதாவது செய்திருப்பான் என தீர்மானித்து அவனது பெயரையே ரகசிய வார்த்தையாக உபயோகித்து பார்க்க கம்ப்யூட்டர் திறந்து கொண்டது. இதை நாங்கள் மேலதிகாரிகள் கவனத்திற்கு கொண்டு வர அந்த அயோக்கியனுக்கு 'மெமோ' கொடுக்கப்பட்டு அவனுக்குத் தரவிருந்த முக்கிய ப்ராஜக்ட்டும் கான்சல் செய்யப்பட்டது. இதன் பிறகு அவன் பெட்டி பாம்பாக அடங்கி விட்டான்.

திருமதி லதா (அசோக் நகர்) சொல்கிறார்: நான் வசிக்கும் பகுதியில் (அசோக் நகர்) ஆளுங்கட்சிக்கு வேண்டப்பட்ட ஒரு ரவுடியின் அட்டகாசம் தாங்காமல் போய் கொண்டிருந்தது. பகுதி மக்கள் அவனை ஒன்றும் செய்ய முடியாமல் திண்டாடி என்னிடம் வந்தனர். ஏதாவது ஒரு மீட்டிங் போட்டு அவனை தலைமை தாங்க கூப்பிடச் சொல்லி, அந்த குறிப்பிட்ட நாளில் நான் *ராக் வாட்டர்* என்ற மலர் மருந்து ஒரு டோஸ் சாப்பிட்டு சென்றேன். என்னைப் பார்த்ததும் அவனுக்கு என்ன ஆகியதோ தெரியவில்லை. அவன் என் முன்பு பெட்டி பாம்பாக அடங்கி குழைய ஆரம்பித்தான். அவன் செய்த அட்டூழியங்களை (நான் கேட்காமலேயே) அவனாக ஒப்புக் கொண்டு, எல்லோரிடமும் அடாவடித்தனமாக வசூலித்த பணத்தை திருப்பி கொடுப்பதாக சொல்லி அவ்வாறு செய்தான். அன்றிலிருந்து அவன் தொல்லை நின்றது.

யூனிபார்ம் (சீருடையில்) உள்ள மிலிடரி, போலீஸ், கோர்ட், வாட்ச்மேன், கவர்ன்மெண்ட் ஆபீஸ் ஆகிய இடங்களுக்கு செல்லு முன்பு *ராக் வாட்டர்* ஒரு டோஸ் சாப்பிட்டு பாருங்கள். உங்களை அனுவசியமாக

தொந்தரவு செய்ய மாட்டார்கள்.

Sales Tax Return file செய்ய போகிறீர்கள். அல்லது கார்ப்பரேஷன், முனிசிபல் குழாயில் தண்ணீர் வரவில்லை என புகார் செய்ய செல்கிறீர்கள். அல்லது புதியதாக கட்டிய வீட்டிற்கு எலக்ட்ரிக் லயன் கனெக்ஷனுக்கு விண்ணப்பிக்கிறீர்கள். அல்லது வீடு விற்க பத்திரம் பதிவு செய்ய ரிஜிஸ்டர் ஆபீஸிற்குக்கு செல்கிறீர்கள்.

இங்கெல்லாம் சில்லறை (இலஞ்சம்) இல்லாமல் வேலை நடக்காது. இவ்விடத்திற்கு செல்லும் முன்பு ஒரு டோஸ் *ராக் வாட்டர்* (இத்துடன் *சிக்கரி* மற்றும் *கார்ஸ்* ஆகிய இரு மலர் மருந்துகளையும் சேர்த்து சாப்பிடலாம்) சாப்பிட்டு சென்று பாருங்கள். இலஞ்சம் நாமாக கொடுத்தால் கூட வேண்டாம் என சொல்லி மரியாதையாக, நம்மை காக்க வைக்காமல், நம்மை உட்கார வைத்து அவன் எழுந்து நின்று, ஓடி வேலைகளை செய்து முடித்து கொடுப்பான்.

நாம் *ராக் வாட்டர்* சாப்பிட்டவுடன் நம்மைப் பார்க்கும் எல்லோருமே நடு நடுங்குவர் என சொல்வது தவறு. நாம் செலுத்தும் வரிப் பணத்திலிருந்து தான் போலீஸ், ரிஜிஸ்ட்ரார், கோர்ட், அரசு ஆஸ்பத்திரி ஆகியவைகளுக்கு சம்பளம் கொடுக்கப்படுகிறது. அவர்கள் நமது வேலைக்காரர்கள்.Government servant தானே தவிர எஜமானர் அல்ல. மாத சம்பளத்திற்கு கூலி வேலை செய்யும் வேலைக்காரன், எஜமானன் போல் அடாவடித் தனமாக நடந்து கொண்டால் அவனிடம் செல்லும் நாம் *ராக் வாட்டர்* சாப்பிட்டு செல்ல, அவன் எஜமானத்தனம் ஒழிந்து, வேலைக்காரனாக நடந்து கொள்வான்.

(வேலைக்காரன், வேலைக்காரனாக இருக்கச் செய்யமட்டுமே *ராக் வாட்டர்* உதவும். நாம் பார்க்கும் எல்லோரையும் அல்ல)

நாம் எல்லோரும் சேர்ந்து ஓட்டு போட்டுத்தான் எம்.எல்.ஏ., எம்.பி., மந்திரிகள், முதன் மந்திரிகள் உருவாகியுள்ளனர். அவர்கள் தான் நம் முன்பு கைகட்டி மரியாதையாக பேச வேண்டும்.

ஆனால் நடைமுறையில் நடப்பதோ தலைகீழ். விஷயங்கள் தலைகீழாக அல்லது தாறுமாறாக நடந்தால் அவற்றை சரியான மலர் மருந்தை நாம் சாப்பிட்டு சரி செய்து விடலாம்.

திரு இராம் குமாரின் கார் திருடு போய் போலீஸ் கம்ப்ளெய்ண்ட் கொடுத்து ஒரு மாதம் கழித்து அவராகவே வண்டியை தேடி கண்டுபிடித்தார். (போலீஸ் கண்டுபிடிக்கவில்லை), வண்டி கிடைத்தால் கூட கோர்ட்டில் போய் (வக்கீல் மூலமாக affidavit file செய்து) அது தனது வண்டி என சொல்லி பிறகு தான் வண்டியை நம் வீட்டிற்கு எடுத்து வரவேண்டும். கோர்ட்டுக்கு போனால் போலீஸ்காரன் 'சார் ஒரு ஆயிரம் கொடுங்கள். உங்களுக்காக வக்கீல் ஏற்பாடு செய்ய வேண்டும்' என சொல்வான். இதில் 200 மட்டும் வக்கீலுக்கு கொடுத்து விட்டு மீதியை தன் பாக்கெட்டில் போட்டுக் கொள்வான்.

இவ்விதம் கோர்ட்டுக்கு செல்லுமுன்பு மேற்சொன்ன இராம்குமார் ஒரு டோஸ் (2 மாத்திரை) *ராக் வாட்டர்* சாப்பிட்டு சென்றார். காரியங்கள் விரைவாக, இலஞ்சம் இல்லாமல் அதுவும் துரிதமாக நடந்தது.

திரு சாம்பசிவ சாஸ்திரிகள் பல வீடுகளுக்கு சென்று ஹோமம் , அமாவாசை தர்ப்பணம் ஆகியவை செய்து வைத்து தினம் 20-30 என சம்பாதித்து வயிறு, வாயை கட்டி தனது ஒரே மகனை B.A. வரை படிக்க வைத்து வேலையில் (ஐயாயிரம் இலஞ்சம் கொடுத்து) சேர்த்து விட்டார். சில நாட்கள் வேலைக்கு சென்றுவிட்டு அதன்பின் போகாமல் வீட்டிலேயே உட்கார்ந்து 'அப்பாதான் சம்பாதிக்கிறாரே, நான் ஏன் வேலைக்கு செல்ல வேண்டும்' என அடம் பிடித்தான்.

திரு. சாம்பசிவம் இதை என்னிடம் வருத்ததுடன் சொன்னார். அவருக்கு *ராக் வாட்டர்* ஒரு பாட்டில் மாத்திரை கொடுத்து தினம் ஒரிரு வேளை அவரை சாப்பிடச் சொல்லி கொடுத்தேன். ஒரு வாரம் கழிந்த பிறகு அவர் பையன் வேலைக்கு ஒழுங்காக செல்ல ஆரம்பித்தான்.

எஞ்சினியரிங், மருத்துவ படிப்புகளுக்கு இலட்சக்கணக்கில் இலஞ்சம் கொட்டி அழுதால் தான் *'சீட்'* கிடைக்கும். *ராக் வாட்டர்* மற்றும் *கார்ஸ்* சாப்பிட்டு சென்று பாருங்கள். இலஞ்சம் வாங்காமல் சீட் கிடைக்கும். நமது குழந்தையை ஆசுபத்திரியில் சேர்த்து பணம் கொடுத்து வைத்தியம் செய்து வெளிவந்த பிறகு (பின்னால் வேறு ஆசுபத்திரிக்கு அல்லது டாக்டரிடம் செல்லும் போது அதற்கு முன்பு என்ன வைத்தியம் செய்து கொண்டோம் என்று தெரிய) நோயாளிக்கு செய்த டெஸ்ட் ரிப்போர்ட், சிகிச்சை விபரம் ஆகிய எந்த பேப்பரும் தரமாட்டேன் என்று சொல்லும் திமிர் பிடித்த டாக்டர்களை அடக்க, ரிப்போர்ட் கேட்க செல்லுமுன்பு ராக்வாட்டர், ஒக், வாட்டர் வயலெட் ஆகிய மூன்று மருந்துகளையும் நாம் சாப்பிட்டு செல்ல ரிப்போர்ட் எல்லாம் நம்மிடம் கொடுத்து விடுவர்.

வீரப்பனை பிடிக்க செல்லும் தேவாரம், கோபால கிருஷ்ணன்கள் ராக் வாட்டர் சாப்பிட்டு வர, வீரப்பன் தானாகவே வந்து சரணடைந்து விடுவான். ஆப்கன் எல்லையில் அமெரிக்க படை வீரர்கள் *ராக் வாட்டர்* தினம் 3 வேளை சாப்பிட அடுத்த நாற்பத்தி எட்டு மணி நேரத்தில் பின்லாடன் அவனாகவே வந்து சரணடைந்து விடுவான். சட்டத்தை தன் கையில் எடுத்துக் கொண்டு திரியும் L.T.T.E., நக்ஸலைட் ஆகியோரை அடக்க போலீஸ் சாப்பிட வேண்டியது *ராக் வாட்டர்.*

தீவிரவாதிகளால் கடத்தப்பட்ட விமானத்தில் உள்ளே ஒரு பயணியாக மாட்டிக் கொண்டு விட்டீர்களா? *ராக்வாட்டர், கார்ஸ், சிக்கரி* (மூன்று மணி நேரத்திற்கு ஒரு டோஸ் வீதம்) சாப்பிடுங்கள். உங்களை மட்டும் விட்டுவிடுவான். அல்லது மொத்த பயணிகளில் மூன்றில் ஒரு பங்கிக்கிற்கு குறையாத நபர்கள் ராக்வாட்டர், கார்ஸ், சிக்கரி சாப்பிட எல்லோரும் பத்திரமாக விடுதலை பெறலாம். விமான பயணத்தின் போது நமது சட்டைப் பையில் இவை மூன்றும் வைத்திருக்க வேண்டும்.

நீங்கள் உயரத்தில் விமானத்தில் பயணம் செய்து கொண்டிருக்கும்போது விமானத்தின் எஞ்சினில் ஏதோ கோளாறு வந்துவிட்டால், உடனடியாக சக பயணிகளுக்கு ராக் ரோஸ், கார்ஸ் கொடுக்க எவருக்கும் பெரிய விபத்து ஏற்படாமல் விமானம் பத்திரமாக எங்காவது தரையிறங்கி விடும். அல்லது கோளாறு அதுவாகவே சரியாகி விடும்.

## **மிமுலஸ்** (Mimulus) என்பது ஒரு மலர் மருந்தின் பெயர் பயந்தாங்கொள்ளி, இருட்டு பயம்; நாயைக் கண்டால் பயம், மேலதிகாரியிடம் பயம், வெட்கம், டாக்டரிடம் போக பயம், ஊசி போட்டு கொள்ள, ஆபரேஷன் செய்து கொள்ள பயம்

இன்ஸ்பெக்ஷன் அல்லது 'ஆடிட்' செய்ய தலைமை ஆபீஸிலிருந்து அதிகாரிகள் வருகிறார்கள் எனில், அந்த பிராஞ்சு ஆபிஸில் உள்ளவர்கள் பயந்து சாவார்கள் அல்லவா? பிராஞ்சு ஊழியர்கள் **மிமுலஸ்** சாப்பிட்டுவர இவர்கள் பேசும் விதத்தை பார்த்து, ஹெட் ஆபீஸ் இன்ஸ்பெக்ஷன் டீம் "இவர்கள் எல்லாம் சரெக்டாக வேலை செய்பவர்கள் போலிருக்கிறது, அதுதான் தைரியமாக இருக்கிறார்கள்" என நினைத்து அந்த பிராஞ்சு ஆபீஸ் பற்றி நல்ல ரிப்போர்ட் எழுதிவிட்டு செல்வர்.

அப்பு சாஸ்திரிகளுக்கு கண்ணில் சதை வளர்ச்சியை (cataract) ஆபரேஷன் மூலம் குணப்படுத்த ஆபரேஷன் தியேட்டருக்குள் நுழைந்தவுடன் பயத்தினால் இரத்த அழுத்தம் ஜாஸ்தியாகி விட்டது. Blood-pressure இருந்ததால், ஆபரேஷன் செய்ய முடியாது என திரும்ப கொணர்ந்து படுக்கையில் போட்டு, இரத்த அழுத்தத்திற்கு மருந்து கொடுத்தனர். மறுநாளும் இதே கதிதான். அன்று இரவும், மறு தினம் காலை தியேட்டருக்கு எடுத்துச்செல்லும் முன்பும் பாட்ச் மருந்து **மிமுலஸ்** கொடுக்க பயம் சிறிதும் இல்லாமல் இருந்தார். இரத்த அழுத்தம் அதிகமாகாததால் அன்று கண் ஆபரேஷன் வெற்றிகரமாக நடந்தது.

மெட்ராஸில் ஆட்டோ ரிக்ஷாவில் செல்வது என்றாலே எல்லோருக்கும் பயம்தான். குறைந்த தூரத்திற்கு வரமாட்டான். அல்லது பத்து கொடு, இருபது கொடு என்பான். ஆட்டோ பிடிப்பதற்கு முன்பு நீங்கள் ஒரு டோஸ் **மிமுலஸ்** சாப்பிட்டுவிட்டு போய் பாருங்கள். டிரைவர் மரியாதையாக பேசுவான். மீட்டருக்கு மேல் கேட்கமாட்டான்.

ஏழைகளுக்கு: ஒவ்வொரு மாதக் கடைசியிலும் கடன் வாங்கும் அல்லது மனைவியின் நகையை அடகுவைக்கும் மாத இறுதி பற்றுக்குறை பட்ஜெட் நபர்கள் **சிக்கரி** என்ற மலர் மருந்தை வாரம் இருதடவை சாப்பிட்டு வர ஓய்வு நேரத்தில் வேலை (அல்லது சொந்த தொழில்) செய்தோ அல்லது வேறு வேலை கிடைத்தோ பற்றுக்குறை இல்லாமல் பார்த்துக் கொள்வர். எல்லோரும் **சிக்கரி** சாப்பிட அதிகம் சம்பாதிக்க முடியாது. ஒவ்வொரு மாதக் கடைசியிலும் கடன் வாங்கும் நபருக்கு மட்டுமே **சிக்கரி** உதவும்.

பில் கலெக்டர்கள், பாக்கி வசூல் செய்ய செல்லும்போதும், நன்கொடை வசூலிக்க புறப்படுமுன்பு **சிக்கரி** சாப்பிட்டு செல்ல வெற்றி யுடன் திரும்பலாம். "எக்ஸ்க்யூஸ்மி"க்கள் (வீடு வீடாக செல்லும் சேல்ஸ்மேன்) சாப்பிட வேண்டிய மருந்து **சிக்கரி**

உங்களுக்கு வர வேண்டிய பாக்கி வசூல் செய்ய புறப்படும் முன்பு **சிக்கரி** சாப்பிட்டு செல்லுங்கள்.

உங்கள் கணவர் 'சின்ன வீடு' வைத்திருக்கிறாரா? அவர் குடிக்கும் தண்ணீரில் **சிக்கரி** என்ற மலர் மருந்து கலந்து வைக்க சின்ன வீட்டை விட்டு விடுவார். (ஆனால் திருமணமாகியும் பல பெண்கள் பின்னால் சுற்றுபவனுக்கு வால்நட்.)

## டாக்டர் எட்வர்டு பாட்ச் கண்டு பிடித்த முப்பத்தெட்டு மலர் மருந்துகளின் மிக முக்கியமானதும் அதிக உபயோகமுள்ளதுமான மற்றொரு மலர் மருந்தின் பெயர் ஸ்வீட் செஸ்ட்நட்

இம்மருந்து நமக்கு அதியற்புதங்களை நிகழ்த்தக் கூடியது.

1. உயிருக்கு ஆபத்தான நிலையில் தீவிர சிகிச்சை பிரிவில் (intensive care unit) 'இப்போது ஏதும் சொல்ல முடியாது' என்று நோயாளி பற்றி டாக்டர்கள் கைவிட்ட கேசுகளில் (மூளையில் இரத்தப்பெருக்கு, மூன்றாவது ஹார்ட் அட்டாக் போன்றவை) நோயாளியின் நெருங்கிய உறவினர்/நண்பர்கள் கீழ்க்கண்ட நான்கு மருந்துகளையும் சேர்த்து (2 - 4 மணிக்கோர் தடவை) சாப்பிட்டு வர, நோயாளி விரைவில் குணமாகி வீடு திரும்பி விடுவார்:

ரெட் செஸ்ட்நட், ராக் ரோஸ், ஸ்வீட் செஸ்ட்நட், கார்ஸ்.

எமது 2 நாள் நேர்முக வகுப்பில் பாட்ச் மலர் மருத்துவம் கற்ற பலரது அனுபவம் இது. டாக்டர் பிரபா இராமதுரை [A-4, 5-வது மாடி, சில்வர் பார்க் அபார்ட்மெண்ட்ஸ், 36, தணிகாசலம் ரோடு, (இந்தி பிரச்சார சபா எதிரில்) தி. நகர், சென்னை-17, போன் : 24338505] சொல்கிறார்: என்னிடம் வந்த ஒரு முஸ்லிம் பெண்மணி, அவரது கணவனுக்கு மூன்றாவது ஹார்ட் அட்டாக் வந்து தீவிர சிகிச்சை பிரிவில் இருப்பதாகவும், அவரைக் காப்பாற்ற நான் ஏதாவது செய்ய முடியுமா என கேட்டாள். அவருக்கு மருந்து தர இயலாது எனவும் ஆனால் (தன் கணவனைப் பற்றி அக்கறைப்படும்) அவளுக்கு *ஸ்வீட்செஸ்ட்நட், ரெட்செஸ்ட்நட், ராக் ரோஸ், கார்ஸ்* கொடுத்து இவற்றை அவள் தினம் 3 வேளை சாப்பிடுவதால், அவள் கணவன் பிழைத்து விடுவான் என சொல்லி அனுப்பினேன். இவள் இவ்வாறு சாப்பிட, மறு தினமே தீவிர சிகிச்சைப் பிரிவில் அட்மிட் ஆகியிருந்த கணவன் டாக்டர்களே ஆச்சர்யப்படும் விதத்தில் உடல் தேறி வார்டுக்கு மாற்றப்பட்டு அதற்கு மறு தினம் வீட்டிற்கே வந்துவிட்டார்.

உயிருக்கு ஆபத்தான விபத்து, வியாதிகளை கொடுக்கும் கொடூர மனம் படைத்தவர் அல்ல கடவுள் !

2. உங்கள் குழந்தையை கடத்திச் சென்று, பணம் கேட்டு எவனுவது மிரட்டினுல் நீங்களும், உங்கள் குடும்பத்தில் உள்ள அனைவரும் தினம் 3 வேளை *ரெட் செஸ்ட்நட், ராக் ரோஸ், ராக் வாட்டர், சிக்கரி, கார்ஸ்* சாப்பிட்டு வந்தால் பணயத் தொகை (ransom) ஏதும் கொடுக்காமல் குழந்தை வீட்டிற்கு வந்துவிடும். (கொடூரக்காரர்களை அடக்க நாம் சாப்பிட வேண்டிய மலர் **ராக் வாட்டர்**)

3. உங்கள் கணவன்/மனைவி குழந்தை பயணம் செய்துகொண்டிருக்கும் விமானம் கடத்தப்பட்டுவிட்டதா? அவர்கள் சீக்கிரம் விடுதலையாகி பத்திரமாக வீடு திரும்ப நீங்கள் சாப்பிடவேண்டிய மலர் மருந்துகள் *ரெட் செஸ்ட்நட், ராக் ரோஸ், ராக் வாட்டர், சிக்கரி, கார்ஸ்.*

4. திருமணத்திற்கும் இம்மருந்துக்கும் நிறைய தொடர்பு உண்டு.

வயது வந்த பெண்ணிற்கு திருமணம் செய்ய நினைக்கும் பெற்றோர்கள் ஸ்வீட் செஸ்ட்நட் மற்றும் புதிய பாட்ச் மலர் மருந்து சுரபா காலை, மாலை இம்மருந்து இரண்டு மாத்திரை சாப்பிட்டுவர 1-2 மாதங்களில் "உங்கள் பெண்தான் வேண்டும், வரதட்சணை வேண்டாம்," என நல்ல குணம் அமைந்த, நிறைய சம்பாதிக்கும் பையனின் பெற்றோர்கள் வலிய வந்து பெண் கேட்பார்கள். திருமணங்கள் சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படுகின்றன. பெண்ணிற்கு வரன் தேடி வீடுவீடாக ஏறி சென்று 'என் பெண்ணை பார்க்க வாருங்கள்' என நமது சின்ன மூளையை உபயோகித்து செயல்படுவதால், சொர்க்கம் செய்யும் வேலைக்கு நாமே தடங்கல் செய்து விடுகிறோம். அதனுல்தான் பல கேசுகளில் சரியில்லாத பையன்களுக்கு பெண்ணை திருமணம் செய்து கொடுத்து, பெற்றோரும் அப்பெண்ணும் காலம் பூராவும் கஷ்டத்தில் நொந்து போகின்றனர்.

எமது 4-நாள் நேர்முக பாட்ச் மலர் மருத்துவம் வகுப்பில் பயின்ற திருமதி கமலா முகுந்தன் ('சுதர்ஸன் வில்லா', 40/12, இராமசந்திரா ரோடு, நேரு நகர், குரோம்பேட்டை) சொல்கிறுர்: "30-8-2001 அன்று எனது ஒரே பெண்ணிற்கு திருமண தேதி நிச்சயிக்கப் பட்டிருந்தது. இதற்கு ஆறு வாரம் முன்பிருந்தே தினம் ஒரு வேளை நான் *ஸ்வீட் செஸ்ட்நட்* சாப்பிட்டு வந்தேன். இரண்டு வாரம் கழித்து எனது நெருங்கிய உறவினர் இரண்டு இலட்சம் ரூபாய் கல்யாண செலவிற்கு எனக்கு கொடுத்தார். இதேபோல் அடுத்த வாரம் வேறு ஒருவரிடமிருந்து இரண்டு இலட்சம் வந்தது. இதை நான் சற்றும் எதிர்பார்க்கவில்லை.

மணமாலை விளம்பரம், ஜாதக பரிவர்த்தனை கேந்திரம் போன்ற மனிதன் உண்டாக்கியவற்றை அம்மை நோயை வெறுப்பது போல் வெறுக்க வேண்டும். என்கிறுர் மேதை எமர்சன்.

ஜேப்படிக்காரனின் படம், வயது, உயரம், நிறம் ஆகிய விபரங்களைத்தான் பத்திரிக்கையில் போடுவார்கள்.

ஆனுல் திருமணம் என்ற புனித வைபவத்தை மனிதன் கொச்சைப்படுத்தி விட்டான்.

*ஸ்வீட் செஸ்ட்நட்* சாப்பிட திருமணம் எப்படி நடக்கும் தெரியுமா?

திருமணத்திற்கு வந்திருக்கும் ஒவ்வொருவருக்கும் ஆயிரம் ரூபாய்க்கு குறையாமல் பணமோ, பொருளோ, பரிசாக பெண்ணின் தகப்பனார் கொடுக்கும் அளவுக்கு அவருக்கு பணம் வரும் (நாம் நினைக்கும் விதத்தில் அல்ல).

*மலர் மருந்துகள் உபயோகிப்பவர்களின் மாதாந்திரக் கூட்டம் பிரதி மாதம் இரண்டாவது சனிக்கிழமை மாலை 5.30 முதல் 7.30 மணி வரை கோடம்பாக்கம் நயாகரா ஹோட்டலில் நடைபெறுகிறது.*

*வருடாந்திர அங்கத்தினர் கட்டணம் ரூ.1800 (ஜனவரி -டிசம்பர்). வருடத்தின் இடையில் சேருபவர்களும் இதே கட்டணம் தான் செலுத்த வேண்டும்.*

*அங்கத்தினர் அனுபவங்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன:*

இந்த சங்கத்தில் உறுப்பினராக உள்ள திருமதி பிரபா இராமதுரை (A-4, 5-வது மாடி, சில்வர் பார்க் அபார்ட்மெண்ட்ஸ், 36, தணிகாசலம் ரோடு, (இந்தி பிரச்சார் சபா எதிரில்) தி. நகர், சென்னை-17, போன் : 24338505) சொல்கிறார்: "திருமண வயதிற்கு வந்த என் பெண் பற்றி நினைத்து நான் தினம் இருவேளை *ஸ்வீட் செஸ்ட்நட்* என்ற மலர்மருந்து சாப்பிட்டு வந்தேன். ஒரு மாதத்தில் அவளுக்கு (கிடைப்பதற்கரிய) இலண்டன் ஸ்கூல் ஆஃப் எகனாமிக்ஸ்-ல் அட்மிஷன் கிடைத்தது. இதன் பின்பு மூன்றே நாளில் ஒரேயொரு இடம் அமைந்தது. தவிர வரதட்சணை ஏதும் வேண்டாம் எனக்கூறி பையன் வீட்டுக்காரர்கள், திருமணத்திற்கு பின்பு என் பெண்ணை இலண்டனுக்கு படிக்க அனுப்பி அதற்கான கட்டணம் இருபது இலட்ச ரூபாயையும் அவர்களே செலவு செய்வதாகச் சொன்னார்கள்.

இதுபோல், பல பையன்கள் வந்து பெண் பார்க்காமல் ஒரேயொரு இடம் வந்து அது நிச்சயம் ஆனதாக "*ஸ்வீட் செஸ்ட்நட்*" சாப்பிட்ட பல வாசகர்கள் எமக்கு நேரிலும், கடிதம் மூலமாகவும் தெரிவித்துள்ளனர்.

பிரார்த்தனை செய்யுமுன் ஒரு டோஸ் *ஸ்வீட் செஸ்ட்நட்* சாப்பிட நமது பிரார்த்தனை நிறைவேறுகிறது என சாலிக்கிராமத்தில் உள்ள திருமதி விஜயலட்சுமி சொல்கிறார். கோயில், சர்ச், மசூதிக்கு செல்லுமுன் இம் மருந்து ஒரு டோஸ் சாப்பிட்டு சென்று பாருங்கள்.

Nature constantly works towards perfection.

More servants wait on man than he will take notice of.

Nature's ways cannot be improved.

Nature hates our tricks. (Emerson)

இவை தான் வேத வாக்கியம்.

உனக்கு நேரமிருந்தால், ஆங்கிலம் படிக்கத் தெரிந்தால் எமர்சன் எழுதியவற்றைப் (*Essays* by Ralph Waldo Emerson) படித்து உன் வாழ்க்கைத் தரத்தை உயர்த்திக் கொள்ளலாம். .

'துக்ளக்', 'மண்டு' போன்ற பத்திரிகைகள் அவனவன் வயிற்றுப் பிழைப்புக்காக வெளியிடுகிருன். அவற்றைப் படித்தால் நமக்கு இருக்கும் சிறிது மூளேயும் மழுங்கி விடும்.

எமர்சன் நம் எல்லோருக்காகவும்தான் எழுதினுர்.

# செஸ்ட்நட்பட் (Chestnutbud)

டாக்டர் எட்வர்டு பாட்ச் கண்டு பிடித்த முப்பத்தெட்டு மலர் மருந்துகளில் 'செஸ்ட்நட்பட்' என்பது ஒரு மருந்தின் பெயர்.

ஒற்றை இலக்கத்தில் மதிப்பெண் வாங்கும் பள்ளி மாணவ மாணவியர் களுக்கு இது உபயோகமாகும்.

ஒவ்வொரு பாடத்திற்கும் தனித்தனியாக 'ட்யூஷன்' வைத்தும், இது தவிர, பெற்ருேர்கள் சொல்லிக் கொடுத்தும் பாடங்களேக் கற்றுக்கொள்ள முடியாமல் (slow learning) இருப்பவர்களுக்கு இம்மருந்து கொடுக்கப்பட வேண்டும். வேளேக்கு இரு மாத்திரை வீதம் தினம் ஒரு வேளே சுவைத்து சாப்பிட வேண்டும். 2-4 வாரங்கள் கழித்து நன்ருக படிக்க ஆரம்பித்து விட்டால் இரண்டு தினத்திற்கு ஒரு தடவை படிப்படியாக மருந்தை குறைத்துக் கொள்ளலாம். ஒரு குறிப்பிட்ட பாடத்தில் பெயிலாகும் மாணவர்களுக்கும் இதே மருந்துதான்.

'ட்யூஷன்' வைத்தும் மண்டையில் ஏருதவர்களே 'மக்கு' 'மண்டு' என திட்டுகின்றனர். சில ஆங்கில வார்த்தைகளே தெரிந்து கொண்ட நபர்கள் அம்மாணவர்களுக்கு புரிந்து கொள்ளும் சக்தி குறைவாக இருப்பதாக "low i. q.' (intelligence quotient) என சொல்வர். இது தவறு.

எவ்வளவு தடவை தானே படித்தாலும் அல்லது பிறர் சொல்லிக் கொடுத்தாலும் கூட, புரிந்து கொள்ளாமலும் மண்டையில் ஏருமலும் இருப்பது 'முட்டாள்தனத்தினுலோ', 'மந்த புத்தியினுலோ' அல்ல. Low I.Q. **என்ற ஒன்று கிடையவே கிடையாது**. கவனக்குறைவு, அசிரத்தை, அலட்சியம், அக்கறையின்மை, ஆகியவற்ருல்தான் இவ்வாறு ஆகிவிடுகிறது. **கவனக்குறைவு, அசிரத்தை** இவற்றை நீக்குவதே இம்மருந்தின் வேலே. படிக்க வேண்டும் என்ற 'வெறி'யை உற்பத்தி செய்வது அல்ல.

இம்மருந்தைத் தொடர்ந்து சாப்பிடுவதால் பின் விளேவு ஏதும் ஏற்படாது. ஓரிரு மாதம் கொடுத்த பிறகு நிறுத்தி விடலாம். மறுபடியும் படிப்பில் ''டல்''லடிக்க ஆரம்பித்து விட்டால் மருந்தைத் தொடரலாம்.

ஒரு மாணவனுக்கு இரண்டு மாதம் கொடுத்து நிறுத்திய பின்பு மறுபடியும், தொடர்ந்து மருந்து கொடுக்காமலேயே இரண்டு வருடம் வரை நன்ருகப் படித்தான். ஆகையால் ஓரிரு மாதம் கொடுத்தபின் மருந்தை நிறுத்தி மறுபடியும் தேவைப்பட்டால் மட்டுமே கொடுக்கலாம்.

ஒவ்வொரு பாடத்துக்கும் தனித்தனியாக 'டியூஷன்' வைத்தும் மதிப்பெண் குறைவாகவே வாங்குவதாக ஒருவர் பத்து வயதான தன் பையனைப் பற்றி கவலையுடன் சொன்னார். இம்மருந்து ஒரு பாட்டில் கொடுத்து பையனுக்கு தினம் மூன்று வேளை கொடுக்கச் சொன்னேன்.

இரண்டு மாதம் கழித்து வந்த அவர் ''அதே மருந்து இன்னும் இரண்டு பாட்டில் கொடுங்கள்'' என்று சொன்னார். இப்போதெல்லாம் ''டியூஷனே வேண்டாம், நானாகவே படித்து நல்ல மார்க்குகள் வாங்கி விடுவேன்'' என்கிறானாம். நிறைய மார்க்குகள் வாங்கி வருவதாகவும் சொல்லிச் சென்றார்.

அப்படி எனில் எல்லா மாணவர்களுக்குமே நிறைய மார்க்குகள் வாங்க இம்மருந்து ஒன்றே போதும் என முடிவுகட்டுவது தவறு. மிக மிக குறைந்த மதிப்பெண்கள் வாங்கும் மாணவர்கள் பலரிடம் **செஸ்ட்நட்பட்** மருந்தின் மனநிலை காணப்படுவதால் இதுபற்றி முதலில் சொன்னோம். 'ட்யூஷன்' வைத்தும் மண்டையில் ஏறாதவர்களுக்கு மட்டுமே **செஸ்ட்நட்பட்**.

**செஸ்ட்நட்பட்** இல்லாமல் வேறு மலர் மருந்துகள் தேவைப்படும் மாணவர்களும் உண்டு. அவற்றை கீழே பார்ப்போம்.

பாடங்களை அன்றாடம் படிக்காமல், ஊர் சுற்றிக் கொண்டும் விளையாட்டிலே சதா கவனம் செலுத்திக் கொண்டும் உள்ள சோம்பேறிகளுக்கு ஏற்ற மருந்து **ஸ்க்ளெரான்த்தஸ்**. 'நாளை படித்துக் கொள்ளலாம்', 'அப்புறம் படித்துக் கொள்ளலாம்', அல்லது பரீட்சைக்கு படிக்க லீவு விடுவார்கள்; அப்போது படித்துக் கொள்ளலாம் என்று ''தள்ளிப்போட்டுக்கொண்டேயிருக்கும்'' மனப்பான்மைக்கும் ஏற்ற மருந்து **ஸ்க்ளெரான்த்தஸ்**. இவர்கள் காலையில் 'லேட்'டாக, அதுவும் எழுப்பிவிட்டால்தான் எழுந்திருப்பார்கள். தவிர இம்மருந்து தேவைப்படும் சில மாணவர்கள் புத்தகத்தை எடுத்து வைத்துக்கொண்டு படிக்க ஆரம்பித்தவுடன் கொட்டாவி வந்து தூங்கி வழிவர். (ஆனால் கதைப்புத்தகம் எனில் எவ்வளவு பக்கம் படித்தாலும் தூக்கம் வராது).

தொலைக்காட்சி பெட்டியில் சினிமா, 'ஒலியும் ஒளியும்' மற்றும் டிராமாக்கள் எவ்வளவு பார்த்தாலும் ஜாலியாக இருக்கும். பாட புத்தகம் எனில் தொட மாட்டான். இவ்வாறு தேவையில்லாத ஜாலியான விஷயங்களில் அதிக ஈடுபாடும், தேவையுள்ள (புத்தகப்படிப்பு) விஷயத்தில் அக்கறையின்மையும் உள்ள சோம்பேறிகளுக்கு ஸ்க்ளெ ரான்த்தஸ் கொடுக்கப்பட வேண்டும். இவர்களுக்கு **செஸ்ட்நட்பட்** உதவாது.

**ஸ்க்ளெரான்த்தஸ்** தேவைப்படும் நபர் புத்தகத்தை தொடவே மாட்டார்.

நன்றாக படித்து நிறைய மார்க்குகள் வாங்காத மாணவரின் மன நிலைமை என்னவென்று பார்த்து அதற்கேற்ற, பொருத்தமான மருந்து கொடுத்தால் தான் நிறைய மார்க்குகள் வாங்குவான்.

இவ்வாறு இரு மருந்துகளுக்கு இடையே உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை புரிந்து கொள்ள சக்தியில்லாத சில வாசகர்கள், மேற்சொன்ன இரண்டு மருந்துகளையும் சேர்த்தே கொடுத்து விடுகிறார்கள். இவ்வாறு கலந்து கொடுப்பதால் சில கேஸில் வேலை செய்யும். பல கேஸில் வேலை செய்யாது. மேற்சொன்ன இரு மருந்துகளையும் தனித் தனியாகவும், சேர்த்துக் கொடுத்தும் தன் பையனுக்கு பலனளிக்காததால் அவரது தகப்பனார் என்னிடம் வந்து, "இம்மருந்துகள் சில கேசுகளில் வேலை செய்யாதா?" எனக் கேட்டார்.

பையனின் மனப்பான்மை என்ன என்பதை தெரிந்து அதற்கு பொருத்தமான மருந்து கொடுத்தால்தான் பலன் உண்டு என அவரிடம் கூறி அவரது பையனை அழைத்து வரச்சொல்லி, அவன் வந்ததும் "நீ ஏன் பரீட்சையில் பெயிலாகி விட்டாய்?" எனக்கேட்டேன். "என் வாத்தியார் சரியாகவே சொல்லி கொடுக்கவில்லை. புரியும்படியாக சொல்லித்தர தெரியாதவன்கள் எல்லாம் வாத்தியார் வேலைக்கு வந்து என் கழுத்தை அறுக்கறான்கள்" என்று பதில் சொன்னான்.

"தன் தவறுகளுக்கு மற்றவர்கள் மீது குற்றம் சுமத்துதல், குறை கூறுதல்" ஆகிய மனநிலைக்கு ஏற்ற மலர் மருந்து **வில்லோ**. இம்மருந்தை ஒரு பாட்டிலில் இவனுக்கு தினம் 2-3 வேளை சாப்பிடச் சொல்லி கொடுத்தனுப்பினேன். அடுத்த பரீட்சையில் அவன் நல்ல மார்க் எடுத்து பாஸ் செய்தான்.

'மனநிலை' என்றால் மனோதத்துவம் அல்லது சைக்காலஜி தெரிந்திருக்க வேண்டும் என வாசகர்கள் தயவு செய்து நினைக்க வேண்டாம். ஒரு **நபரின் வாயிலிருந்து வரும் வார்த்தைகளே அவருக்கு தேவையான மருந்தை** நமக்கு காட்டிக் கொடுத்துவிடும்.

'இம்பேஷன்ஸ்' என்பது அடுத்த ஒரு மலர் மருந்தின் பெயர்.

நீங்கள் குடியிருக்கும் வீட்டை, அதன் உரிமையாளர் ஒரு வாரத்தில் காலி செய்யச் சொல்கிறார் என வைத்துக் கொள்வோம்.

ஒரே வாரத்தில் வீடு கிடைக்க நான் பலரிடமும் சொல்லி, புரோக்கர் பின்னால் அலைந்து படா பேஜார் தான். இந்த நேரத்தில் பெங்களூரிலிருந்து எனது நண்பன் முக்கிய விஷயமாக எனக்கு போன் செய்யும் போது கூட அவனிடமும் சென்னையில் அவனுக்கு தெரிந்த நண்பர் இருந்தால் அவர்களிடமும் எனக்கு வீடு பார்க்க சொல்லும்படி கேட்பேன்.

வீடு என்றால் ஏதோ ஒரு வீடு அல்ல. (ஏனெனில் வில்லிவாக்கம், கொரட்டூர் போன்ற புறநகர்ப் பகுதிகளில் தான் உடனடியாக வீடு கிடைக்கும்)

மயிலை, மாம்பலம் போன்று பிராமணர்கள் வசிக்கும் பகுதியில், அதுவும் தண்ணீர் வசதியுடன், ஒரு இரு அறை கொண்ட குடியிருப்பு (flat)

அதற்காக வாடகையும் மூவாயிரத்திற்கு மேல் போகாமல்...

அதுமட்டுமல்ல.

வீட்டுக்காரர் தொந்தரவு இல்லாமல்...

இப்படிப்பட்ட நிலைமையில் புரோக்கரிடம் செல்ல வேண்டாம். நமது எல்லா உறவினர், நண்பரிடம் வீடு பற்றி பேச வேண்டாம்.

தினம் மூன்று வேளை **இம்பேஷன்ஸ்** என்ற இந்த மலர் மருந்து சாப்பிட்டுவர, யாரோ ஒருவரிடம் மட்டுமே பேசுவோம். நமது தர நிர்ணயத்திற்குட்பட்ட (specification) வீடு மூலமாக கிடைத்து விடும்.

## **ரெட் செஸ்ட்நட்** (Red Chestnut) என்பது மற்றொரு மலர் மருந்தின் பெயர்

Anxiety for others. நமக்கு நெருங்கிய உறவினர்/நண்பரின் நலன்/ பாதுகாப்பு பற்றி அதிக அக்கரையுடன் உள்ள கவலை - தன் நோயாளிகளின் வியாதி சீரியஸாகுமோ என் கவலைப்படும் டாக்டர்கள்

ஒரு குடும்பத்தில் தீராத வியாதியுள்ள ஒரு குழந்தை இருந்தால் அதைப்பற்றி அதிக அக்கறைப்படும் நபர் (அம்மா, அப்பா, சகோதரன், சகோதரி, தாத்தா அல்லது பாட்டி) எவரோ அவருக்கு **ரெட் செஸ்ட்நட்** என்ற மலர் மருந்து கொடுத்து தினம் சாப்பிடச் சொல்லுங்கள். இம் மருந்து சாப்பிடுவதால் கவலைப் படுவதை நிறுத்தி விடுவார்களா என கேட்டால் அதுமட்டும் இல்லை. எங்கு, எந்த வைத்தியரிடம் சென்றால் குணமாகுமோ அந்த இடத்தை ஆட்டோமேடிக்காக தெரிந்து கொண்டு அங்கு சென்று தனது குழந்தையை சரி செய்து விடுவர். இதைத்தான் மறைமுக உபயோகம் (indirect uses) என சொல்கிறோம்.

## **ஹீதர்** (Heather) என்ற மலர் மருந்தின் உபயோகம் பற்றி இப்போது தெரிந்து கொள்வோம்.

நீ ஒருவருடன் பேச செல்வதற்கு முன்பு (இன்டர்வ்யூ) அல்லது ஒரு வீட்டு சொந்தக்காரரிடம் அவர் வீட்டை நீ வாடகைக்கு கேட்க செல்லும் போது அல்லது பட்டி மன்றம் போன்ற கலந்துரையாடலின் போது (group discussion) அல்லது உனது பையன் படிப்பில் எவ்வாறு உள்ளான் என்று தெரிந்து கொள்ள அவனது பள்ளி ஆசிரியரிடம் பேச செல்லும்போது அல்லது உன் பையனை டைப்ரைட்டிங் இன்ஸ்ட்யூட் அல்லது கம்ப்யூட்டர் வகுப்பில் சேர்க்க செல்லும் போது, அல்லது வங்கியில் கணக்கு ஆரம்பிக்க செல்லும் போது இவ்வாறு ஏதோ ஒரு வேலை நிமித்தம் நீ ஒருவரிடம்/ பலரிடம் பேச செல்வதற்கு முன்பு அல்லது உன்னிடம் எவராவது பேச

வரும்போது, இது மாதிரி சந்தர்ப்பங்களில் அதற்கு 3-12 நேரம் முன்பாக 2-3 டோஸ் (1-2 மணிக்கோர் தடவை) இம்மருந்து இரண்டு மாத்திரை சாப்பிட்டு சென்று பார்.

More servants wait on man than he will take notice of. உன்னால் வேலைவாங்கிக் கொள்ள முடியாமல் நீ திக்கு முக்காடிப் போய் விடும் அளவு உனக்கு வேலை செய்ய மனிதர்கள் காத்திருக்கும் படி நான் செய்துள்ளேன் என்று இயற்கை சொல்வதாக மேதை எமர்சன் சொல்கிறார்.

ஒரு முக்கிய வேலை அல்லது சந்தர்ப்பங்களில் நீ பலருடன் பேச வேண்டியுள்ளது. பலர் உன்னிடம் பேசுகின்றனர்.

இச்சந்தர்ப்பங்களின் போது 3-24 மணி நேரம் முன்பாக 1-3 மணிக்கோர் தடவை 2-3 டோஸ்கள் ஹீதர் என்ற இம்மருந்து சாப்பிட்டு செல்வதால், நீ என்ன (பலன், பணம், உபயோகமுள்ள விஷயம்) எதிர்பார்த்து செல்கிறாயோ, அது போல் 2-5 மடங்கு பணம் அல்லது மதிப்புள்ள விஷயம் தெரிந்து கொள்வாய்.

தனது வீட்டின் முதல் மாடி போர்ஷனை வாடகைக்கு விட தன்னிடம் ஒரு குடுத்தனக்காரர் (tenant) பேச வருவதற்கு முதல் நாளிலிருந்து அந்த வீட்டுக்காரருக்கு ஹீதர் மருந்து 4-8 மணிக்கோர்தடவை மூன்று டோஸ் சாப்பிடச் சொன்னேன். இவ்வாறு சாப்பிட, குடுத்தனக்காரர் வந்து வாடகை, அட்வான்ஸ் என பேச்சு ஆரம்பித்து, சிறிது நேரத்தில் பேச்சு திசை மாறி என்னவெல்லாமோ பேசி, கடைசியில் காக்காய் வலிப்பு நோய்க்கு மூன்றே டோஸ் மருந்தில் குணமாக்கும் (ஒரு கிராமத்தில் உள்ள) நாட்டு வைத்தியர் பற்றி அந்த குடுத்தனக்காரர் விபரமாக பேசினார்.

ஒரு விஷயம் என்னவெனில் மேற்சொன்ன வீட்டுக்காரரின் பெண்ணிற்கு பல வருடமாக காக்காய் நோய் வலிப்பு நோய் இருந்துவந்தது. இதற்காக பல இலட்சம் செலவு செய்து பலனில்லாமல் வெளிநாடு சென்று வைத்தியம் செய்வதாக இருந்தார். மேற்சொன்ன குடுத்தனக்காரர் கூறிய கிராமத்திற்கு சென்று ரூ.750 மட்டுமே செலவழித்து தன் மகளை முற்றிலும் குணப்படுத்திவிட்டார். வெளிநாடு சென்று அங்கு வைத்திய செலவு என்று 2-5 லட்சம் மிச்சமாகியது.

Nature produces in abundance. "இயற்கை அபரிமிதமாக கொடுத்துக் கொண்டே இருக்கிறது" என்று மேதை எமர்சன் எழுதுகிறார். *"எல்லா எழுத்தும் எழுத்தல்ல - மேதை எமர்சன் எழுத்தே எழுத்து"* என்று புதிய குறள் எழுதத்தான் வேண்டும்.

அண்டமெல்லாம் பரவி நிற்கும் இயற்கை தான் நம்மை உண்டாக்கியது. நாம் இயற்கையை உண்டாக்கவில்லை. நேற்று தோன்றி

இயற்கை சொல்கிறது: "நான் கொடுத்த சிறிய மூளையை உபயோகித்து குடுத்தனக்காரராக வரப் போகிறவரிடம் நீ மாதம் சில ஆயிரம் மட்டுமே பெறுவதை மிகப்பெரிய, முக்கியமான விஷயமாக கருதுகிறாய். ஆனால் அவன் வருகை மூலமாக உனக்கு பல லட்ச ரூபாய் மதிப்புள்ள உன் மகளின் வலிப்பு நோய் வெறும் 750 ரூபாயிலேயே சரிசெய்யும் விஷயத்தை அவன் மூலமாக உனக்கு நான் அனுப்பி வைக்கிறேன்.

குறிப்பிட்ட வேலைக்காக செல்வதற்கு ஒருவாரம் முன்பிருந்தே கூட (உனக்கு இவ்வாறு ஒரு இடத்திற்கு சென்று பேசுவதற்கு ஒருவாரம் முன்பே தெரிந்தால், ஒரு வாரம் பூராவும் தினம் ஒரு டோஸ் ஹீதர் சாப்பிட்டு வரலாம்.

எவ்வளவு டோஸ் சாப்பிடவேண்டும் என்பதற்கு சட்டம் ஒன்றும் கிடையாது. 1-2 நாட்கள் முன்பு எனில் தினம் 2-3 வேளை என மொத்தம் 3-5 டோஸ் சாப்பிடு. ஒருவாரம் முன்பு எனில் தினம் ஒரு வேளை அல்லது 2 நாட்களுக்கு ஒரு டோஸ் போதும்.

திரு இரகுராமன் என்பவர் ஸ்டோர்கீப்பர் வேலை இன்டர்வ்யூவிற்கு செல்வதாக இருந்த போது (2 நாட்களுக்கு முன்புதான் இது தெரியவந்ததால்) அவருக்கு தினம் 2 டோஸ் என கொடுத்தேன். இன்டர்வ்யூ செய்யும் கமிட்டியில் உள்ள நபர் (இண்டர்வ்யூ நடக்கும்போது) இவருக்கு நிறைய கல்வி தகுதிகள் இருப்பதால் தனக்கு தெரிந்த வேறு ஒரு கம்பெனிக்கு இதைவிட நல்ல சம்பளம் கிடைக்கக் கூடிய வேலைக்கு தானே சிபாரிசு செய்து அனுப்ப, அங்கு போய் வேலைக்கு சேர்ந்தார். முதல் இடத்தில் ஸ்டோர் கீப்பர் வேலைக்கு சம்பளம் ரூ.4800 மட்டுமே. ஆனால் 2-வது இடத்தில் ரூ.7500 சம்பளம்.

வாசகர்களே! மேற் சொன்னவை உண்மை சம்பவங்களே.

மறக்காதீர்கள். More servants wait on man than he will take notice of. Nature produces in abundance. Nature constantly works toward perfection. Nature's ways cannot be improved upon. Nature hates our tricks. எமர்சன் எழுத்துக்கள் தான் மனிதர்களுக்கு வேத வாக்கியம்.

இந்த உண்மையை அனுபவ பூர்வமாக தெரிய, அறிய ஹீதர் சாப்பிட்டுப் பார்! 200 மாத்திரைகளடங்கிய 5 மில்லி புட்டி விலை ரூ.30. வேறு அளவுகளில் கிடைக்காது.

**'பைன்' என்ற மலர் மருந்து ஒரு டோஸ் இரவு படுக்கு முன்பு சாப்பிட, மறுதினம் காலே 4-6 மணிக்குள் தோன்றும் எண்ணம்/கனவில் நாம் செய்ய வேண்டிய பரிகாரம் என்ன என்று புலப்படும். எப்பேர்ப்பட்ட ஜோஸியராக இருந்தாலும் பரிகாரம் சொல்லத் தெரியாவிட்டால் அவர் சரியில்லே. பரிகாரம் தெரிவதற்குத்தான் ஜோஸ்யரிடம் செல்கிரேம். பைன் என்ற மலர்மருந்து நமக்கு சரியான பரிகாரம் சொல்லும். இதே போல் எதிர்காலம் பற்றி தெரிய என்ன மலர் மருந்து? ஒரு டோஸில் பலன் இல்லாவிட்டால் ஒரு தினம் விட்டு ஒரு தினம் இரவு படுக்குமுன்பு பலன் கிடைக்கும் வரை பைன் என்ற மலர் மருந்து தொடர்ந்து சாப்பிட்டு வா.**

---

இனி தினசரி வாழ்க்கையில் உபயோகமாகும் சில மலர் மருந்துகளேப் பற்றி பார்ப்போம்.

## வாட்டர் வயலட் (WATER VIOLET)

மனித மூளையை உபயோகித்து உண்டாக்கப்பட்டு செயல்படும் அலுவலகங்களில் தினம் 8 மணி நேரம் என 30 நாட்கள் ஒழுங்காக, மேலதிகாரிகளிடம் மரியாதையாக நடந்து வேலே செய்தால் 1-ம் தேதி சில ஆயிரம் பெறலாம். வருடம் பன்னிரண்டு மாதங்களும் தொடர்ந்து வேலே செய்தால் ஒரு சில அலுவலகங்களில்/தொழிற்சாலேகளில் 1-3 மாத போனஸ் மட்டுமே உண்டு.

ஆனுல் கடவுளால் உண்டாக்கப்பட்ட பண்டிகைகளே வருடத்தில் ஒரேயொரு தினம் மட்டுமே சரியாக, முறையாக, மரியாதை, பயபக்தியுடன் கொண்டாடுவதால் அடுத்த சில மாதங்களில் ஒரு வருட வருமானம் முழுவதும் நமக்கு கிடைக்கும். எவ்வளவு சிறப்பாக, சரியாக, பயபக்தியுடன் பண்டிகையை கொண்டாடினுலும் எவருக்கும் ஒரு வருட வருமானத்திற்கு சமமான பணம் கிடைத்ததாக தெரியவில்லேயே எனில், இதற்கு காரணம் எவருக்கும் ஒவ்வொரு பண்டிகையையும் கொண்டாடும் சரியான விதம் தெரியாமல் போய் விட்டதுதான். ஒவ்வொரு பண்டிகைக்கும் ஒரு வாரம் முன்பும், பின்பும் பண்டிகை தினத்தன்றும் 1-2 டோஸ் வாட்டார் வயலட் என்ற மலர் மருந்து சாப்பிட, இந்த குறை நீங்கி விடும்.

பண்டிகைக்கு ஒரு வாரம் முன்பும், பின்பும் பண்டிகையன்றும் 1-2 டோஸ் வாட்டர் வயலட் என்ற மலர் மருந்து சாப்பிட்டு அடுத்த சில மாதங்களில் நீங்கள் ஒரு வருடத்தில் சம்பாதிக்கும் பணம் உங்களுக்கு கிடைக்கிறதா, இல்லேயா என்று பாருங்களேன்.

பண்டிகை என்பது வருடத்தில் ஒரு தடவை கொண்டாடப்படுவது.

வாழ்க்கையில் எப்போதோ ஒரேயொரு தடவை நமக்கு (முன் அனுபவம் இல்லாத) நிகழக்கூடிய சந்தர்ப்பங்களின் போது, உதாரணமாக வீடு வாங்கி தன் பெயரில் ரிஜிஸ்தர் செய்வது வாழ்க்கையில் ஒரேயொரு தடவை. அதன்பின் ரிஜிஸ்ட்ரார் ஆபீஸ் பக்கம் தலை கூட வைத்து படுக்க மாட்டான்.

வீடு கட்ட/வாங்க முயற்சி செய்த நாளிலிருந்து வாரம் மூன்று தடவை (செவ்வாய், புதன், சனி) வாட்டர் வயலட் (இத்துடன் 'சுரபா' என்ற புதிய பாட்ச் மலர் மருந்து ஞாயிறு, வியாழன், காலை, மாலை 2 மாத்திரை) வீடு ரிஜிஸ்டர் ஆகும் தேதி வரை சாப்பிட்டு வா. எவ்வளவு இலட்சம் செலவழித்து வீடு வாங்கினாயோ, அந்த அளவு பணம் உனக்கு அடுத்த ஒரு வருடத்தில் ஏதோ ஒரு வழியில் (நீ நினைக்கும் வழியில் அல்ல) கிடைக்கும்.

வீடு கடன் வசதி மையங்கள் இழிந்த (negative) வாட்டர் வயலட்டின் தன்மை.

'நோய்' என்பது நமக்கு வாழ்க்கை என்ற பயணத்தில் ஒரு கைகாட்டிதான். இந்த கைகாட்டியை பார்க்க, 'பிரேக்' போட்டு வண்டியை நிறுத்த வேண்டும். (அதாவது படுக்கையில் விழுந்து கிடக்கிறான்). "இதுவரை நீ வந்த பாதையை (செய்த தொழில், வாழ்க்கை கண்ணோட்டம்) விட இப்பொழுது உனக்கு வேறு நல்ல சிறந்த (5 மடங்கு வருமானம் உள்ள) பாதையை தெரிந்து கொள்" என்று சொல்கிறது இயற்கை. நோயுற்ற போது வாட்டர் வயலட் சாப்பிட்டுப் பார்த்தால்தான் இத தெரிய வரும். இல்லாவிட்டால், 'ஐயோ, வைத்திய செலவு மற்றும் loss of pay" என்று உளறுவான்.

E.S.I. (Employees State Insurance), health insurance ஆகியவை வாட்டர் வயலட்-ன் இழிந்த (நெகடிவ்) தன்மைகளாகும்.

ஆனால் நீ health insurance ஏதும் செய்யாமல் உனக்கு மாரடைப்பு நோய் வந்து ஆசுபத்திரியில் இருக்கும் நாட்களில் தினம் 1-2 வேளை வாட்டர் வயலட் என்ற மலர் மருந்து சாப்பிட்டு வர, விரைவில் ஆஸ்பத்திரியில் செலவு, மன உளைச்சல், loss of pay ஆகிய எல்லாவற்றிற்குமாக சேர்த்து உனக்கு பணம் கிடைத்து விடும்.

ரெகுலராக இல்லாமல் ஏதோ ஒரு சந்தர்ப்பத்தில் மட்டுமே ஆசுபத்திரி, டாக்டர் எல்லாம். தேவையில்லையெனில் அங்கு தலை வைத்துக்கூட படுக்க மாட்டோம். ஏதோ, எப்போதோ டாக்டர், ஆஸ்பத்திரி போகும் நாட்களில் நோய்வாய்ப்பட்டு படுக்கையில் இருக்கும் போது Water Violet சாப்பிட்டு பார்.

திருமணம் என்பது வாழ்க்கையில் ஒரேயொரு தடவை என்றாலும் அது ஸ்வீட் செஸ்ட்நட் (கடவுள் அனுக்கிரஹம்) சம்பந்தப்பட்டது. அங்கு Water Violet உதவாது.

நாடி ஜோதிடம், நியூமராலஜி (பெயர் மாற்றம் செய்து கொள்வது) நவரத்தினக்கல் வாங்கி அணிவது போன்றவை **வாழ்க்கையில் ஒரேயொரு தடவைதான் செய்கிறோம்.** இதற்கு முன் வாட்டர் வயலட் சாப்பிட்டுப் பார். நாடி ஜோதிடம் 99 சதவிகிதம் ஏமாற்றுக்காரர்கள் தான். வாட்டர் வயலட் சாப்பிட இந்த ஏமாற்றுக்காரர்களிடம் மாட்டிக் கொள்ள மாட்டாய்.

வாட்டர் வயலட் (பண்டிகை தினத்தில் சாப்பிட) எப்படி ஒரு வருட வருமானம் கொடுக்குமோ, அதே போல் சைனீஸ் ஜேட் என்ற இரத்தினம் அணிந்து வர உனக்கு ஒரு வருட வருமானம் அல்லது அதற்கீடான அதிர்ஷ்டம் நிச்சயம் உண்டு.)

## ராக் ரோஸ் (ROCK ROSE)

அக்டோபர் (2002) மாதம் முழுவதும் தினம் ஒரு வேளை எமது கிளப் அங்கத்தினர்கள் சுமார் இருபத்தி ஐந்து நபர்கள் ராக் ரோஸ் என்ற மலர் மருந்து சாப்பிட்டு குடிநீர் பஞ்சம் தலை விரித்தாடிய சென்னை மாநகரில் 30 மற்றும் 31-10-2002 ஆகிய இரு நாட்களில் தொடர் மழை (பலர் வீட்டு கிணறுகள் நிரம்பி வழியும் அளவுக்கு) பெய்ய வைத்தோம். இது பல கோடி ரூபாய் மதிப்புள்ளது.

உங்கள் ஊரில் மழை இல்லையா? குடி தண்ணீருக்குக்கூட பல கிலோ மீட்டர் சென்று தண்ணீர் எடுத்து வர வேண்டிய அளவு வறட்சியா? சர்வமத பிரார்த்தனை நடத்துவதை விட, வருண ஜபம் செய்வதை விட, நெய்வேலியிலிருந்து லாரி லாரியாக தண்ணீர் கொண்டு வருவதை விட, ஏழு மணி நேரம் உண்ணாவிரதம் இருப்பதை விட (இந்த கண்றாவியை படம் பிடித்து பக்கம் பக்கமாக போட்டு, பத்திரிக்கைகாரன் வயிறு கழுவுவது அதை விட கண்றாவி) மழை இல்லாத உங்கள் ஊரில் 50-100 நபர்கள் தினம் ஒரு வேளை ராக் ரோஸ் என்ற மலர் மருந்து தொடர்ந்து 20-30 தினம் சாப்பிட, மழை கொட்டோ கொட்டு என்று கொட்டும். "கர்நாடகாவிடம் ஏண்டா கையேந்தறீங்க?" என்று கேட்கிறது இங்கிலாந்து காடுகளில் மட்டுமே காணப்படக்கூடிய ராக் ரோஸ் என்ற மலர்.

---

**இங்கிலாந்து மலர் மருந்துகள் என்ற பன்னிரண்டு பாகங்கள் அடங்கிய தமிழ் புத்தகம் தபாலில் பெற ரூ, 300 மணியார்டர் செய்க. தபால் செலவு இலவசம். வி.பி.பி. இல்லை. மணியார்டர் அனுப்ப வேண்டிய முகவரி: டாக்டர் கிருஷ்ணமூர்த்தி,** Raman House, **பழைய எண். 21, குப்பையா செட்டி தெரு, மேற்கு மாம்பலம், சென்னை – 33.**

## எமக்கு வந்த சில வாசகர்களின் கடிதங்கள்

அனுப்புனர்: Dr. ராஜேஸ்வரி, ஆரிய வைத்திய பார்மஸி, 27/7, M.T.H. ரோடு, வில்லிவாக்கம், (நாதமுனி தியேட்டர் எதிரில்) போன்: 2617 1318, 2654 7719

வணக்கம். கடந்த மூன்று மாதங்களாக உங்கள் புத்தக ஆலோசனைப்படி, மலர் மருந்துகளை எனது நோயாளிகளுக்கு கொடுத்து வியக்கத்தக்க மாற்றங்களையும், நோய் குணமடைந்ததையும் கண்டேன். தங்களுக்கு நன்றி சொல்லும் விதத்தில் இக்கடிதம் எழுதுகிறேன்.

1. எங்கள் கிளினிக் அருகில் Consultant நடத்தி வரும் டாக்டர் T. ஜெய்சிங் என்பவர் ஆறு மாதங்களாக B.P. மற்றும் டயாபடீஸ் நோயால் அவதிப்பட்டு வந்தார். அவரிடம் விபரம் கேட்ட போது, வண்டி ஆக்ஸிடெண்ட் நடந்ததாகவும் அதன் பிறகுதான் இரண்டு வியாதியும் தன்னை பிடித்ததாக கூறினார்.

   White Chestnut கொடுத்தேன். உடனே 'இது போதுமா'? என்றார். அடுத்து Gorse கொடுத்தேன். 10 நாட்கள் கழித்து BP Check செய்யும் போது இதுவரை Normal வராமல் இருந்த BP நார்மல் ஆனது. Sugar குறைந்தது.

2. பக்கத்து அபார்ட்மெண்டில் வீட்டிலேயே ஜோசியம் பார்த்து சம்பாதித்து வருபவரை பார்த்து மற்றவர்கள் பொறாமைப்பட்டு அவரை காலி செய்ய வேண்டும் என துன்புறுத்தினர். Holy & Vine தண்ணீர் தொட்டியில் போடச் சொல்லி கொடுத்த பின் பிரச்சினை தீர்ந்தது.

3. நானும், என் கணவரும் குருவாயூர் சென்று வரும் போது திருச்சூரில் Boarding Point - 8.30 மணிக்கு Reserve செய்து இருந்தோம். தரிசனம் முடித்து விட்டு குருவாயூரில் இருந்து கிளம்பும் போது மணி 7.00 p.m. திருச்சூர் செல்ல 1.15 மணி நேரம் தேவை. எப்படி Train பிடிக்க போகிறோம் என்று நினைத்து கார்ஸ், சிக்கரி இரண்டு பேரும் சாப்பிட்டோம். திருச்சூர் வந்து பார்த்தால் Train Late-எனவும் 10.00 மணிக்கு தான் வரும் என போர்டு வைத்திருந்தனர்.

4. Chicken Pox (அம்மை) போட்டிருந்த பெண்ணின் தந்தை பெண்ணிற்கு ஏதாவது மருந்து கொடுங்கள், கஷ்டப்படுகிறாள் என்றார். நான் அந்த பெண்ணை தொலைபேசியில் பேசச் சொன்னேன். டாக்டர் எனக்கு ஒவ்வொரு இடமாக வந்து கொண்டே இருக்கிறது, அரிப்பு இல்லை, எரிச்சல் உள்ளது. Pin வைத்து குத்துவது போல் குத்து வலி உள்ளது என்றாள். *Crab Apple* கொடுத்தேன். சரியானது.

5. ஒருவர் நல்ல பணியில் ICF-ல் வேலை பார்ப்பவர். இவருக்கு குடிப்பழக்கமும் உண்டு. தொடர் சிகரெட் பிடிப்பவர். இதனால் உடல் இளைத்து, முடியாமல் இருந்தார். அவரது மனைவி என்னிடம் வந்து எப்படியாவது எனது கணவர் உடல் நலமாக வேண்டும். அவர் கெட்ட பழக்கங்களை நிறுத்த வேண்டுமென்றார். நோயாளியை நேரில் பார்த்து பேச வேண்டுமென கூறி அழைத்து வரச் சொன்னேன். பார்ப்பதற்கு இவரா எனத் தோன்றியது. மிகவும் நல்ல மனிதராக தோற்றமளித்தார். நான் "என்ன செய்கிறது? ஏன் குடிக்கிறீர்கள்" என கேட்ட போது "பழக்கமாகி விட்டது" என்றார். வால்நட் (Walnut) 1 மாதத்திற்கு கொடுத்தனுப்பினேன். இப்போது நன்றாக இருக்கிறார். கெட்ட பழக்கங்கள் போயின.

அனுப்புனர்: Dr. M.S. நவாப்ஜான், 21-A, நாகப்பன் மெயின் ரோடு, லைன் மேடு, சேலம் - 636 006.

மதிப்பிற்குரிய டாக்டர் கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கு,

நான் கடந்த பத்து வருடங்களாக சித்தா, யுனானி மற்றும் ஓமியோ பிராக்டீஸ் செய்து வருகிறேன். மலர் மருத்துவம் பற்றியும் முன்பே அறிந்திருக்கிறேன். ஆனால் அதில் போதிய அனுபவமில்லை. இப்படியிருக்க என் நண்பர் மூலமாக உங்களுடைய மலர் மருத்துவம் புத்தகம் பார்க்க நேர்ந்தது. தாங்கள் மலர் மருத்துவம் பற்றி கூறியிருந்த கருத்துகள் மிகவும் பிடித்திருந்தால் M.O. மூலம் உங்களுக்கு பணம் அனுப்பி எட்டு பாகங்களும் பெற்று படித்துப் பார்த்தேன்.

இதனை பரீட்சித்து பார்க்கும் நோக்கில் என்னிடம் வரும் நோயாளிகள் அனைவருக்கும் கொடுத்துப் பார்த்தேன். ஓரளவு திருப்தி ஏற்பட்டது. இப்படியிருக்க, நான் வசிக்கும் பகுதியில் தண்ணீர் பிரச்சினை அதிகமாக இருந்தது. பிரச்சினை தீர மலர் மருத்துவத்தில் வழி இருப்பதாக தாங்கள் எழுதியிருந்ததை பார்த்து Rock Rose, Gentian ஆகிய மருந்துகளை நானும் சாப்பிட்டேன். அருகில் இருப்பவர்களிடமும் சாப்பிட கொடுத்தேன். நான் மருந்து சாப்பிட்ட மறு தினம் (1-5-2003) விடிந்து நான் எழுந்து என் வீட்டிற்கு முன் வெளியே வருவதற்கு முன் அந்த பகுதியிலுள்ள முக்கிய நபர்கள் சிலர் வீட்டின் முன் நின்று கொண்டு பொது தண்ணீர் பைப் போடுவதற்கான பேச்சுகளில் ஈடுபட்டுக் கொண்டிருந்தனர்.

நான் எழுந்து வெளியே வந்தவுடன் என் வீட்டின் அருகில் பொது தண்ணீர் குழாயை அமைக்க யோசித்துக் கொண்டிருப்பதாக கூறினார்கள். தொடர்ந்து மேற்சொன்ன Gentian மற்றும் Rock Rose -ஐ சாப்பிட்டு வர, ஒரே வாரத்தில் அதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டு 10-5-2003லிருந்து

இருபத்தி நான்கு மணி நேரமும் தண்ணீர் வருகிறது. நான் மட்டுமல்லாமல் அந்த பகுதி வாழ் மக்களும் மிகுந்த பயனடைந்துள்ளோம்.

மலர் மருந்துகளின் செயல் அதிசயமாக உள்ளது. நடைமுறையில் மலர் மருந்துகளின் தன்மை உண்மையாக உள்ளது.

அனுப்புனர்: A. ஜானகிராமன் பழைய கேசாவரம் சகாயத்தோட்டம் - 631 151.

டாக்டர் ஐயா அவர்களுக்கு வணக்கம். வாட்டர் வயலட் மலர் மருந்துக்கு நன்றி. பெண்ணுடைய தாய் கழனியில் களை எடுப்பவள். அவளுக்கு தினக்கூலி 25 ரூபாய். அவள் பெண்ணுக்கு இரண்டு வருடமாக மாப்பிள்ளை தேடி வந்தாள். அவளுக்கு ஸ்வீட்செஸ்நட், மற்றும் வாட்டர் வயலட் மலர் மருந்து கொடுத்து வந்தேன். வெள்ளிக்கிழமை வீடு கழுவுவார்கள். அன்று தினம் அவர்கள் வீட்டில் 10 மாத்திரைகள் வாட்டர் வயலட் போட்டு விட்டேன். 3 தினங்கள் கழிந்து உங்கள் பெண் தான் வேண்டும் என மாப்பிள்ளையின் அப்பா வந்தார். நகை 4 சவரன் கேட்டு முடிந்தது. மாப்பிள்ளைக்கு 2 ஏக்கர் நிலம் 1 பம்பு செட் உள்ளது. இவர்கள் தகுதிக்கு மீறிய செயல். அந்த ஊரில் உள்ள அனைவருக்கும் பொருமை. இது ஸ்வீட்செஸ்நட், வாட்டர் வயலட் அதிசயம்?

2. பெயர் : *சீதாராமன்*, வயது 15. அவன் எப்பொழுது பார்த்தாலும் மூக்கை மேலே உறிஞ்சிக் கொண்டு இருபான். அவன் தாய், பாட்டி சொல்வார்கள். "அவன் தாத்தா அப்படி செய்வார் அதே போல் அவனும் செய்கிறான்", (மூக்கு சளி) இதற்கு ஒயிட்செஸ்நட், வால்நட், சில வேளை மருந்து கொடுத்தேன். அது இருந்த இடம் தெரியவில்லை.

3. ட்ராக்டர் ஓட்டுநர். அவருக்கு நான்கு குழந்தைகள், மனைவி ஒரு கூரை வீடு. ஒரு நாள் காற்று மழை. அதில் அந்த வீடு இருந்த இடம் தெரியாமல் போய் விட்டது. இவர் ஒரு வைன் மலர் மருந்து நபர், இவருக்கு வைன் என்ற மலர் மருந்து கொடுத்து பிறகு வாட்டர் வயலட் கொடுத்ததன் பேரில் ஒரே மாதத்தில், ஓடு போட்ட ஒரு வீடு ஒன்று 50,000 (ரூபாய்), மோட்டார் சைக்கிள் வாங்கினார்.

4. குடிகாரன். நான் "ஏன் குடிக்கிறீங்க?" என்று கேட்டேன். அவன் கூறினான். "நான் காலையில் வயலுக்கு செல்லும் வழியில் நண்பர்கள் குடித்துக் கொண்டிருப்பார்கள். அதை பார்த்தவுடன் நானும் குடித்து விடுவேன் என்றார். இதற்கு, *செர்ரி ப்ளம்* என்ற" மலர் மருந்து கொடுத்தேன். அவர் குடியை நிறுத்தி விட்டார்.

அனுப்புனர்: N. ரவிச்சந்திரன் 4/454-c, சரஸ்வதி இல்லம் R.T.O. (Old) ஆபீஸ் பின்புறம் (C.T.C) எதிரில் மேட்டு பாளையம் - 641 301.

அன்புடைய என் ஆசான் Dr. கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கு வணக்கம் கலந்த அன்புடன் தங்களிடம் அக்குபிரஷர் பயின்ற மாணவன் N. ரவி கோபால், மேட்டுபாளையம் எழுதுவது. நான் நலமாக தங்களின் ஆசீர்வாதத்தால் உள்ளேன். அதுபோல் தாங்களும் தங்கள் குடும்பமும் என்னை போன்றவரின் வாழ்க்கை மேம்படவும், நோயுற்ற மனிதர்கள் நலம் பெறவும் வேண்டி இறைவன் கண்டிப்பாக நலம் பெற வைப்பார் என நம்புகிறேன்.

மல்லிகைப்பூ பாராட்டு வேண்டி மணம் வீசுவதில்லை. ஆனால் அதை பாராட்டாத மனிதர்களே இல்லை.

இங்கிருந்து தங்களுக்கு Cancer மருந்து வாங்க வேண்டி Phone செய்த போதும் சரி, அங்கு Acupressure வந்து சேரும் போதும் சரி எனக்கு தங்களைப் பற்றி மனதிற்குள் பல சந்தேகங்கள் இருந்தது.

என் நண்பர் திரு. Dr. Jaffar Sadiq கூட "அவரிடம் நாம் Acupressure சேர்கிறோம் என்று சொல்லியுள்ளோம். ஆனால் அவர் எந்த ஒரு letter-ம்" போடவில்லையே. எப்படி Class நடத்துவார். ஏமாற்றுக்காரரோ என்று கூறினார்.

நானும் அங்கு வந்து உங்கள் விலாசம் தேடிய போதும் வீட்டின் முன்னால் எந்த Add-ம் இல்லை. எனவே பயத்துடனே Class-க்கு பணம் கட்டினேன் - (ரூபாய் 3,800.00)

இதெல்லாம் பணம் கட்டிய வரை தான். நீங்கள் Class எடுக்க ஆரம்பித்ததும் எல்லாமே தூள் தூளாக போய் விட்டது. ஏனென்றால் இதுவரை பல Class-க்கு போயுள்ளேன். எல்லாரும் Time-யை இழுக்க Jokes, கதை போன்றவை சொல்லி main subject கொஞ்சம் தான் வைத்திருப்பார்கள். ஆனால் உங்கள் class-ல் இவை கொஞ்சம் கூட இல்லை. அங்கு நண்பர் சொன்னது போல் அருவி போல் கொட்டினீர்கள். அதன் பயன் இங்கு இதுவரை 25-க்கு மேற்பட்ட நோயாளிகள் குணமடைந்து விட்டார்கள். Puttur Point - தாங்கள் எனக்கு தந்த வரப்பிரசாதம். இங்கு நானும் நண்பர் Jaffar-ம் பல இலவச Campகளை நடத்தி வருகிறோம். அதில் இதுவரை Puncture- Area மட்டுமே செய்து போதிய மனநிறைவு இன்றி இருந்தோம். ஆனால் Pressure அறிந்த பிறகு தான் புதிய நம்பிக்கை வந்தது. "ஆசிரியரின் பாதங்களுக்கு என் கோடி நமஸ்காரங்கள்". மேலும் தங்களிடம் வாங்கிய Cancer மருந்து நேற்றுதான் Patient-க்கு கொடுத்துள்ளேன். அன்று Rs. 3800.00 என்று Cancer மருந்து எண்ணிய என்னை தடாலடியாக Rs. 1900.00 கேட்டு ஒரு அதிர்ச்சியை தந்து விட்டீர்கள். இது எனக்கு Boost தந்தது போல்

